கழக வெளியீடு—௧௮௬

<u>பதினெண் கீழ்க்கணக்கு</u>

# கடுகங் கடிகை மாமூலம்

## பதவுரை விளக்கவுரைகளுடன்

திரிகடுகம்

நான்மணிக் கடிகை

சிறுபஞ்ச மூலம்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி, & சென்னை.

தாது—புரட்டாசி

# முன்னுரை

சங்ககாலத்து நல்லிசைப் புலவர்களாற் பாடப்பெற்ற நூல்கள் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என வகுக்கப் பெற்றுள்ளன. கீழ்க்கணக்கு நாலடியார், திருக்குறள் முதலிய பதினெட்டு நூல்களாம். அவற்றுள் இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது ஆகிய நான்கு நூல்களையும் பதவுரை விளக்கவுரைகளுடன் "நானாற்பது" என்ற தலைப்பில் ஒன்றாய்க் கட்டடஞ் செய்து வெளியிட்டிருக்கின்றோம். அதன்பின் ஐந்திணையைம்பது, ஐந்திணையெழுபது, திணைமாலை நூற்றைம்பது, திணைமொழியைம்பது என்ற நான்கு நூல்களையும் பதவுரை, பழைய பொழிப்புரை, விளக்கவுரைகளுடன் "நாலைந்திணை" என்ற தலைப்பில் ஒன்றாய்க் கட்டடஞ் செய்து வெளியிட்டுள்ளோம்.

இப்போது ஒவ்வொரு பாட்டிலும் மும்மூன்று பொருள்களை உணர்த்துவதாகிய "திரிகடுகத்தையும், நந்நான்கு பொருள்களை உணர்த்துவதாகிய நான்மணிக் கடிகையையும், ஐந்தைந்து பொருள்களை உணர்த்துவதாகிய சிறுபஞ்சமூலத்தையும் பதவுரை விளக்கவுரைகளுடன் ஒருசேரக் கட்டடஞ் செய்து இந்நூலாக வெளியிடுகின்றோம்.

இனி, பதினெண்கீழ்க் கணக்கிலுள்ள எஞ்சிய நூல்களையும் முறையே நான்கு பகுதிகளாய்க் கட்டடஞ் செய்து வெளியிடத் தீர்மானித்திருக்கின்றோம்.

இங்ஙனம்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

கழக வெளியீடு—கஅக.

# நல்லாதனார்

இயற்றிய

# திரிகடுகம்



பாளையங்கோட்டை அர்ச். சவேரியர் கல்லூரித்
தலைமைத் தமிழாசிரியர்
**வித்வான். பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்**

எழுதிய

விருத்தி யுரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை

யுவ-தை

உ

குமரகுருபரன் துணை.

# முகவுரை

தமிழ் மொழியாந் தாய்மொழி பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தோற்றமுற் றிலங்கும் உயர்தனிச் செம்மொழி. இதனைச் சங்கம் நிறீஇ வளர்த்துக் காத்த பெருமை பழம்பதியாகிய பாண்டி நாட்டரசராம் பாண்டியர்க்கே யுரியது. இங்ஙனம் பாண்டியர் நிறீஇய சங்கம் முதல், இடை, கடை என மூன்றாகும். இவற்றில் மதுரையி லிருந்த கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்; சிறுமேதாவியார், சேந்தம் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந் திருமாறன், மதுரையாசிரியர், நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலானவர். அவருளிட்டுப் பலர் பாடினர். அவர்கள் பாடியன கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையும், பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும், பதினெண் கீழ்க்கணக்கும் என் றித்தொடக்கத்தன. இவற்றுள், பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மேற்கணக்கைச் சார்ந்தவை.

"அடிநிமிர்பில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட உரைப்பது கீழ்க்கணக் காகும்."

என்ற பன்னிரு பாட்டியற் சூத்திர மேற்கோளுக் கிணங்கக் குறைந்த அடிகளையுடைய செய்யுட்களால் அறம் பொருள் இன்பம் இவற்றைத் தழுவி யமைந்த நூல் கீழ்க்கணக்காகும். கணக்கு = நூல். கீழ்க்கணக்குச் சிறுபான்மை ஐம்பதிற் குறைந்தும், ஐந்நூற்றின் மிக்கும் வரும். இனியது, இன்னா, கார், களவழி நான்கும் ஐம்பதிற் குறைந்து வந்தன. முப்பாலாகிய திருக்குறள் ஐந்நூற்றின் மிக்கு வந்தது. இக்கீழ்க்கணக்கு நூல்களையே நாயபனுவல் என்றும் பெயராற் கூறுவர் எனவும், இவை அறம் பொருளின்பம்

என்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுவ எனவும், வேறிடை யிடை அவையன்றியுந் தாஅய்ச் செல்வது முண்டெனவும், இச் செய்யுட்கள் அடி நிமிராது இரண்டடி முதல் ஆறடி யிறுதியாக வருவன எனவும், அவை பல எழுத்தினான் அகன்று காட்டாது சில எழுத்தினான் வருவன எனவும், அவை எண்ணுச் சுருங்கிச் சிலவாக வருவன எனவும், "வனப்பியல்தானே வகுக்குங் காலைச், சின்மென் மொழியாற் றாய பனுவலோ, டம்மைதானே அடிநிமிர் பின்றே," என்ற தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் உ௩௫-ஆம் சூத்திரத்துப் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் உரைத்தவாற் றான் உணர்ந்துகொள்க.

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களாவன:—

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

என்ற பழம்பாட்டிற் கண்டாங்கு (1) சமணமுனிவர்கள் இயற்றிய நாலடியார், (2) விளம்பிநாகனார் இயற்றிய நான்மணிக்கடிகை, (3) பூதஞ்சேந்தனார் இயற்றிய இனியவை நாற்பது, (4) கபிலர் பாடிய இன்னா நாற்பது, (5) மதுரைக் கண்ணங்கூத்தனார் இயற்றிய கார் நாற்பது, (6) பொய்கையார் பாடிய களவழி நாற்பது, (7) மாறன்பொறையனார் இயற்றிய ஐந்திணை ஐம்பது, (8) கண்ணஞ்சேந்தனார் பாடிய திணைமொழி ஐம்பது, (9) மூவாதியார் இயற்றிய ஐந்திணை எழுபது, (10) கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது, (11) திருவள்ளுவனாரியற்றிய திருக்குறள், (12) நல்லாதனார் இயற்றிய திரிகடுகம், (13) பெருவாயின்முள்ளியார் பாடிய ஆசாரக்கோவை, (14) முன்றுறையரையனார் பாடிய பழமொழி, (15) காரியாசான் பாடிய சிறுபஞ்சமூலம், (16) மாறோகத்து முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார் இயற்றிய கைந்நிலை, (17) கூடலூர்க்கிழார் இயற்றிய முதுமொழிக் காஞ்சி (18) கணிமேதாவியார் இயற்றிய ஏலாதி என்பன.

இவ்வெண்பாப் பழம்பிரதிகளுள் "இன்னிலைய காஞ்சியுடனேலாதி என்பவே, நன்னிலைய தாகுங் கணக்கு" "ஐந்தொகை மூப்பால்" "நன்னிலையவாங் கீழ்க்கணக்கு" எனச் சிறிது சிறிது வேறுபட்டுக் காணப்படுதலின், சிலர் இன்னிலை யென்று பொய்கையார் பாடிய 45 வெண்பாக்க ளடங்கிய நூலை மேற்குறித்த கைந்நிலைக்குப் பதிலாகக் கூறுவர். கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டு இவை என்று இன்னும் வரையறுக்கப்படாமை வியப்பே.

> "கண்ணகன் ஞாலம் அளந்ததூஉம், காமருசீர்த்
> தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்—நண்ணிய
> மாயச் சகடம் உதைத்ததூஉம், இம்மூன்றும்
> பூவைப்பூ வண்ணன் அடி."

என்ற திரிகடுக வழிபடு கடவுள் வணக்கச் செய்யுளான், இந்நூலாசிரியராகிய நல்லாதனார் வைணவர் என்பது பெறப்படும். "அருந்ததிக் கற்பினார் தோளும்.........நட்பும் இம்மூன்றும், திரிகடுகம் போலும் மருந்து." எனக் கூறப்பட்டதிலுள்ள திரிகடுகம் என்னுஞ் சொல்லே சிறப்புப்பற்றி இந்நூலுக்குச் சிறப்புப் பெயராகக் கொள்ளப்பட்டது; உவமையாகு பெயர்.

திரிகடுகம் ; சுக்குத் திப்பிலி மிளகு என்பது, பிங்கல நிகண்டு சூத்திரம் ௩௰௨-ஆல் விளங்கும். சுக்கு முதலிய மூன்றினாகிய கடுகம் மருந்து உடல் நோயை மாற்றி இன்பம் புரிவதுபோல் ஒவ்வொரு பாட்டின் அமைந்த மும்மூன்று பொருளும் உளநோயாகிய அறியாமை முதலியவற்றைப் போக்கி இன்பஞ் செய்வன என்க. இந்நூல் காப்புச் செய்யுளுள்பட 101 வெண்பாக்களைக் கொண்டது. கடைச்சங்க காலத் தொகைநூல்களிலொன்றாகக் கருதப்படுதலின், இந்நூல் இற்றைக்கு 1800 ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்டதென்பது பெறப்படும்.

இந்நூற்குச் சிலபல வுரைகள் நாளிதுவரை வெளிவந்துள்ளன. சில பொழிப்புரையுடனும், சில பொழிப்புரை கருத்துரையுடனும், சில பதவுரை முதலிய சில குறிப்புகளுடனும் விளங்கு

கின்றன. இவற்றினுரைகளிற் கண்ட நயங்களைக் கொண்டும், காணாது நிற்கும் உரைக்குறிப்பு, இலக்கணக்குறிப்பு இவற்றைச் சேர்த்தும் விருத்தியுரை யொன்றை எழுதித் தரல்வேண்டு மென்பதாகத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சர் திரு. வ. திருவரங்கம் பிள்ளையவர்கள் கேட்டுக் கொண்டதற் கிணங்க, இவ்விருத்தியுரை எம்மால் எழுதப் பெறுவதாயிற்று. செய்யுள் மூலங்களிற் சில பாட பேதங்கள் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன. அருஞ்சொற் பொருளகராதியும், செய்யுள் முதற் குறிப்பகராதியும் படிப்பவர்க்கு உதவியாகச் சேர்க்கப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இந்நூல் அச்சிடப்படுங்காலத்து ஒப்பு நோக்கித் திருத்தம் புரிந்துதவிய சென்னை அரசினர் மகமதிய உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியர் திரு. அ. நடராச பிள்ளையவர் கட்கு எம் உளமார்ந்த நன்றி உரியதாம்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் விருத்தியுரை வேண்டப் பெறும் நூல்கட்கும் தக்க உரை இயற்றியுதவ விழையும் எம்முள்ளப் பாங்குணர்ந்து, அங்ஙனமே செய்து தரக் கேட்டிருக்கும் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு எந்நன்றி யென்றும் உரித்தாகின்றது.

இம்முயற்சி யினிது நிறைவேறத் தோன்றாத்துணையாய் நிற்கும் இறைவன் திருவருளை என்றும் நினைந்து வழுத்துகின்றோம்.

தமிழ் நூற்பயிற்சி பெறும் யாவர்க்கும் இவ்வுரை மிகவும் பயன் படுமாதலின், தமிழகத்தார் இத்தகைய நூல்களை வாங்கிப் பதிப்பாளர்க்கு ஊக்கமளிக்க வேண்டுகின்றோம்.

இங்ஙனம்,

"புலவரகம்"
பாளையங்கோட்டை
27—1—36.

பு. சி. புன்னைவனநாதன்,
தமிழாசிரியர்.

# திரிகடுகம்

## மூலமும் விருத்தியுரையும்.

---

### காப்பு.

*கண்ணகன் ஞால மளந்ததூஉங் காமருசீர்த்*
*தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉ—நண்ணிய*
*மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்*
*பூவைப்பூ வண்ண னடி.*

(இதன் பொருள்) கண் அகல் - இடம் அகன்ற, ஞாலம் - பூமியை, அளந்ததூஉம் - அளந்ததும், காமரு - விரும்பப்பட்ட, சீர் - சிறப்பையுடைய, தண் - குளிர்ச்சியும், நறும் - மணமும் (பொருந்திய), பூ குருந்தம் - மலர்களையுடைய குருந்த மரத்தை, சாய்த்ததூஉம் - முறித்ததும், நண்ணிய - கிட்டி வந்த, மாயச் சகடம் - வஞ்சகமான வண்டியை, உதைத்ததூஉம் - உதைத்ததும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும் (செய்தவை), பூவை - காயாம்பூவைப் போலும், வண்ணன் - நிறத்தினையுடைய திருமாலின், அடி - திருவடிகளாம்; என்றவாறு.

எடுத்துக்கொண்ட நூல் இனிது முற்றுப்பெறும் பொருட்டு, இச் செய்யுளால் கடவுள் வணக்கம் செய்யப்பட்டது. கடவுள் வணக்கம் எடுப்படைக்கடவுள் வணக்கம், வழிபடு கடவுள் வணக்கம் என்றிருவகைப்படும். இது வழிபடுகடவுள் வணக்கம். இங்குக் குறித்த கடவுளே காத்தற் கடவுளாகவும் இருக்கின்றார். காப்புச் செய்யுளில் காக்கும்படி சிறப்பாக வேண்டப்படுபவர் திருமாலும் பிள்ளையாரும் ஆவர். இக்கடவுள் வாழ்த்துப் படர்க்கையிற் கூறப் பட்டுள்ளது.

(க்ருத்துரை) எவ்வுலகத்தாரும் உய்யும்படி உலகளந்ததும், தமக்கும் தம்மவருக்கும் இடர் செய்யத் துணிந்த தீயர்களை அழித்தல் செய்ததும் ஆகிய அத் திருவடியைத் துதிக்க இந் நூலுக்கு நேரிடும் இடையூறுகள் நீங்கும்.

திரிகடுகம் என்னும் இந் நூலிற் செய்யுள்கள்தோறும் மும்மூன்று பொருளைச் சேர்த்துச் சொல்வது தோன்ற இக் காப்புச் செய்யுளினும் திருமாலின் திருவடிகள் செய்த மூன்று செயல்களைச் சேர்த்துக் கூறினர்.

ஞாலம் அளந்த கதை :—விரோசனன் மகனாகிய பலிச்சக்கரவர்த்தி என்பவன் பெருவலி படைத்தவன். மேல் நடு கீழ் என்னும் மூன்று உலகங்களையும் வென்றவன். இவன் வெற்றியிற் பொறாமையுற்ற இந்திரன் வேண்டுகோட்கிசைந்த திருமால் ஒரு குறுகிய பிரமசாரி வடிவில் வந்து தம்மடியால் மூவடி மண் வேண்டினர். அசுர குருவாகிய சுக்கிரன் வந்தவர் மாயத் திருமால் என்று கூறித் தடுத்தும் மாவலி தத்தஞ் செய்து கொடுத்தனன். கொடுத்த மண்ணைத் திருமால் அளக்கக் கருதி நெடு வடிவங்கொண்டு மேல் இடை கீழ் ஆகிய மூன்று உலகங்களையும் அளந்தனர் என்பது. இது, "மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால் ஞாலம் முழுதும் நயந் தளந்தான்" என்ற திருவள்ளுவமாலைச் செய்யுளடியாலும் தெளியப்படும்.

குருந்தஞ் சாய்த்தது :—கிருட்டின அவதாரத்தில் கம்சனாகிய தம் மாமனால் ஏவப்பட்ட ஓர் அசுரன் யமுனை ஆற்றங்கரையில் குருந்த மரத்தில் தங்கிக் கண்ணனுக்குத் தீங்கு வருவிக்கப் பார்த்திருந்தான். அம்மாயம் உணர்ந்த கண்ணன் இடைப்பெண்களோடு விளையாடுகின்ற முறையில் தம் திருவடிகளால் அம் மரத்தை முறித்துத் தள்ளிவிட்டார் என்பது.

சகடம் உதைத்தது :—கண்ணன் நந்தர் கோபர் மனையில் குழந்தையாய்த் தொட்டிலிற் படுத்திருக்கையில் கம்சன் ஏவலால் சகட வடிவமாய் வந்த அசுரனைத் தம் காலால் உதைத்து அழித்தார் என்பது.

கண் - ஏழனுருபு, ஈண்டு இடம் என்னும் பொருட்டு. அகல் ஞாலம்-வினைத்தொகை. அளந்ததூஉம், சாய்த்ததூஉம், உதைத்ததூஉம்; இன்னிசை யளபெடை. இவற்றை வினையாலணையும் பெயரென்பார், அளந்த பொருள் சாய்த்த பொருள் உதைத்த பொருள் என்று கூறுவர். காமரு - காமர் என்னும் உரிச்சொல் உகரச் சாரியை பெற்றது; அழகிய என்னும் பொருளது. ஞாலம் - உபலட்சணமாய் வானுலகம் முதலியவற்றையும் காட்டும். வண்ணன் - வண்ணத்தை யுடையவன். வண்ணம் - நிறம். அடி - அடிகள்; சாதி யொருமையாதலால் சாய்த்தது உதைத்தது அளந்தது என்பன ஒருமையாகின்றன. செய்தவை - சொல்லெச்சம். இச் செய்யுளில் அளந்தது என்பதினால் பேரருளும், சாய்த்தது என்பதினால் பேராற்றலும், - உதைத்தது என்பதினால் பேரறிவும் ஆகிய இம் மூன்றும் கடவுட் குணங்களில் குறிக்கப் பெறுவதும் காண்க.

## நூல்.

அருந்ததிக் கற்பினார் தோளுந் திருந்திய
தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியுஞ்- சொல்லி
னரிலகற்றுங் கேள்வியார் நட்புமிம் மூன்றுந்
திரிகடுகம் போலு மருந்து.

(இ-ள்.) அருந்ததி - அருந்ததி போலும், கற்பினார் - கற்பை யுடைய மகளிரது, தோளும் - தோள்களும், திருந்திய-குற்றமற்ற, தொல் - பழமையான, குடியில் - குடிப் பிறப்பில் (தோன்றி,) மாண்டார் - மாட்சிமையடைந்தவரோடு, தொடர்ச்சியும் - கொள்ளும் நட்பும், சொல்லின் - சொற்களினிடத்தே, அரில் - குற்றங்களை, அகற்றும் - நீக்கவல்ல, கேள்வியார் - கேள்வியை யுடையவரோடு, நட்பும் - செய்யப்படும் நட்பும், இ மூன்றும் - இந்த மூன்றும், திரிகடுகம்போலும் - (ஒருவனுக்கு) திரிகடுகம் போன்றுள்ள, மருந்து - மருந்துகளாம்; எ-று.

(க-ரை.) நற்குண நற்செய்கைகளுள்ள பெண்ணை மணஞ் செய்திருப்பது முதலிய மூன்றும் இம்மை மறுமைகளில் நேரிடும்

துன்பங்களைத் தீர்த்து இன்பங் கொடுப்பவாதலால் நோயைப் போக்கி நலத்தைக் கொடுக்கும் சுக்கு திப்பிலி மிளகுகளாகிய மருந்துபோலும் என்பது.

“ திரிகடுகம் சுக்குத் திப்பிலி மிளகு ” - பிங்கல நிகண்டு சூத். ருடுஉ. சுக்கு முதலிய மூன்றும்போல் தோள் முதலிய மூன்றும் இல்வாழ்வானொருவனுக்குத் துன்பம் அகற்றி இன்பம் விளைத்தலால், அவை உவமைகளாயின. இம்முதற்பாட்டிற் கூறப்பட்ட, ‘திரிகடுகம்’ என்ற சொல்லே சிறப்பு நோக்கி இந்நூலுக்குப் பெயராகக் கொள்ளப்பட்டது ; உவமையாகு பெயர்.

அருந்ததி - எழு முனிவருள் ஒருவராகிய வசிட்டர் மனைவி. கற்புடையார் பலரினும் இவர்க்கு உயர்வு எங்ஙனம் என்னில், விண் மீன் நிலையிலும், எழுமுனி வட்டம் என்ற நாட்கூட்டம் முன்பக்கம் அடியில் இருக்கும் மூன்று விண்மீன்களில் நடுவிலிருப்பதான வசிட்ட மீனொடு துணையாய் மின்னுவது. மாண்டார் - சிறந்தார், மாண் - முதனிலை, உரிச்சொல். அரில் - ஐயந்திரிபுகள். சொல்லின் அரில் அகற்றுங் கேள்வியார் என்ற தொடரி லுள்ள பொருளோடு ‘நுணங்கிய கேள்விய ரல்லார்’ என்ற குறளின் கருத்தை ஒப்பு நோக்குக. (4)

தன்குணங் குன்றாத் தகைமையுந் தாவில்சீ
ரின்குணத்தா ரேவின செய்தலும்—நன்குணர்வி
னான்மறை யாளர் வழிச்செலவு மிம்மூன்று
மேன்முறை யாளர் தொழில்.

(இ-ள்.) தன் குணம் - தனது (குடிப்பிறப்பின்) குணம், குன்றா - குன்றுமைக்கு (ஏதுவாகிய), தகைமையும் - ஒழுக்கமும், தா இல் - அழிதல் இல்லாத, சீர் - பெரும் புகழையுடைய, இன் குணத்தார் - இனிய குணத்தையுடையோர், ஏவின - ஏவிய தொழில்களை, செய்தலும் - செய்தலும், நன்கு - நன்றாக, உணர்வு - (அறியும்) அறிவையுடைய, நான்மறையாளர் - நான்கு வகைப்பட்ட வேதங்களை ஓதிய வேதியர், வழி - (கூறிய வழியில்,)

செலவும் - நடத்தலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், மேல் முறையாளர் - மேன்மையாகிய ஒழுக்கத்தை ஆளுதல் உடையாரது, தொழில் - தொழில்களாம் ; எ-று.

(க-ரை.) தன்குலச் சிறப்புக் கெடாத வண்ணம் ஒழுகுதலும், குணஞ்சான்றவர்க்கு ஆவன செய்தலும், நான்மறையாளர் சொல் லும் வழி நிற்றலும் மேலோர் செய்கை.

குன்று - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தகைமை - பெருமையுமாம். தாவில் என்பதைத் தாவு + இல் என்றும் பிரிக்க லாம். இங்கு தா என்னும் முதல் நிலையே உகரச்சாரியை பெற்றுத் தாவு என்றாயிற்று. தா + இல் என்னுமிடத்துத் தா - முதனிலைத் தொழிற் பெயர். நான்மறை - நான்குமறை; நான்கு கூறுமாய் மறைந்த பொருள்களுமுடைமையால் நான்மறை என்றார். அவை பௌடிகமும், தைத்திரியமும், சாமவேதமும், தலவகாரமும் ஆம். இவற்றை இக்காலத்தவர், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பர். (உ)

கல்லார்க் கினனா யொழுகலுங் காழ் கொண்ட
வில்லாளைக் கோலாற் புடைத்தலு—மில்லஞ்
சிறியாரைக் கொண்டு புகலுமிம் மூன்று
மறியாமை யான்வருங் கேடு.

(இ-ள்.) கல்லார்க்கு - கற்றறியாதவர்க்கு, இனன் ஆய் - உற வினனாகி, ஒழுகலும் - நடத்தலும், காழ் கொண்ட - மனவுறுதி கொண்ட, இல்லாளை - மனைவியை, கோலால் புடைத்தலும் - கோலினால் அடித்தலும், இல்லம் - தம் வீட்டுள், சிறியாரை - சிற் றறிவினரை, கொண்டு - உடன் கொண்டு, புகலும் - புகுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்று செயல்களும், அறியாமையான் - தம் அறியாமையினாலே, வரும் கேடு - விளைகின்ற கேடுகளாம் ; எ-று.

(க-ரை.) மூடரோடு சேர்ந்திருப்பதும், கற்புடை மனைவியை அடித்தலும், புல்லிய அறிவினரை வீட்டுள் அழைத்துச் செல்லுத லும் கேட்டைத் தருவன.

இல்லாள் - மனைவி, இல்லறத்துக்கு உரியவள் என்பது பொருள். காழ் - உறுதி, ஈண்டு மனத்திண்மை, கற்பு. கேடு - ஆகுபெயர், கேட்டைத் தருவது என்று பொருள் தருமாதலால். (௫)

பகைமுன்னர் வாழ்க்கை செயலுந் தொகைநின்ற
பெற்றத்துட் கோலின்றிச் சேறலு—முற்றனைக்
காய்வானைக் கைவாங்கிக் கோடலு மிம்மூன்றுஞ்
சாவ வுறுவான் றொழில்.

(இ-ள்.) பகைமுன்னர் - தன் பகைவர் முன்னே, வாழ்க்கை செயலும் - செல்வத்துடன் வாழ்தலைச் செய்தலும், தொகை நின்ற - தொகுதியாக நின்ற, பெற்றத்துள் - மாடுகளின் நடுவே, கோல் இன்றி - கோல் இல்லாமல், சேறலும் - செல்லுதலும், முன் - முன்னே (நின்று), தன்னைக் காய்வானை - தன்னை வருத்துமவனை, கை வாங்கி - முன்விட்டு நீங்கி, கோடலும் - பின் அவனை நட்புக் கொள்ளுதலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்று செயல்களும், சாவ உறுவான் - சாகவேண்டியவனுடைய, தொழில் - செய்கைகளாம்; எ-று.

(க-ரை.) பகைவர்களுக்கு எதிரில் செல்வங் காட்டினால் அவர்கள் அதற்குக் கேடு செய்ய முற்படுவார்கள். கோலில்லாது மாட்டு மந்தையிற் போனால் ஏதாவது ஒரு மாடு முட்டும். பகைவரோடு நட்புப் பாராட்டினால் கெடுதி உண்டாகும்.

பகை - பகைத்தல், முதனிலைத் தொழிற்பெயர், இங்கு ஆகு பெயராய்ப் பகைவரை யுணர்த்தியது. பண்பாகு பெயரென்றுமாம். பகைமுன்னர் - பகைக்கு முன்னர், நான்காம் வேற்றுமைத் தொகை. பெற்றம் - பசுவுக்கும் எருதுக்கும் பொது, தென்பாண்டி நாட்டுத் திசைச்சொல். சேறல், கோடல் - தல் ஈற்றுத் தொழிற் பெயர்கள். செல், கொள் என்பன முதனிலைகள். கைவாங்கல் - ஒரு சொல்லின் தன்மையில், கைவாங்கு - பகுதி. சாவவுறுவான் - இறக்கும்படி துன்பம் அடைவான். உறுதல் - அடைதற்குரிய வினை. (௬)

வழங்காத் துறையிழிந்து நீர்ப்போக்கு மொப்ப
விழைவிலாப் பெண்டீர்தோள் சேர்வு—முழந்து
விருந்தினனாய் வேற்றூர் புகலுமிம் மூன்று
மருந்துயரங் காட்டு நெறி.

(இ-ள்.) வழங்கா - யாவரும் இறங்கிப் பாராத, துறை இழிந்து-துறையில் இறங்கி, நீர் போக்கும் - பெரும் நீரில் போதலும், ஒப்ப-தனக்கு ஒப்பாக, விழைவு இல்லா - விருப்பமில்லாத, பெண்டீர் தோள் - வேசையர் தோளை, சேர்வு - சேர்தலும், உழந்து - வருந்தி, விருந்தினனாய் - பிறர்க்கு விருந்தாளியாகி, வேற்றூர் - அயலூரில், புகலும் - புகுதலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், அரும் - (ஒருவனுக்கு) அரிய, துயரம் - துன்பத்தை, காட்டும் நெறி - காட்டும் வழியாம் ; எ-று.

(க-ரை.) ஆறு முதலியவற்றிற் பழகாத துறையில் இறங்கிச் செல்லுதலும், தன்மேற் பற்றில்லாதவளைச் சேர்தலும், வயிற்றை நிரப்பும் பொருட்டு அடுத்த ஊர் செல்லுதலும் இன்பமன்றித் துன்பத்தையே செய்யும்.

வழங்காத் துறை - வழங்காத துறை. வழங்காத - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். போக்கு - போதல், தொழிற்பெயர். ஒப்ப-செயவென் வாய்பாட்டு வினையெச்சம் ; ஒ - பகுதி. விழைவு - தொழிற்பெயர். இல்லா - இல்லாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பெண்டீர்-குலமாதர் அல்லாத வேசையர். பெண்டு + ஈர் - பல்லோர் படர்க்கைப் பெயர். (ரு)

பிறர்தன்னைப் பேணுங்கா னாணலும் பேணார்
திறன்வேறு கூறிற் பொறையு—மறவினையைக்
காராண்மை போல வொழுகலு மிம்மூன்று
மூராண்மை யென்னுஞ் செருக்கு.

(இ-ள்.) பிறர் - மற்றவர், தன்னை பேணுங்கால் - தன்னை விரும்பி மேன்மைப்படுத்துமிடத்து, நாணலும் - நாணுதலும், பேணார் - விரும்பாதவராய், திறன் - தகுதியை, வேறு கூறின்-

வேறுபடச் சொல்லுமிடத்து, பொறையும் - அதனைப் பொறுத்தலும், அறவினையை - உபகாரச் செய்கையை, கார் - மேகம், ஆண்மைபோல் - ஆளுதல் போல, ஒழுகலும் - (ஆளுதல் செய்து) நடத்தலும், இ மூன்றும் - இந்த மூன்றும், ஊர் - (பிறர் மேற்பட்டு) செல்லுகின்ற, ஆண்மை என்னும் - ஆண்மை என்கின்ற, செருக்கு - செல்வங்களாம் ; எ-று.

(க-ரை.) பிறர் ஒருவர் தன்னை உயர்த்திப் பேசும்பொழுது தனக்கு இது தகாது என்று நாணுதலும், தன்னை விரும்பாதவர் தன்னை இகழுமிடத்து வெகுளாமல் பொறுத்தலும், மேகத்தைப் போல் கைம்மாறு கருதாமல் உதவி செய்தலும் சிறந்த செல்வமாகும்.

பேணுதல் - விரும்புதல். நாணுதல் - கூசுதல். பேணார் - முற்றெச்சம் ; பகைவர் என்றலும் ஆம். திறன்-திறம் என்பதின்போலி. ஆண்மை - தொழிற் பெயர். கார் - பண்பாகு பெயர். அறவினை - பண்புத் தொகை. ஊர் ஆண்மை - வினைத்தொகை. செருக்கு - காரியவாகு பெயர்; செல்வ மென்னுங் காரணத்துக் காதலால். (௬)

வாளைமீ னுள்ள றலைப்படலு மாளல்லான்
செல்வக் குடியுட் பிறத்தலும்—பல்லவையு
ளஞ்சுவான் கற்ற வருநூலு மிம்மூன்றுந்
துஞ்சுமன் கண்ட கனா.

(இ-ள்.) வாளைமீன் - வாளை என்னும் மீனை, உள்ளல் - உள்ளான் என்னும் சிறு பறவை, தலைப்படலும் - எடுக்க முயற்சி செய்தலும், ஆள் அல்லான் - ஆளமாட்டாதவன், செல்வ குடியுள் - செல்வமுள்ள குடியில், பிறத்தலும் - பிறந்து அதனை ஆளக் கருது தலும், பல் அவை உள் - கற்றார் பலர் கூடிய சபையில், அஞ்சுவான் - அஞ்சும் இயல்புடையவன், கற்ற - படித்துள்ள, அரு நூலும் - அருமையான நூலுணர்ச்சியும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்று செயல்களும், துஞ்சு - தூங்குகின்ற, ஊமன் - ஊமையான வன், கண்ட கனா - கண்ட கனவைப்போலாம் ; எ-று.

(க-ரை.) எங்ஙனம் வாய்பேசாத ஊமையன் தான் கண்ட கனவைப் பிறர்க்கு எடுத்துரைத்துப் பயன்படுத்தக் கூடாதவனாவனோ, அது போல உள்ளான் வாளை மீனைத் தாக்குதலும், திறமையில்லாதவன் செல்வக்குடியிற் பிறந்து அதனைக் காப்பாற்றுதலும் சபைக்கு அஞ்சுகின்றவன் படித்த படிப்பும், இம்மூன்றும் பயன் படாதவைகள்.

வாளை மீன் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. மீன் உள்ளல் - இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர், மீனுக்கு என நான்காம் வேற்றுமைத் தொகையாகவுங் கொள்ளலாம். வாளைமீன் உள்ளல் தலைப்படல் என்பது ஒருவன் தனக்கு முடித்தற்கரிய போரைச் செய்து வெற்றி பெற முயலுதல் என்னும் பொருளைக் குறிக்கிறதால் பிறிது மொழிதல் என்னும் அணி. ஆள் - ஆள்தல் என்பதில் தல் விகுதி கெட்டுவந்த முதனிலைத் தொழிற் பெயர். பிறத்தல் - ஆகு பெயர். பல்லவை - பல + அவை, பண்புத்தொகை, பல என்பதன் ஈறு கெட்டுப் புணர்ந்தது. அஞ்சுவான் - அஞ்சுகின்றவன், வினையாலணையும் பெயர். அருநூல் - பண்புத் தொகை. நூல் - நூலுணர்ச்சிக்கு, ஆகுபெயர். கனா - கனவு, இதற்கெதிர் மொழி நனா. நனா - நினைவு. கனாத்தகைமையைத் தலைப்படல் முதலிய மூன்றில் ஆரோபித்துக் கூறுதல் உருவக அணி. (எ)

தொல்லவையுட் டோன்றுங் குடிமையுந் தொக்கிருந்த
நல்லவையுண் மேம்பட்ட கல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்ப வட்டார்த்த வென்றியு மிம்மூன்றுந்
தாந்தம்மைக் கூறாப் பொருள்.

(இ-ள்.) தொல் அவையுள் - பழமையை ஆராயவல்லோர் கூடியிருக்கும் சபையிடத்தே, தோன்றும் - தானாக விளங்கித் தோன்றும், குடிமையும் - குடிப்பிறப்பும், தொக்கு இருந்த - பல வகை நூலோரும் கூடியிருந்த, நல்அவையுள் - நல்ல சபையி

னிடத்தே, மேம்பட்ட - மேன்மைப்பட்ட, கல்வியும் - படிப்பும், வெல் சமத்து - வெல்லும் போரிடத்தே, வேந்து - தம் வேந்தன், உவப்ப - மகிழ, அட்டு - பகைவரைக் கொன்று, ஆர்த்த - நிறைத்த, வென்றியும் - வெற்றியும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், தாம் - தாமே, தம்மை - தம்மைக் குறித்து, கூறு - புகழ்ந்து பேச வேண்டாத, பொருள் - பொருள்களாம்; எ-று.

(க-ரை.) பேர்பெற்ற குடிப்பிறப்பு, சிறந்த கல்வி, வெற்றி மிகுந்த வீரம் இவை தாமே பிறர்க்கு விளங்குவன. இவற்றை யுடையவர் தாமே எடுத்துரைத்தல் பேதைமையுடைத்து; ஆதலால் எடுத்துரைத்தலாகாது.

தொல்லவை - தொன்மை + அவை. தொன்மை - பழமை, பண்புப்பெயர். நல்லவை - நன்மை + அவை. குடிமை - குடி - குலம், இஃது ஆகு பெயராய் அதிற் பிறப்பைக் குறிக்கும். தொக்கு - தொகு என்ற பகுதி இரட்டித்து இறந்தகாலங் காட்டியது; வினை யெச்சம். மேம்பட்ட - மேன்மை பட்ட; படுதல் - உண்டாதல். வேந்து - வேந்தன் தன்மை, வேந்தனுக்கு ஆகுபெயர்; கூற்று, அரசு முதலியவைபோல. உவப்ப, அட்டு என்னும் வினையெச்சங் கட்கு முறையே உவ, அடு என்பன முதனிலைகள். ஆர்த்தல் - முழங்குதலுமாம். வென்றி - தொழிற் பெயர். சமம் - போர்; இருவர் எதிர்த்து நிற்றல் என்பது. (அ)

பெருமை யுடையா ரினத்தி னகற
லுரிமையில் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்
விழுமிய வல்ல துணிதலிம் மூன்று
முழுமக்கள் காத லவை.

(இ-ள்.) பெருமை - பெருந்தன்மை, உடையார் - உடைய வருடைய, இனத்தின் - இனத்தினின்றும், அகறல் - நீங்குதலும், உரிமை இல்-தமக்கு உரியாதல் இல்லாத, பெண்டிரை - மாதரை, காமுற்று - விரும்பி, வாழ்தல் - அவரோடு வாழ்தலும், விழுமிய அல்ல - சிறந்தவை அல்லாதவற்றை, துணிதல் - சிறந்தவையாகத்

துணிதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், முழுமக்கள் - மூடர், காதலவை - விரும்புபவையாம்; எ-று.

(க-ரை.) நல்லாரிணக்கம் விடுதலும், தமக்கு மணஞ்செய்து கொடுக்காத பெண்களை விரும்புதலும், பயனற்ற செயல்களைச் செய்தலும், அறிவற்ற மூடர்கள் செயல்களாம்.

பெருமை - அறிவொழுக்கங்களில் மிகுதியுடைமை. அகறல் - தல் விகுதி பெற்ற தொழிற்பெயர். உரிமை - கிழமை, பற்று. தன்மனைக்கு உரிமையுடையவள்; மனைவி. காமுற்று - காமுறு - பகுதி, காமம் உறு என்பதன் விகாரம். விழுமிய - பண்படியாய்ப் பிறந்த பலவின்பாற்பெயர். அறிவின்மையாகிய குறையுள்ள மக்களை முழுமக்கள் என்றது மங்கல வழக்கு; முழுமையாகிய மக்கள் - பண்புத்தொகை. படித்து வருந்தி மனதிலாயினும் உடம்பிலாயினும் சிறிதும் புரைபடாதவர் அதாவது பிறந்தபடியிருப்பவர், "முழுமகன் சிதடன் இழுதை மூடன்"—திவாகரம். அகறல் வாழ்தல் துணிதல் - இவற்றில் உம் என்னும் எண் இடைச்சொல் தொக்கு நின்றது, பெயர்ச் செவ்வெண். (க)

கணக்காய ரில்லாத வூரும் பிணக்கறுக்கு
மூத்தோரை யில்லா வவைக்களனும்—பாத்துண்ணுந்
தன்மை யிலாள ரயலிருப்பு மிம்மூன்று
நன்மை பயத்த லில.

(இ-ள்.) கணக்காயர்-நெடுங்கணக்கு முதலியன கற்பிப்பவரை, (ஆசிரியரை,) இல்லாத - உடையதாயிராத, ஊரும் - ஊரிலிருத்தலும், பிணக்கு - மாறுபட்ட பொருளை, அறுக்கும் - நீக்கும், மூத்தோரை - (கல்வி கேள்விகளில்) முதிர்ந்தவரை, இல்லா - உடையதல்லாத, அவைக்களனும் - சபையிலிருத்தலும், பாத்து - பகுத்து, உண்ணும் - சாப்பிடும், தன்மை - குணம், இலாளர் - இல்லாதவர், அயல் இருப்பும் - பக்கத்திலிருத்தலும், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், நன்மை - ஒருவனுக்கு நன்மையை, பயத்தல் - தருவன, இல - அல்லவாம்; (தீமை பயப்பனவாம்) எ-று.

(க-ரை.) கல்வி கற்பிக்கத்தக்கவரில்லாத ஊரிலிருப்பதும், ஏற்பட்ட வழக்கைத் தீர்க்கும் திறமில்லாதவர் சபையிலிருப்பதும், உதவி செய்யாதவர் பக்கத்திலிருப்பதும் பயனற்றவை. இருக்க வேண்டாம் என்பது கருத்து.

கணக்காயர் - கணக்கு + ஆயர், கணக்கை ஆய்ந்தவர், கணக்கு - இஃது இலக்கணம் முதலியவற்றிற்கும் உபலட்சணம். ஆயர்-ஆராய்ந்தவர்; ஆய் - ஆராய். இவர் மூல பாடங் கற்பிப்பவர் என்பது "கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற், பெற்றதாம் பேதையோர் சூத்திரம்" என்ற நாலடியால் விளங்கும். பிணக்கு - பிணங்குதல், பிணங்கு என்னும் முதனிலை பிணக்கு எனத் திரிந்தது, தொழிற் பெயர்; ஒரு பொருளைக் குறித்து இருவர்க் குளதாம் மாறுபாடு. அறுக்கும் - ஐயந்திரிபற நீக்கும். மூத்தோர் - கற்றறிந்த பெரியோர். "அவைக்குப் பாழ் மூத்தோரை யின்மை" என்பது நான் மணிக்கடிகை. அவைக்களன் - சபையாகிய இடம்; இருபெயரொட்டுப் பண்புத் தொகை. களன் - களம் என்பதன் போலி. பாத்து - பகுத்து. "பாத்தூண் மரீஇயவனைப் பசியென்னும், தீப்பிணி தீண்ட லரிது" என்ற திருக்குறள் உஉஎ-ல் பாத்து பகுத்து என்னும் பொருளில் வந்துளது. "பகடு நடந்தகூழ் பல்லாரோடுண்க," என்பது நாலடி. இல்வாழ்வான் பிரமசரி முதலிய ஒன்பதின்மர்க்குங் கொடுத்துண்பது முறையெனத் திருவள்ளுவர் அறுதியிட்டிருப்பினும், விருந்தினர்க்கும் உறவினர்க்குமாவது கொடுத்துண்பது இன்றியமையாதது என்பது வற்புறுத்தப்படும். "விருந்தின்றி யுண்ட பகலும்" என்ற இந்நூல் சஉ-ஆம் செய்யுளடியையும் நோக்குக. (௯)

விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும் வீழக்
களியாதான் காவா துரையுந்—தெளியாதான்
கூரையுட் பல்காலுஞ் சேறலு மிம்மூன்றும்
மூரெல்லா நோவ துடைத்து.

(இ-ள்.) விளியாதான் - (தன்னை) அழையாதவன், கூத்து ஆட்டு - கூத்தாட்டத்தை, காண்டலும் - (தான் சென்று) பார்ப்பதும், வீழ - (தளர்ந்து) விழும்படி, களியாதான் - மதுவுண்டு களியாதவனாயிருந்தும், காவாது - காவாமல், உரையும் - (வழுப்படச்) சொல்லுதலும், தெளியாதான் - (தன்னை) நம்பாதவன், கூரையுள் - வீட்டிலே, பல்காலும் - பலமுறையும், சேறலும் - செல்லுதலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், ஊரும் - ஊரிலுள்ளோரெல்லாரும், நோவது - துன்பப்படுங் குற்றத்தை உடைத்து - உடையன ; எ-று.

(க-ரை.) அழைக்கப்பெறாத ஆட்டத்தைக் காணப்போவதும், களியன்போல் காவாது உரைத்தலும், தன்னை நம்பாதவன் வீட்டிற் செல்லுதலும், வருந்தத்தக்க குற்றங்களாம்.

கூத்து - நாடகம். ஆட்டு - ஆடுதல்; ஆட்டு - விகாரப்பட்ட முதனிலைத் தொழிற் பெயர். "கூத்தாட் டவைக்குழாத் தற்றே" என்ற திருக்குறள் ௩௩௨-லும் கூத்தாட்டு, கூத்தாடுதல் என்னும் பொருளில் வந்துள்ளது. கூத்தாகிய ஆடல் எனின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. களி - கள்ளுண்ணுதலால் ஏற்படும் வெறி; இதை யுடையவன் களியெனப் படுவான். விளியாதான், களியாதான், தெளியாதான் - வினையாலணையும் பெயர்கள். உரை - முதனிலைத் தொழிற் பெயர். பல்காலும் - உம் - முற்றுப் பொருளது. நோவது - நோவுதற்கு ஏதுவானது. நொ - பகுதி முதல் நீண்டது அ - சாரியை, து - ஒன்றன்பால் விகுதி. இம் மூன்றும் உடைத்து என்பது பன்மையில் ஒருமை மயக்கம். ஊர் - இடவாகு பெயர். விளியாதான் கூத்தாட்டுக் காண்டல் என்பதற்கு இனிமையாகப் பாடாதவன் கூத்தாட்டத்தைச் செய்தலும் என்றும் கூறலாம். விளித்தல் - ஒலித்தல்; ஈண்டுப் பாடலின் மேற்று. காண்டல் - செய்தல், "முனைவன் கண்டது முதனூல்" என்பதிற் காண்க. கூரை - சினையாகு பெயராய் வீட்டை யுணர்த்திற்று. (கக)

தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்
வேளாள னென்பான் விருந்திருக்க—வுண்ணுதான்
கோளாள னென்பான் மறவாதா னிம்மூவர்
கேளாக வாழ்த லினிது.

(இ-ள்.) தாள் ஆளன் என்பான் - முயற்சியை ஆளுதலுடையான் என்று சிறப்பித்துச் சொல்லப்படுபவன், கடன்படா - கடன் படாமல், வாழ்பவன் - வாழ்தலுடையவன், வேள் ஆளன் - உதவியாளன், என்பான் - என்று சொல்லப்படுவோன், விருந்து - வந்த விருந்தினர், இருக்க - (பசித்து) இருக்கையில், உண்ணுதான் - (தனித்து) உண்ணுதவன், கோள் ஆளன் - (பிறர் அறிந்த காரியங்களை மனதிற்) கொள்ளுதல் உடையவன், என்பான் - என்று சொல்லப்படுபவன், மறவாதான் - கேட்டவற்றை மறவாதவன், இ மூவர் - இம்மூவரும், கேள் ஆக - தனக்கு நட்பினராயிருக்க, வாழ்தல் - (ஒருவன்) வாழ்வது, இனிது - (அவனுக்கு) நன்மை தருவதாகும்; (எ-று.)

(க-ரை.) கடன்படாது வாழ்வதே நல்ல முயற்சியென்பதும், வீட்டுக்கு வந்த விருந்தினரைப் பேணுதலே சிறந்த உதவி என்பதும், தான் ஒருவர் சொல்லியவற்றை மறவாது மனதிற் கொண்டிருத்தலே நற்சிந்தை என்பதும், ஆம்.

தாள் - முயற்சி. வேள் - உதவி. என்பான் - என்று சொல்லப் படுவான், செயப்பாட்டுவினை செய்வினையாக வந்த வினையாலணையும் பெயர்; என் - இடைச்சொல் - பகுதி. "எங்கோ வளம், காப்பாரோ வேளாளர் காண்" என்ற கம்பர் தனிக் கவியிலும் வேளாளர் என்பான் விருந்திருக்க உண்ணுதான் என்ற உண்மையை விளக்கும். படா - எதிர்மறை வினையெச்சம், ஆ - விகுதி [illegible]. இருக்க - செயவென் வாய்பாட்டு வினையெச்சம். ஆக - செயவென் வாய்பாட்டு வினையெச்சம். கோள் - முதனிலை திரிந்த தொழிற் பெயர். விருந்து, கேள் - இவை பண்பாகு பெயராய் விருந்தினரையும் கேளிரையும் உணர்த்தும். கோளாளன் என்பதற்கு ஆசிரி

யர் கூறிய நூற்பொருளை அமையக்கொள்ளும் மாணாக்கன் என்று சொல்லப்படுவோன் கேட்டவற்றை மறத்தலில்லாதவன் எனலும் ஆம்.

சீல மறிவா னிளங்கிளை சாலக்
குடியோம்பல் வல்லா னரசன்—வடுவின்றி
மாண்ட குணத்தான் றவசியென் றிம்மூவர்
யாண்டும் பெறற்கரி யார்.

**(இ-ள்.)** சீலம் - (பிறர்) குணத்தை, அறிவான் - அறிந்து நடக்கிறவன், இளம் கிளை - இளமை (தொட்டுவந்த) சுற்றத்தானவான், சால - மிகவும், குடி - குடிகளை, ஓம்பல் - பேணுதலில், வல்லான் - வல்லவன், அரசன் - அரசனவான், வடு இன்றி - குற்றம் இல்லாமல், மாண்ட - மாட்சிமைப்பட்ட, குணத்தான் - குணத்தை யுடையவன், தவசி - தவசியாவான், என்ற - என்று சொல்லப் பட்ட, இ மூவர் - இம்மூவரும், யாண்டும் - எவ்விடத்தும், பெறற்கு - பெறுதற்கு, அரியார் - அரியராவார் ; எ-று.

**(க-ரை.)** பிறர் குணம் அறிந்து நடக்கவல்ல சுற்றத்தானும், குடிகளைக் காக்க வல்ல அரசனும், குற்றமில்லாது துறவோடிருக்க வல்ல தவசியும் எல்லாராலும் தேடிப் பெறவேண்டுபவராவர்.

இளங்கிளை - புத்திரனவான் என்பதுமுண்டு. இளமையாகிய கிளை - பண்புத் தொகை. இளமை என்றதற்கு இளமை தொட்டு வந்த என இலக்கணையாற் பொருள் கொள்ளப்பட்டது. கிளை - சுற்றத்தார்க்கு உவமையாகுபெயர். சால - உரிச்சொல்; மிகுதி யென்னும் பொருட்டு. குடியோம்பல் - தளர்ந்த குடிகளைப் பேணல், அஃதாவது ஆறிலொன்றாகிய இறைப் பொருளையும் வறுமை நீங்கிய வழிக் கொள்ளல் வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல் வேண்டின் இழத்தலும் ஆம். மாண்ட-மாண்-பகுதி; மாண்ட - பெயரெச்சம். தவசி - காரணப்பெயர். தவசு - பகுதி. தவமாவது - மனம்பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு நோன்புகளால்

உண்டி சுருக்கல் முதலாயின. அரியார் - என்பதில் அருமை என்னும் பகுதி இன்மை யென்னும் பொருட்டு. (கரு)

இழுக்க லியல்பிற் றிளமை பழித்தவை
சொல்லுதல் வற்றாகும் பேதைமை—யாண்டுஞ்
செறுவொடு நிற்குஞ் சிறுமை யிம்மூன்றுங்
குறுகா ரறிவுடை யார்.

(இ-ள்.) இளமை - இளமைப்பருவம், இழுக்கல் - வழுவுதலை, இயல்பிற்று, இயல்பாகவுடையது ; பேதைமை - அறியாமை, பழித்தவை - (அறிவுடையோரால்) விலக்கப்பட்டவைகளை, சொல்லுதல் - சொல்லுதலில், வற்று ஆகும் - வல்லதாம், சிறுமை - ஈனத்தன்மை, யாண்டும் - எக்காலத்தும், செறுவொடு - சினத்தோடு, நிற்கும் - நிற்பதாகும், (ஆதலால்) இ மூன்றும் - இம்மூவகையினையும், அறிவு உடையார் - (மேல் விளைவை) அறிதலையுடையார், குறுகார் - நெருங்கார் ; எ-று.

(க-ரை.) இயல்பாக வழுவுதலையுடையது பாலியமாம்; வெறுப்பவைகளைச் சொல்லுதல் மூடத்தனம், எப்போதும் சினத்தோடிருப்பது சிறுமை, இவை ஒருவனுக்கு இருந்தால் பெரியோர் அவனைச் சேரார்.

இழுக்கல் - வழுக்குதல்; இழுக்கு - பகுதி, அல் - தொழிற் பெயர் விகுதி. இயல்பிற்று - குறிப்பு முற்று. இயல்பு - பகுதி, இன் - சாரியை, று - விகுதி, னகரம் றகரமாகத் திரிந்தது. பழித்தவை - பலவின்பால் வினையாலணையும் பெயர். வற்று - வன்மையின் திரிபாகிய வல் - பகுதி, று - ஒன்றன்பால் விகுதி, லகரம் றகரமானது சந்தி. செறுவொடு - ஒடு என்னும் மூன்றனுருபு எண்ணப் பொருளது. சிறுமையுடன் செறுவும் உடனிகழ்தலால் உடனிகழ்ச்சிப் பொருளதாம். இளமை, பேதைமை, சிறுமைகள் அவற்றை உடையார்க்குப் பண்பாகுபெயராய் நின்றன; இவை பற்றி உயர்திணையை அஃறிணையாகக் கூறிய தென்றாயினும் அமைத்துக்கொள்க. (கசா)

பொய்வழங்கி வாழும் பொறியறையுங் கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதுந் தட்டையு—மூழினொ
லொட்டி வினைநலம் பார்ப்பானு மிம்மூவர்
நட்கப் படாஅ தவர்.

(இ-ள்.) பொய்-பொய்ச்சொற்களை, வழங்கி - பேசி, வாழும்-(அதனால் உயிர்) வாழ்கின்ற, பொறி அறையும்-திருவில்லாதவனும், கை - முறைமை, திரிந்து - வேறுபட்டு, தாழ்வு இடத்து - (ஒருவன்) தாழ்ந்த இடத்து, நேர் - (அவனைத் தனக்கு) நேராக, கருதும் - நினைக்கின்ற, தட்டையும் - மூங்கில் போலும் (புரைபட்ட) மனத்தவனும், ஊழினால் - (ஒருவனைச் சேரவேண்டிய) முறையினால், ஒட்டி-சேர்ந்து, வினை - (அவன்) காரியத்திலே, நலம் - (தனக்குப்) பயன், பார்ப்பானும் - பார்க்கின்றவனும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், நட்க - (யாவராலும்) நட்புக் கொள்ள, படாஅதவர் - தகாதவர்; (எ-று.)

(க-ரை.) "பொய் சொல்லும் வாய்க்குப் போசனம் கிடையாது" என்றபடி பொய் சொல்பவனிடம் செல்வம் நிலையாது; தனக்கு மேம்பட்டவன் ஏதாவது காரணத்தால் தாழ்வடைந்த காலத்தும் அவனைத் தனக்கு மேலானவனாகவே கருத வேண்டும்; நட்புச் செய்யப்பட்டவனிடமிருந்து தனக்கு என்ன பயனுண்டாமென்று எதிர்பார்த்தல் தகாதது.

பொறி - இலக்குமி, இங்குச் செல்வத்தைக் குறித்தது. அறை - அறுதலையுடையவன். ஐ - கருத்தாப் பொருள் விகுதி. இனி பொறி அறை என்பதற்கு அறிவற்றவன் என்றும் பொருள் கூறலாம். கை - ஒழுக்கம். தட்டை - மூங்கில்; மேலோரை வணங்காமையால் தட்டை என அஃறிணைப் பொருளாகக் கூறப்பட்டது; உவமையாகு பெயர். ஊழ் - முறைமை. நட்கப்படாதவர் - வினையாலணையும் பெயர், நள் - பகுதி, கு - சாரியை, ப் - சந்தி, படு - செயப்பாட்டு வினைப்பொருள் விகுதி. உகரக்கேடும், ளகரத் திரிபும் சந்தி. நட்கப்படு என்ற பகுதியுடன் ஆ - எதிர்மறை

விகுதி. த் - விரித்தல் விகாரம், அ - சாரியை, ப் - சந்தி, அர் - பலர்பால் விகுதி. பொறியறை, தட்டை என்ற இரண்டும் உயர்திணைச் சிறப்புப் பெயராகிய பார்ப்பான் என்பதொடு விரவிச் சிறப்பினால் உயர்திணை முடிபேற்றன. படாஅதவர் - இசைநிறை அளபெடை. (கரு)

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானு மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானு—முண்ணுநீர்
கூவல் குறைவின்றித் தொட்டானு மிம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.

(இ-ள்.) மண்ணின்மேல் - மண்ணுலகத்தில், வான் - பெரிய, புகழ் - புகழை, நட்டானும் - நிலைநிறுத்தினவனும், பெண்ணினுள் - பெண்களுள், மாசு இல் - குற்றமற்ற, சீர் - சிறப்புடைய, கற்பு உடையாள் - கற்புடையவளை, பெற்றானும் - (மனைவியாகப்) பெற்ற கணவனும், உண்ணும் நீர் - உண்ணப்படுகிற நீர், குறைவு இன்றி - குறைவுபடாதபடி, கூவல் - கிணறுகளை, தொட்டானும் - தோண்டி வைத்தவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், சாவா - (எக் காலத்தும்) இறவாத, உடம்பு - (புகழ்) உடலை, எய்தினார் - பெற்றவ ராவார்; (எ-று.)

(க-ரை.) உலகத்தில் 'ஈதல் இசைபட வாழ்தல்' என்ற பொய்யா மொழிக் கிணங்க, இரப்பவர்க்கு ஈந்து சிறந்த புகழை நாட்டிய வனும், சிறந்த கற்புடை மனைவியைப் பெற்றவனும், நீரூறு கிணறு முதலியவற்றைத் தோண்டிவைத்தவனும்; இறந்தும் இறவாத புக ழுடம்பைப் பெற்றவராவர்.

மண் - கருவியாகு பெயர். நட்டான், தொட்டான், பெற்றான் என்பவை நடு, தொடு, பெறு என்ற வினைப்பகுதி யடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர்கள். பெண்-சாதியொருமை. சீர் கற்பு - சீரும் கற்பும் எனக் கொள்ளுமிடத்து எண் உம்மை தொக்கது. கற்புடையாட் பெற்றான் - உயர்திணைப் பெயராயினும் இரண்டாம்

வேற்றுமைத் தொகையாதலால், ளகரம் டகரமாகத் திரிந்தது. கூவல் - கூவம் என்பதன் போலி. பூத உடம்பு அழிந்தும் அதனு லாய புகழுடம்பு அழியாதிருத்தலால் சாவா வுடம்பு எனவும், அம் மூவரும் என்றும் உள்ளார் போல விளங்குதலின் உடம்பு எனவுங் கூறினர். (கசு)

மூப்பின்க ணன்மைக் ககன்றானுங் கற்புடையாள்
பூப்பின்கட் சாராத் தலைமகனும்—வாய்ப்பகையுட்
சொல்வென்றி வேண்டு மிலிங்கியு மிம்மூவர்
கல்விப் புணைகைவிட் டார்.

(இ-ள்.) மூப்பின்கண் - மூப்பு வந்த இடத்தும், நன்மைக்கு - துறவறத்துக்கு, அகன்றானும் - (அஞ்சி) நீங்கினவனும், கற்பு உடையாள் - கற்புடைய மனைவியை, பூப்பின் கண் - பூத்து நீராடிய பின், சாரா - மருவாத, தலைமகனும் - கணவனும், வாய்ப்பகையுள் - (சோர்வாலுண்டாகின்ற) வாய்மொழிப் பழி நான்கனுள், சொல் வென்றி - (தான் கூறிய) சொல்லினது வெற்றியை, வேண்டும் - விரும்பித்துணிகின்ற, இலிங்கியும் - தவ வேடத்தானும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், கல்விப்புணை - கல்வியறிவாகிய தோணியை, கைவிட்டார் - முற்றும் நீங்கினவராவார்; (எ-று.)

(க-ரை.) மூப்புப் பருவத்திலும் துறக்காதிருப்பவனும், மனைவி யைச் சார்ந்திருக்கக் குறித்த காலத்தில் சேராத கணவனும், வீண் மொழியாடும் துறவியும்; கல்வியறிவைக் கைவிட்டவ ராதலின் உய்விலர்.

மூப்பின் - மூப்பினும் - எல்லா இன்பங்களையும் நுகர்தற் கியலாமையால் உம் - இழிவு சிறப்பினது. மூப்பு என்ற குறிப்பால் நன்மை துறவற மெனப்பட்டது. நன்மை - பண்பாகுபெயர். அகன்றான் - அகல் பகுதி. பூப்பு - மகளிர் சூதகம். இது கண்ட முதல் மூன்று நாளும் சேராது நான்காம் நாள்முதல் பதினாறும் நாள்வரை பூப்புற்ற மனைவியைக் கணவன் சேர்ந்து வாழ்தலே

முறை யென்பது உடலியல் நூலோர் கூற்று, "பூத்த காலைப் புனையிழை மனைவியை, நீராடிய பின் ஈராறு நாளும், கருவயிற் றுறுங்கால மாதலிற், பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்," என்ற அகப்பொருள் விளக்கம் ௧௧-வது சூத்திரப்படி நீராடியபின் பன்னிரண்டு நாளும் கருப்படுங் காலமாதலிற் பரத்தையிற் பிரிந்த தலைமகனும் அப் பன்னிரண்டு நாளும் தலைவியைப் பிரிந்து உறைதலாகாது என்பது விளங்கும். இது, "பூப்பின் புறப்பா டீராறு நாளும், நீத்தகன் றுறைதல் அறத்தாறன்றே, பரத்தையிற் பிரிந்த காலை யான," என்று தொல்காப்பியனாரும், "தீண்டா நாள் முந்நாளும் நோக்கார், நீராடிய பின் ஈராறு நாளும் இகவற்க என்பதே, பேரறிவாளர் துணிவு," என்று ஆசாரக்கோவை யாசிரியர் பெருவாயில் முள்ளியாரும் கூறியவற்றானும் வலியுறுத்தப்படும். வாய்ப்பகை- வாய்மொழிப் பகை. அவை, பொய், கடுஞ்சொல், குறளை, பயனில் சொல் என்ற நான்கும். இவை தீமையைத் தருவதால் பகை யெனப் படும். வென்றி, மூப்பு - தொழிற்பெயர்கள். லிங்கி - இலிங்கி - இலிங்கம் அணிந்தவர். கல்வி - காரணவாகுபெயர். "வாய்ப்பின்சாட் சாராத் தலைமகனும்" என்ற பாடங்கொண்டு, பொருந்துங் காலத்துஞ் சேராத கணவனும் என்று பொருள் கூறுதலும் ஒன்று. (௧௭)

ஒருதலையான் வந்துறூஉ மூப்பும் புணர்ந்தார்க்
கிருதலையு மின்னாப் பிரிவு—முருவினை
யுள்ளுருக்கித் தின்னும் பெரும்பிணியு மிம்மூன்றுங்
கள்வரி னஞ்சப் படும்.

(இ-ள்.) ஒருதலையான் - உறுதியாக, வந்துறூஉம் - [illegible]யும், மூப்பும் - கிழப்பருவமும், புணர்ந்தார்க்கு - நட்பினருக்கு, இருதலையும் - (பிரியப்பட்டவரும் பிரிந்தவரும் ஆகிய) இரண்டிடத்தும், இன்னாப் பிரிவும் - துன்பத்தைத் தருகின்ற பிரிவும், உருவினை - உடம்பை, உள் - உள்ளிடத்துள்ள [illegible] முதலிய வற்றை, உருக்கி - கரையச் செய்து, தின்னும் - வருத்துகின்ற, பெரும் பிணியும் - (மருந்து முதலியவற்றால்) தீராத நோயும், இ

மூன்றும் - ஆகிய இம் மூன்றும், கள்வரின் - கள்வர்க்கு அஞ்சுவது போல், அஞ்சப்படும் - பயப்படும் ; (எ-று.)

(க-ரை.) கள்வருக்கு அஞ்சி எச்சரிக்கையா யிருப்பது போல உறுதியாக வரக்கூடிய மூப்பு, நண்பரிருவர்க்கும் விருப்பமில்லாத பிரிவு, உரு அழிக்கும் நோய் இம் மூன்றுக்கும் அஞ்சிச் செய்ய வேண்டுவன செய்து எச்சரிக்கையா யிருக்கவேண்டும்.

ஒரு தலையான் என்பதற்குக் கணவன் மனைவி என்னும் இருவருள் ஒருவரிடத்து எனலுமாம். பருவம் முதலிய ஒத்த தலைமகனும் தலைமகளும் மணத்தல் மரபாதலால் ஒரு தலையான் எனப் பொதுப் படக் கூறப்பட்டது. இருதலை - தலை இடம், இது தலைமகன் தலைமகள் என்ற இருவரையும் குறிக்கும் ; பன்மையில் ஒருமை வந்த பால் வழுவமைதி. இன்னாப் பிரிவு - இன்னாமையைத் தரும் பிரிவு எனின் இரண்டாம் வேற்றுமைத் தொகை; இன்னாமை யாகிய பிரிவு - பண்புத் தொகை. உரு - பண்பாகுபெயர். உள் - இடவாகு பெயர். உருக்கி - உருக்கு என்னும் பிறவினைப் பகுதி யடியாகப் பிறந்த வினையெச்சம். பெரும்பிணி - பெருமையாகிய பிணி - பண்புத்தொகை. பெருமையாவது மருந்துண்ணல், மந்திரித்தல், மணி முதலியன தானஞ் செய்தல் இவைகளால் தணியாமை. கள்வரின் - இன் ஐந்தனுருபு, ஒப்புப் பொருள். அஞ்சப்படும் - ஒரு சொல் நீர்மைத்து. (கஅ)

கொல்யானைக் கோடுங் குணமிலியு மெல்விற்
பிறன்கடை நின்றொழுகு வானு—மறந்தெரியா
தாடும்பாம் பாட்டு மறிவிலியு மிம்மூவர்
நாடுங்காற் றூங்கு பவர்.

(இ-ள்.) கொல் யானைக்கு - கொலை செய்வதாகிய (மத) யானைக்கு, ஓடும் - (பின்வாங்கி) ஓடுகின்ற, குணம் இலியும் - குணம் இல்லாதவீரனும், எல்லில் - இரவிலே, பிறன் கடை - பிறன் வீட்டு வாயிலில் (அவன் மனையாளை விரும்பி), நின்று - (தனக்கு வாய்ப் பான சமயம் பார்த்து) நின்று, ஒழுகுவானும் - நடப்பானும், ஆடும்

பாம்பு - ஆடுந் தொழிலுள்ள பாம்பை, மறம் - (நன்றி செய்தார்க்கும் தீமையைச் செய்கின்ற) கொடுமையை, தெரியாது - தெரியாமல், ஆட்டும் - ஆட்டுகின்ற, அறிவிலியும் - அறிவில்லாதவனும், இ மூவர் - இம் மூவரும், நாடுங்கால் - ஆராயுமிடத்து, தூங்குபவர் - (பழி முதலியவற்றினின்றும்) விரைதலில்லாதவர்; (எ-று.)

(க-ரை.) போர் யானைக்கு அஞ்சிப் பின்வாங்கும் வீரனும், அயலான் மனைவியை விரும்பித் தீமையா யொழுகுபவனும், நச்சுப் பாம்பை ஆட்டுகின்றவனும், விரைவில் கெடுபவராவர்.

உணவு முதலியன கொடுத்துக் காத்த அரசனுக்குப் போர் வந்த காலத்துப் போர்க்களத்தில் யானைக்கு அஞ்சி ஓடுதலால் குணமிலி எனப்பட்டான். யானைக்கு ஓடும் குணமிலி என்பதற்கு யானைக்கு எதிரில் ஓடுகின்ற அறிவில்லாதவனுக்கு என்றுமாம். இலி - இல் எதிர்மறைப் பண்படி பகுதி; இ - வினைமுதற் பொருள் விகுதி. எல் - இரவு. பிறன்கடை நின்றொழுகுவான் என்றது இடக்கரடக்கல், நாடுங்கால் - கால் ஈற்று நிகழ்கால வினையெச்சம். "கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுளம், வெம்பு கரிக் காயிரந்தான் வேண்டுமே" என்றபடி வெம்புகரிமுன் செல்லா திருத்தலை அறியாமையின் குணமிலி என்றொனலுமாம். "தூங்காமை கல்வி துணிவுடைமை" என்ற திருக்குறளில் தூங்காமை என்பதற்கு விரைவுடைமை என்று பரிமேலழகர் உரை விரித்திருத்தலின், தூங்குதல் விரைதலில்லாமை என்று கொள்ளப் பட்டது. தூங்குபவர் என்பதற்கு இறப்பவர் என்றும் பொருள் கூறுவர். (கக)

ஆசை பிறன்கட் படுதலும் பாசம்
பசிப்ப மடியைக் கொளலுங்—கதித்தொருவன்
கல்லானென் றெள்ளப் படுதலு மிம்மூன்று
மெல்லார்க்கு மின்னா தன.

(இ-ள்.) பிறன்கண் - பிறனொருவ னிடத்துள்ள பொருளுக்கு, ஆசை படுதலும் - விருப்பத்தைச் செய்தலும், பாசம் - தன் சுற்றம்

தார், பசிப்ப - பசித்திருக்க, மடியை - சோம்பலை, கொள்ளும் - கொள்ளுதலும், கதித்து - வெறுத்து, ஒருவன் - ஒருவனால், கல்லான் என்று - கற்றிலன் என்று, எள்ளப்படுதலும் - இகழப் படுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், எல்லார்க்கும் - யாவர்க்கும், இன்னாதன - இன்பந் தராதவைகளாம் ; (எ-று.)

(க-ரை.) அடுத்தவர் பொருளுக்கு ஆசைப்படுவதும், மக்கள் முதலிய கிளைஞர் உணவின்றி வருந்த யாதொரு முயற்சியுமின்றிச் சும்மா இருப்பதும், கல்லாதவன் என்றிகழப்படுவதும் இன்பந் தராதவை என்றபடி.

பிறன் என்பது அவன் பொருளுக்கு ஆகுபெயர். இனி, பிறன் கண் ஆசைப்படுதலும் என்பதற்குத் தீயோனிடத்துச் செல்வம் உண்டாதலும் என்றுங் கூறலாம். இங்கு நல்லோனுக்கு மறுதலைப் பட்டவனைப் பிறன் என்றார். பாசம் - கயிற்றின் பெயராகிய இஃது ஒருவனை நீங்கவொட்டாமற் கட்டுப்படுத்துகிற தென்னும் ஒப்புமையால் ஆசைக்கு ஆயிற்று. பின்பு ஆசைக்கு இடமாகிய சுற்றத்திற்கு ஆகுபெயர். கதித்து - கதம் என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம், கதி - பகுதி. கதித்து என்பதற்குப் பெருத்து வளர்ந்து எனவுங் கூறுவர். ஒருவன் - கருத்தாப் பொருளில் வந்த மூன்றாம் வேற்றுமைத் தொகை. இன்னாதன - இனிமை என்னும் பண்படியாகப் பிறந்த எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று. (உ௰)

வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை—யெய்தப்
பலநாடி நல்லவை கற்றல் இம்மூன்று
நலமாட்சி நல்லவர் கோள்.

(இ-ள்.) வருவாயுள் - தமக்கு வரும் பொருள்களிலே, கால் - நான்கி லொரு பங்கு, வழங்கி - (அறத்திற்) செலவு செய்து, வாழ்தல் - வாழ்தலும், செரு - போரினிடத்து, வாய்ப்ப - (வெற்றி)

கிடைப்ப, செய்தவை - (தான்) செய்த செயல்களை, நாடா - ஆரா யாதபடி, சிறப்பு உடைமை - (யாவர்க்கும் விளங்கித் தோன்றும்) சிறப்புடையனாதலும், எய்த - நிரம்ப, பலநாடி - பலவற்றையும் ஆராய்ந்து, நல்லவை - (அவற்றுள்) நல்லவைகளை, கற்றல் - படித்த லும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நலம் - நற்குண நற் செய்கைகளால், மாட்சி - பெருமை பெற்ற, நல்லவர் - நல்லவ ருடைய, கோள் - கொள்கைகளாம்; (எ-று.)

(க-ரை.) வரவுக்குத் தகுந்தபடி அறஞ் செய்தலும், போரில் வெற்றி பெறுதலும், நல்ல பொருள்களைக் கற்றலும் நலம் என்ற படி.

வருவாய் - வரும் வழியை யுடைய பொருள், வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கால் - எண்ணலளவை யாகு பெயர். செருவாய்ப்ப என்ற குறிப்பால் செய்தவை என்பது வெற்றிச் செய்கை என்பதன் மேலாயிற்று. வாய்ப்ப - நிகழ் காலத் தில் வந்த செயவெனெச்சம். வாய் - பகுதி, ப் - எழுத்துப்பேறு, ப் - சந்தி; அ - விகுதி; வழக்கத்தில் வாய்க்க என வரும். உடைமை - தொழிற்பெயர். கோள் - கோட்பாடு, தொழிலாகு பெயர். ஒரு வன் தன் தேட்டத்திற் பாதி தன்வகைச் செலவுக்கும், காற்கூறு அறத்திற்கும், மற்றொரு கால் சேர்த்துவைப்பதற்கும் பயன்படுத்த வேண்டுமென்பது நூற்கொள்கை. (உக)

பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்
பற்றறா தோடு மவாத்தேருந்—தெற்றெனப்
பொய்த்துரை யென்னும் பகையிருளு மிம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு.

(இ-ள்.) பற்று என்னும் - பற்று என்று சொல்லப்படுகின்ற, பாசத்தளையும் - கயிற்று விலங்கும், பலவழியும் - பல பொருள்களி லும், பற்று - பிடிப்பு, அறாது - நீங்காமல், ஓடும் - ஓடுகின்ற, அவாத்தேரும் - விருப்பமாகிய தேரும், தெற்றென - தெளிவாக,

பொய்த்து உரை என்னும் - பிறர்க்குப் பொய்மை உரைப்பதாகிய சொல் என்று சொல்லப்படும், பகை இருளும் - (அறிவுக்குப்) பகையாகிய இருளும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், வித்து அற - தனக்குக் காரணமாகிய அவிச்சை கெட, பிறப்பு வீடும் - பிறப்பு அழியும் ; (எ-று.)

(க-ரை.) பற்றையும், அவாவையும், பொய்யையும் நீக்கினால் வீடடையலாம்.

ஒன்றின்மேற் பற்றிருந்தால் அதை ஒழித்து அங்கிங்கு செல்வது கூடாமையால் பாசத் தளை யென்றும், ஒன்றின்மேல் ஆசை மேலே மேலே ஓடிக்கொண் டிருத்தலால் அவாத் தேர் என்றுங் கூறினார். "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப், பொய்யா விளக்கே விளக்கு" என்ற குறளுக்கு இணங்கப் பொய்யாமை விளக்கம் எனப்படுதலால், பொய்யுரை இருள் எனப்பட்டது. பற்று - அகப்பற்று புறப்பற்று என்றிரு வகைத்து. நான் என்றுணர்ச்சியுட னிருப்பது அகப்பற்று, எனது என்னும் உணர்ச்சியுடனிருப்பது புறப்பற்று. பற்று - பற்றுதல், முதனிலைத் தொழிற் பெயர். பொய்த்து - பொய்ம்மை என்னும் பண்படியாகப் பிறந்த அஃறிணை யொன்றன்பாற் பெயர்ச் சொல். பொய்த்துரை - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. தெற்றென - செயவெனெச்சம். வித்து - விதை, மூலம். "அவா என்ப எவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்றார் வள்ளுவனாரும். இதற்கு உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டும் கதி நிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லு மாதலால், அதனைப் பிறப்பீனும் வித்து என்று பரிமேலழகர் உரை விரித்திருப்பது கருதத் தக்கது. வீடும் - அழியும் ; வீட்டுதல் - அழித்தல், பிறவினை. (உஉ)

தானங் கொடுக்குந் தகைமையு மானத்தார்
குற்றங் கடிந்த வொழுக்கமுந்—தெற்றெனப்

பல்பொரு ணீங்கிய சிந்தையு மிம்மூன்று
நல்வினை யார்க்குங் கயிறு.

(இ-ள்.) தானம் - தானத்தை, கொடுக்கும் - கொடுக்கின்ற, தகைமையும் - பெருஞ் செய்கையும், மானத்தார் - பழிக்கு நாணுத லுடையாரது, குற்றம் கடிந்த - குற்றத்தை நீக்கிய, ஒழுக்கமும் - நல்லொழுக்கமும், தெற்றென - தெளிய (உண்மையாக), பல் பொருள் - பல விடயங்களினின்றும், நீங்கிய - ஒழிந்த, சிந்தையும்- எண்ணமும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நல்வினை - அறத் தின் பயனை, ஆர்க்கும்-(நீங்காதபடி) கட்டுகின்ற, கயிறு - கயிறும்; (எ-று.)

(க-ரை.) தானங் கொடுத்தலாலும், மானங்கெடாத நல் லொழுக்கத்தாலும், பொருள்மேலே சிந்தனை யொழிந்திருப்பதனு லும், நல்வினைகளே மேன்மேலும் செய்யலாம்.

தானம் - அறநெறியால் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகை யோடுங் கொடுத்தல். தகைமை - பண்புப் பெயர். பொருள் நீங் கிய - பொருளின் நீங்கிய என்று ஐந்தனுருபு விரிக்க. வினை யென்னும் காரணப் பெயர் தன் காரியமாகிய பயன்மேல் நின்றது. ஆர்க்கும் - எதிர்காலப் பெயரெச்சம்; ஆர் - பகுதி, உம் - விகுதி, கு - சாரியை, க் - சந்தி. குற்றம்-பண்புப் பெயர், கடிந்த - பெய ரெச்சம்; கடி என்னும் உரிச்சொல் பகுதி. (உரு.)

காண்டகு மென்றோட் கணிகைவா யின்சொல்லுந்
தூண்டிலி னுட்பொதிந்த தேரையு—மாண்டசீர்க்
காழ்த்த பகைவர் வணக்கமு மிம்மூன்று
மாழ்ச்சிப் படுக்கு மளறு.

(இ-ள்.) காண் தகு - காணுதற்குத் தக்க, மென்றோள் - மெல் லிய தோள்களையுடைய, கணிகை - வேசையின், வாய் - வாயிற் பிறக்கின்ற, இன்சொல்லும் - இனிய மொழியும், தூண்டிலினுள் - தூண்டிலினிடத்து, பொதிந்த - (மீனுக்கு இரையாக அதன் முள்ளை மறைத்து) வைக்கப்பட்ட, தேரையும் - தவளையும், காழ்த்த-

வயிரம்பற்றிய, பகைவர் - பகைவர்களுடைய, மாண்ட - மாட்சிமைப் பட்ட, சீர் - சீரையுடைய, வணக்கமும் - வணக்கமும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், ஆழ்ச்சிப் படுக்கும் - (உயிர்களைத்தன்னுள்ளே) அழுந்தப்பண்ணுகின்ற, அளறு - நரகம் (போல்வனவாம்.) ; (எ-று.)

(க-ரை.) வேசியர் பேச்சும், பகைவர் வணக்கமும், வெளிக்கு நலம் போலிருந்து உள்ளே கவடு கொண்டிருத்தலால் நலமல்ல ; ஆதலால், அவற்றை நம்புதல் தூண்டிலில் வைத்த தவளையை விழுங்கப்போய் மீன் அகப்பட்டுக் கொண்டு கெடுவது போற் கெடுதியே விளைக்கும்.

காண்தகு - காண்டகு, காண் - முதனிலைத் தொழிற்பெயர், நான்கனுருபு தொக்கதாக் கொண்டு, காணுதற்கு என்று பொருள் சொல்லப்பட்டது. கணிகை - கணிக்கின்ற தன்மையிலிருப்பவள். அதாவது "செக்கூர்ந்து கொண்டாருஞ் சேர்ந்த பொருளுடையார், அக்காரம் அன்னார் அவர்க்கு" என்ற நாலடிச் செய்யுட்படி எவன் மிக்க பொருள் தருபவனென்று சிந்திக்கின்றவள் என்பதாம். வாய் என்று வேண்டாது கூறியது, பொருளுடையாரிடத்துக் கடுஞ் சொல் பயிலாமையைக் குறிக்க வேண்டியாம். தூண்டில் - தொழிலாகு பெயர். மீன்களை விரும்பத் தூண்டுவது. இனி இல் கருத்தாப் பொருள் விகுதியாகவுங் குறிக்கலாம். ஆழ்ச்சி - ஆழுதல் ; தொழிற்பெயர். காழ்த்த - காழ் என்னும் பெயரடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். நரகம் போலுதலாவது அழிதற் கேதுவாய துன்பம் தருவது. (உ௪)

செருக்கினால் வாழுஞ் சிறியவனும் பைத்தகன்ற
வல்லரல் விலைபகரு மாய்தொடியு—நல்லவர்க்கு
வைத்த வறப்புறங் கொன்றானு மிம்மூவர்
கைத்துண்ணார் கற்றறிந் தார்.

(இ-ள்.) செருக்கினால் - (பெரியோரை மதியாமல்) இறுமாப்புடன், வாழும் - வாழ்கின்ற, சிறியவனும் - அறிவில்லாதவனும்,

பைத்து - படத்தைப் போன்றதாய் அகன்ற - விசாலமான, அல்குல் - நிதம்பத்தினை, விலைபகரும் - விற்கும், ஆய் தொடியும் - ஆராய்ந் தெடுத்த வளையலணிந்த வேசையும், நல்லவர்க்கு - துறவறத் தார்க்கு, வைத்த - அமைத்த, அறப்புறம் - அறச்சாலையை, கொன் றானும் - அழித்தவனும், இ மூவர் - ஆகிய இம்மூவருடைய, கைத்து - பொருளை, உண்ணார் - புசியார், கற்று - (அற நூல்களைப்) படித்து, அறிந்தார் - (அதன் பொருளை உள்ளபடி) அறிந்தவர்; (எ-று.)

(க-ரை.) மதிக்கத்தக்க பெரியாரை மதிக்காதவன், விலைமாது; நல்லவர் பொருட்டு ஏற்படுத்தப்பெற்ற அறச்சாலையை அழித்தவன், ஆகிய இம் மூவரிடமும் அறிஞர் உணவு கொள்ளல் ஆகாது என்பது.

செருக்கு - மதம், செல்வக் களிப்பு, ஆல் - மூன்றன் உருபு, உடனிகழ்ச்சிப் பொருள். சிறியவன் என்பதில் சிறுமை அறிவின் மேல் நின்றது. கொல்லல் - அழித்தல், "இன்றும் வருவது கொல்லோ நெருநலும், கொன்றது போலும் நிரப்பு" என்ற திருக் குறள் கஉசஅ-ல் கொன்றது என்பதற்கு இன்னாதவற்றைச் செய்தல் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. பைத்து - பையையுடையது; பை - படம். கைத்து - கையிலுள்ளது; ஒன்றன்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர், கை - பகுதி, த் - சந்தி, து - ஒன்றன் பால் விகுதி. "வஞ்சத்தாற் பல்கின்பங் காட்டும் பாத்தையும்," என்ற பாடங்கொள்வதும் உண்டு. (உ௫)

ஒல்வதறியும் விருந்தினனு மாருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிதிற்
சீல மினிதுடைய வாசானு மிம்மூவர்
ஞால மெனப்படு வார்.

(இ-ள்.) ஒல்வது - (தனக்குச்) செய்யக்கூடியதை, அறியும் - அறியவல்ல, விருந்தினனும் - அதிதியும், ஆர் உயிரை - அருமை

யாகிய உயிரை, கொல்வது - (ஒருவன்) கொல்லுந்தொழிலை, இடை நீக்கி - கொல்வோனுக்குங் கொல்லப்படுவதற்கும் நடுவே (சென்று) விலக்கி, வாழ்வானும் - வாழ்கின்றவனும், வல்லிதின் - (மனத்தின்) உறுதியினால், இனிது சீலம் - (உயிர்க்கு) நன்மையைத் தருவதாகிய ஒழுக்கத்தை, உடைய ஆசானும் - உடைய ஆசிரியனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், ஞாலம் எனப்படுவார் - உயர்ந்தோர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவார்; (எ-று.)

(க-ரை.) பெற்றது கொண்டு மகிழும் அதிதியும், கொலையை நீக்கி வாழ்பவனும், உயிரினும் இனிய ஒழுக்கத்திற் சிறந்த ஆசிரியனும், உயர்ந்தோர் என்று சொல்லப்படுவார் என்பது.

ஒல்வது - தொழிலாகு பெயர். விருந்து - புதுமை. இப்பண்பு ஆகுபெயராய் விருந்தினனை யுணர்த்தும். விருந்தினன் - விருந்து - பகுதி, இன் - சாரியை, அன் - ஆண்பால் விகுதி. விருந்து - அறிவிருந்து அறியாவிருந்து என்றிருவகைப்படும். முன் அறிந்திருந்தமையால் குறித்து வரும் விருந்து, அறிவிருந்து. அறிந்திராமையால் குறியாமல் வரும் விருந்து, அறியா விருந்து. ஆருயிர் - ஆர் உயிர்; ஆர் - அருமை. ஆருயிர் - பண்புத் தொகை. அரு, இரு, பெரு முதலிய பண்புகள் வருமொழி முதலில் உயிர் வந்தால் முதல் நீளப்பெறும். கொல்வது - எதிர்காலத் தொழிற் பெயர். வல்லிது - வலிது என்பதன் விரித்தல் விகாரம்; குறிப்பு வினையாலணையும் பெயர். ஆசான் - ஆசாரியன்; ஞாலம் - உலகு. இங்கு ஆகுபெயராய் உலகத்து உயர்ந்தோரை உணர்த்தியது. (உசு)

உண்பொழுது நீராடி யுண்டலு மென்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலுந்—தோல்வற்றிச்
சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை யிம்மூன்றுந்
தூஉய மென்பார் தொழில்.

(இ-ள்.) உண்பொழுது - உண்ணுதற்குரிய காலத்தில், நீர் ஆடி - குளித்து, உண்டலும் - உண்ணுதலும், என்பெறினும் -

(சாட்சியாகும் பொழுது) எவ்வளவு பெரும் பயனை அடைவதா யிருந்தாலும், பால் - ஒரு பக்கம், பற்றி - சார்ந்து, சொல்லா விடுதலும் - பொய்க்கரி சொல்லாமலிருத்தலும், தோல்வற்றி - (உணவின் மையால்) உடம்பு இளைத்து, சாயினும் - அழிவதாயிருந்தாலும்; சான்று ஆண்மை - பலநற்குணங்களால் நிறைந்து அவற்றை ஆளுதல், குன்றாமை - குறையாமையும், இ மூன்றும் - இவை மூன்றும், தூஉயம் - (மனம் மொழி மெய்களால்) குற்றமற்றவர்களாயிருக்கின்றோம், என்பார் - என்று கருதுவோர், தொழில் - செயல்களாம் (எ-று.)

(க-ரை.) நீராடி யுண்பதும், பொய்க்கரி புகலாமலிருப்பதும், உயிர் நீங்கினும் சான்றாண்மை நீங்காதிருப்பதும், தூயவர் செயல்கள்.

விதித்த காலங்களில் நீராடக் கூடாமற் போனாலும் உண்ணும் பொழுதாயினும் நீராடுதல் இன்றியமையாத தென்பது. என் - எவன் என்னும் வினாப் பெயர். சான்று - அறிவின் நிறைவு; சால் என்னும் உரிச் சொல்லடியாகப் பிறந்த பெயர்; று - விகுதி. ஆண்மை - ஆளுதல்; தொழிற்பெயர். தோல் - உடம்பு, சினையாகு பெயர். வற்றி - வறுமை என்னும் பண்புப்பகுதி ஈறுகெட்டுப் பகுதி இரட்டித்து இகர விகுதி பெற்றது. தூஉயம் - உயிரளபெடை; இசை நிறைத்தற்கண் வந்தது. சான்றாண்மையாவது, பல குணங்களாலும் நிறைந்து அவற்றையாடற் றன்மை. "ஊழி பெயரினுந் தாம் பெயரார் சான்றாண்மைக், காழி யெனப்படு வார்," என்ற பொய்யாமொழிக் கிணங்கத் தோல்வற்றிச் சாயினும் என்றார். பால் - பக்கம். வள்ளுவரும் "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபாற், கோடாமை சான்றோர்க் கணி" என்று கூறியுள்ளார். இதில் ஒருபாற் கோடாமையாவது - வினா விடைகளாற் கேட்டவற்றை மறையாது பகை, நொதுமல், நட்பென்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதல். நீராடியுண்ணல் அழுக்கு முதலிய உடம்பின் குற்றம் நீங்குதலும், பால்பற்றிச் சொல்லாமையினால் பொய் முதலிய வாய்க்குற்றம் நீங்குதலும்,

சான்றாண்மை குன்றாமையினால் வஞ்சனை முதலிய மனக் குற்றம் நீங்குதலும் சொல்லப்பட்டன. (உஎ)

வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கு நோன்பிலியு
மில்லது காமுற் றிருப்பானுங்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவ
ருமிக்குத்திக் கைவருந்து வார்.

(இ-ள்.) வெல்வது - சொல்வெற்றியை, வேண்டி - விரும்பி, வெகுண்டு உரைக்கும் - (உண்மைப்பொருளை யுரைப்போரைச்) சினந்து சொல்லுகின்ற, நோன்பு இலியும் - தவம் இல்லாதவனும், (தீயோனும்.) இல்லது - (தனக்குக்) கிடைத்தற்கரிய பொருளை, காமுற்று - விரும்பி, இருப்பானும் - இருக்கின்றவனும், கல்வி - பிறன் கற்ற கல்விப் பொருளில், செவிக் குற்றம் - செவியினால் குற்றத்தை, பார்த்திருப்பானும் - ஆராய்ந்து பார்க்கின்றவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், உமி குத்தி - உமியைக் குத்தி, கைவருந்துவார் - கைவருந்துவோரை ஒப்பர் ; (எ-று.)

(க-ரை.) வெகுண்ட பேச்சால் பிறரை வெல்லக் கருதுதலும், கிட்டாததைப் பெற முயலுதலும், ஒருவன் கல்வியின் தன்மையை ஆராயாது குற்றங் கூறுதலும் உமியைக் குத்துபவர் போல் துன்பத்தையும் பயனின்மையையும் கொடுக்கும் என்பது.

வெல்வது - எதிர்காலத் தொழிற் பெயர். வெல் - பகுதி, வ் - இடைநிலை, அ - சாரியை, து - விகுதி. "வெல்வது வேண்டின் வெகுளி விடல்," என்பது நான்மணிக்கடிகை. வெகுண்டு - இறந்தகால வினையெச்சம். வெகுள் - பகுதி, ட் - இடைநிலை, உ - விகுதி, ளகரம் ணகரமானது விகாரம். நோன்பு - உயிர்க் குறுகண் செய்யாமை. "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு," என்றார் வள்ளுவரும். இலி - இல்லாதவன். உமிக்குத்தி - இரண்டாம் வேற்றுமைத் தொகை, ஒப்பர் என்னும் சொல் எஞ்சி நின்றது. (உஅ)

பெண்விழைந்து பின்செலினுந் தன்செலவிற் குன்றுமை
கண்விழைந்து கையுறினுங் காதல் பொருட்கின்மை
மண்விழைந்து வாழ்நாண் மதியாமை யிம்மூன்று
நுண்விழைந்த நூலவர் நோக்கு.

(இ-ள்.) பெண் - ஒருபெண், விழைந்து - விரும்பி, பின் செலினும் - பின் சென்றாலும், தன் செலவில் - தன்னடக்கையில், குன்றாமை - குறையாமையும், கண் விழைந்து - (தன்) இடந்தேடி, கை உறினும் - வந்து கைப்பட்டாலும், பொருட்கு - (பிறன்) பொருளிடத்தே, காதல் இன்மை - ஆசை யில்லாதிருத்தலும், மண் விழைந்து - (மனை முதலிய) நிலத்தை விரும்பி, வாழ்நாள் - (அறப்பயனை யடையாமல்) வாழ்கின்ற காலத்தை, மதியாமை - நல்லதென எண்ணாமையும், இ மூன்றும், - ஆகிய இம்மூன்றும், நுண் - நுட்பமான, நூல் - நூல்களை, விழைந்தவர் - விரும்பிக் கற்றுணர்ந்தவருடைய, நோக்கு - கருத்தாம்; (எ-று.)

(க-ரை.) முறைபிறழ்ந்து தன்னைச் சேர விரும்பும் பெண்ணைச் சேராமையும், பிறன் பொருள் வலிய வந்தெய்தினும் கைக்கொள்ளாமையும், மண்ணாசையால் விரும்பிய வாழ்நாளை மதியாமையும் நூலுணர்வுடையார் கருத்து.

விழைந்து - உகரவீற்று வினையெச்சம். பின் - இடைச்சொல். செலின் - செல்லின் என்பது லகரம் தொக்கது. செலவில் - செலவு - தொழிற்பெயர், இல் - ஐந்தாம் வேற்றுமை; நீக்கப் பொருள்; ஏழாம் வேற்றுமையுமாம். குன்றாமை - எதிர்மறைத் தொழிற் பெயர். குன்று - பகுதி. பின்செலினும், கையுறினும் - உம், எதிர்மறை. பொருள்களின் நுண்மையை அப்பொருள்களை யுணர்த்தும் நூலின்மேலேற்றி நுண்ணூல் என்றார். விழைந்த நூலவர் என்பதை நூல் விழைந்தவர் எனப் பின் முன்னாக நிறுத்தி விகுதி பிரித்துக் கூட்டுக. பொருட்கு என்னும் நான்கனுருபு ஏழாவதனிடப் பொருளில் வந்தது. நோக்கு -

முதனிலைத் தொழிற் பெயர். கருவிப் பொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர் எனலுமாம். (உக)

தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவனு
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானு
மென்று மழுக்கா றிகந்தானு மிம்மூவர்
நின்ற புகழுடை யார்.

(இ-ள்.) தன் நச்சி - தன்னை விரும்பி, சென்றாரை - அடைந்தவரை, எள்ளா ஒருவனும் - இகழாத ஒருவனும், மன்னிய- மிகுந்த, செல்வத்து - செல்வம் வந்த காலத்தில், பொச்சாப்பு - மறதியை, நீத்தானும் - நீக்கினவனும், என்றும் - பிறரிடத்துப் பகைமை யுண்டாகிய காலத்திலும், அழுக்காறு - அவரது செல்வங் கண்ட இடத்து மகிழாமையை, இகந்தானும் - (கடந்தவனும்) நீங்கினவனும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், நின்ற புகழ் உடையார் - அழியாப் புகழை யுடையார்; (எ-று.)

(க-ரை.) தன்னை மதித்து வந்தவரை இகழாமல் ஏற்றுக்கொள்வதும், செல்வம் சிறந்த காலத்தும் நண்பர் முதலியவர்களை மறவாமல் போற்றுவதும், பிறன் வாழ்வுக்கு மகிழ்வதும் புகழுக்குக் காரணமானவை என்பது.

தன்நச்சி - இரண்டாம் வேற்றுமைத் தொகை. நச்சி - நச்சு - பகுதி, இ - வினையெச்ச விகுதி. எள்ளா - எள்ளாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; மன்னிய - மன் என்னும் இடைச்சொல் லடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். பொச்சாப்பு - பொச்சா - பகுதி, பு - தொழிற்பெயர் விகுதி; ப் - சந்தி. நீத்தான் - வினையாலணையும் பெயர், நீ - பகுதி. அழுக்காறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்; அழுக்கறு - பகுதி. இகத்தல் - கடத்தல், இக - பகுதி. நின்ற - நிலைபெற்ற. (௩௰)

பல்லவையு ணல்லவை கற்றலும் பாத்துண்டாங்
கில்லற முட்டா தியற்றலும்—வல்லிதிற்

ருளி னொருபொரு ளாக்கலு மிம்மூன்றுங்
கேள்வியு ளெல்லாந் தலை.

(இ-ள்.) பல்லவையுள் - பல நூல்களிலும், நல்லவை - நல்ல நூற் பொருள்களை, கற்றலும் - கற்றுணர்தலும், பாத்து - (பிரமசாரி முதலிய பதின்மர்க்குப்) பகுத்துக் கொடுத்து, உண்டு - (தானும்) உண்டு, ஆங்கு - அந்நிலையில், இல்லறம் - இல்லாளோடு கூடிச் செய்யும் அறமானது, முட்டாது - குறைவுபடாமல், இயற்றலும் - செய்தலும், வல்லிதின் - ஊக்கத்தோடு, தாளின் - முயற்சியால், ஒரு பொருள் - செய்தற்கரிய செய்கையை, ஆக்கலும் - செய்து முடித்தலும், இ மூன்றும் - இந்த மூன்றும், கேள்வியுள் எல்லாம் - கல்விகளெல்லாவற்றிலும், தலை - சிறந்த கல்வியாம்; (எ-று.)

(க-ரை.) கற்கத் தக்கவற்றைக் கற்றலும், இல்லறத்தை முட்டின்றிச் செய்தலும், ஊக்கத்தோடு முயற்சியால் அருஞ் செயல் ஆற்றலும் தலை சிறந்தன.

பல்லவை - பல அவை. அவை - சபையுமாம். முட்டாது - எதிர்மறை வினையெச்சம். முட்டு - பகுதி. வல்லிது - வலிமை என்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்பால் வினையாலணையும் பெயர். தாளின் - இன் உருபு - ஐந்தாம் வேற்றுமை, ஏதுப் பொருள். ஆக்கல் - அல் ஈற்றுத் தொழிற் பெயர். கேள்வி - தொழிற்பெயர், தொழிலாகு பெயருமாம். கேள்வியுளெல்லாம் - உருபு மாறி நின்றது, இலக்கணப் போலி. (௧௩)

நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலு நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலு மிம்மூன்றுங்
கற்றறிந்தார் பூண்ட கடன்.

(இ-ள்.) மொழி நோக்கி - (நூல்களில்) சொற்களை ஆராய்ந்து, நுண் பொருள் - நுட்பமாகிய பொருள்களை, கொளலும் - கொள்ளு தலும், நூற்கு - நூல்களுக்கு, ஏலா - தகாத, வெண்மொழி - பய

னற்ற சொற்களை, வேண்டினும் - பிறர் விரும்பினாலும், சொல்லாமை - சொல்லா தொழிதலும், நல்மொழியை - (உயிர்க்கு உறுதி கொடுக்கும்) நல்ல சொற்களை, சிற்றினம் - கீழ்க்குலம், அல்லார் கண் - ஆகாதவரிடத்து, சொல்லலும் - சொல்லுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், கற்று அறிந்தார் - பலநூல்களையும் படித்தறிந்தவர், பூண்ட - மேற்கொண்ட, கடன் - கடமையாம்; (எ-று.)

(க-ரை.) சொற் போக்குக்கு இயையப் பொருள் கொள்வதும், பயனற்றசொற் கூறாமையும், நல்ல நூற்கருத்துக்களை அவற்றை விரும்பிப் போற்றுவார்க்குக் கற்பிப்பதும், கல்வியின் பயனும் என்றபடி.

நுண்மொழி நோக்கிப் பொருள் கொளலும் என்பதற்கு நுட்பமாகிய பொருளை யுணர்த்துஞ் சொற்களை ஆராய்ந்து அவற்றின் பொருளை யுள்ளபடி உணர்ந்து கொள்ளுதல் எனவும் பொருள் கூறப்படும். வெண் மொழி - வெண்மை மொழி - பண்புத் தொகை. வெண்மை - நுட்பமின்மை, கருத்தாழமின்மை. வேண்டினும் - உம் எதிர்மறைப் பொருள். சிற்றினம் - சிறுமை + இனம். சிறிய இனமாவது நல்லதன் நலனும், தீயதன் தீமையும் இல் லென்பவரும், விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்ட குழு. இஃது அறிவைத் திரித்து இருமையுங் கெடுக்கும் இயல்பிற்று. சொல்லாமை - இறுதி உம் - தொக்கது. (௩௨)

கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
யாலம்வீழ் போலு மமைச்சனும்—வேலின்
கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்.

(இ-ள்.) கோல் அஞ்சி - (தன்) செங்கோலைப் பயந்து, வாழும் குடியும் - வாழ்கின்ற குடியும், குடிதழீஇ - குடிகளைத் தழுவி, ஆலம் வீழ் போலும் - ஆலமரத்தின் விழுதைப்போல் (தாங்கவல்ல), அமைச்சனும் - மந்திரியும், வேலின் - வேலினிடத்து, கடை மணி

போல் - பூண்போல, திண்ணியன் - திட்பமுடையவனது, காப்பும் - காவலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், படைவேந்தன் - படையையுடைய அரசன், பற்றுவிடல் - பற்றுவிடாது ஒழுகுக; (எ-று.)

(க-ரை.) அரசியலுக்கு அடங்கி நடக்கும் குடிகளையும், குடிகளை ஓம்புவதில் சூழ்கண்ணுகை விளங்கும் அமைச்சனையும், குடியை நீங்காதபடி உறுதியாகக் காக்குந் தொழிலையும் அரசன் கைவிடலாகாது என்பது.

கோல் அஞ்சி - கோலை அஞ்சி; இரண்டாம் வேற்றுமைத் தொகை. கோலுக்கு அஞ்சி என்று நான்காம் வேற்றுமையாக்கு வாருமுளர். வாழும் - என்ற குறிப்பால் கோல் பொதுமையின் நீங்கிச் செங்கோலை யுணர்த்தியது. குடி - குடிப்பிறந்தோர். தழீஇ - செய்தென் வினையெச்சம், தழுவு - பகுதி, தழுவி என்று இருக்க வேண்டியது விகுதி கெட்டு, பகுதி தழி எனத் திரிந்து உயிர் நீண்டு அளபெடுத்து வந்தது, சொல்லிசை யளபெடை. வீழ் - வீழ்வது எனக் காரணக் குறியால் வந்தது, இகர விகுதி புணர்ந்து கெட்டது, தொழிலாகு பெயருமாம். அமைச்சன் - அரசனோடும் இருப்பவன் என்ற பொருளில் அமாத்யன் என்ற வட சொற்றிரிபு என்ப. விடல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. 'பற்றிவிடல்' என்ற பாடங்கொள்ளுமிடத்துக் கைக்கொண்டு விடா திருக்க என்று பொருள் கொள்க. (௩௩)

மூன்று கடன்கழித்த பார்ப்பானு மோர்ந்து
முறைநிலை கோடா வரசுஞ்—சிறைநின்
றலவலை யில்லாக் குடியுமிம் மூவ
ருலக மெனப்படு வார்.

(இ-ள்.) மூன்று கடன் - மூவருக்குஞ் செய்யுங் கடன்களை, கழித்த - செய்து முடித்த, பார்ப்பானும் - அந்தணனும், ஓர்ந்து - தன்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்தால் (அக்குற்றத்தை) நாடி, முறை நிலை - நீதி நிலையில், கோடா - வழுவாத, அரசும் - அரசனும், சிறை

நின்று - அரசன் ஆணைக்கு அடங்கி, அலவலை - கவலை கொள்ளு தலை. இல்லா - கொண்டிராத, குடியும் - குடிகளும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், உலகம் - உயர்ந்தோர், எனப்படுவார் - என்று சொல்லப்படுவார்; (எ-று.)

(க-ரை.) கடன் முறை தவறாப் பார்ப்பானும், முறைமாறா அரசனும், கவலையற்ற குடியும், உயர்ந்தோர் என்று புகழப்படுவார்.

மூன்று கடன் - தேவர் முனிவர் பிதிர் இவர்கட்குச் செய்யுங் கடன். இவற்றில் தேவர் கடன் வேள்வியாலும், முனிவர்கடன் வேதம் ஓதலாலும், பிதிர்க்கடன் மகப் பெறுதலாலும் தீர்க்கப்படும். ஓர்ந்து - வினையெச்சம், ஓர் பகுதி; ஆராய்; நாடு. முறை - அற நூலும் நீதி நூலும் சொல்லும் நெறி. கோடா - ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்; கோடு - பகுதி. சிறை - ஆணை. குடி தாங் கருதியபடி தீயவழியிற் சென்றால், தண்டித்து அடக்கி நல்வழியிற் செலுத்திச் சிறை போலுதலால், ஆணை சிறை எனப்பட்டது. அலவலை - அல - பகுதி, அல் - தொழிற்பெயர் விகுதி, ஐ - சாரியை. மூன்று கடன் கழித்த என்பதற்கு வேதம் ஓதல், வேள்வியாற்றல், மகப்பேறு என்ற மூன்று கடன்களையும் நிறைவேற்றின எனலுமாம். சிறை நின்று என்பதற்கு அரசனால் செய்யப்பட்ட சிறைச்சாலைப் பட்டு என்பதுமாம். அரசு, குடி என்பன உயர்திணைப் பொரு ளாயினும், சொல்லால் அஃறிணை யாதலால், பார்ப்பான் என்ற உயர்திணை ஆண்பாற் சிறப்புப்பற்றி அவை மூவர் என்ற உயர்திணை முடி பேற்றன; திணைவழுவமைதி. (௩௪)

முந்நீர்த் திரையி னெழுந்தியங்கா மேதையு
நுண்ணூற் பெருங்கேள்வி நூற்கரை கண்டானு
மைந்நீர்மை யின்றி மயலறுப்பா னிம்மூவர்
மெய்ந்நீர்மை மேனிற் பவர்.

(இ-ள்.) முந்நீர் - கடலில், திரை - அலை போல, எழுந்து - (தன்மனம்) எழுந்து, இயங்கா - அலையாத, மேதையும் - அறிவுடை

யவனும், நுண் - நுட்பமாகிய, நூல் - சிந்தனையினாலும், பெரும் கேள்வி - மிகுதியாகிய கேள்வியினாலும், நூல்கரை - நூல்களின் முடிவை, கண்டானும் - (ஐயந்திரிபறக்) கண்டவனும், மைநீர்மை - குற்றத்தன்மை, இன்றி - (தன்னிடத்தில்) உண்டாகாதபடி, மயல் - மனக்கலக்கம், அறுப்பான் - ஒழித்தவனும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், மெய்நீர்மை - அழிவின்மையாகிய தன்மையையுடைய, மேல் - முத்தி உலகத்தில், நிற்பவர் - நிற்பவர் ஆவர்; (எ-று.)

(க-ரை.) மெய்ப்பொருள் காணும் அறிவுடையவனுக்கும், நூல் தேர்ச்சி மிகுந்தவனுக்கும், உலகப்பற்றை விட வல்லவனுக்கும் முத்தி பெற ஏது உண்டு என்றபடி.

முந்நீர் - கடல்; படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத் தொழிலைச் செய்ய வல்ல நீர்; காரணக்குறி; இனி, ஆற்று நீர், ஊற்று நீர், வேற்றுநீர் ஆகிய மூன்று நீரும் சேர்ந்ததாகக் கொண் டால் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. திரை - தொழிலடியாய்ப் பிறந்த பெயர். இன் - ஐந்தனுருபு, ஒப்புப் பொருள். இயங்குதல் - நடத்தல், செல்லுதல். மேதை - அறி வுடைமை; இங்குப் பண்பாகுபெயர்; அறிவுடையவனுக் காயிற்று. நுண்ணூல் - நுண்மையாகிய நூல். நூற்கரை - ஆறும்வேற்றுமைத் தொகை. நூல் - நூல் போலுதலின் உவமையாகு பெயர். மை - காமம், வெகுளி, மயக்கம் ஆகிய முக்குற்றங்கள். மேல் - பண்பாகு பெயர். (௩௫)

ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பானுந்
தானுடன் பாடின்றி வினையாக்கு மென்பானுங்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவர் தாங்கண்ட வாறு.

(இ-ள்.) ஊன் உண்டு - ஒன்றின் மாமிசத்தைத் தின்று, உயிர் களுக்கு - உயிர்களிடத்தில், அருள் உடையேம் - தயவுடையோம், என்பானும் - என்று சொல்வானும், தான் உடன்பாடு இன்றி - தான்

(யாதொரு முயற்சிக்கும்) உடன்படாமல், வினை ஆக்கும் - ஊழ் (எல்லாம்) செய்யும், என்பானும் - என்கின்றவனும், காமுறு - (ஒரு பயனைப் பெறவேண்டிச் செய்ய) விரும்புகின்ற, வேள்வியில் - யாகத்தில், கொல்வானும் - (ஓருயிரைக்) கொலை செய்வானும், இம் மூவர் - ஆகிய இம்மூவரும், தாம் கண்ட ஆறு - தாங்கள் அறிந்த படியே, தாம் அறிவர் - தாங்கள் அறிந்தவராவர்; (எ-று.)

(க-ரை.) தன் உடலைப் பெருக்கும் விருப்புடன் உயிரைக் கொன்று தின்னும் எனக்கு உயிர்மீது இரக்கமுண்டு என்று பகர்வதும், எல்லாம் விதியினால் வருகிறதென்று சொல்லிச் சோம்பி இருப்பதும், இம்மைப் பயன் கருதிச் சில சடங்கு செய்து உயிரைக் கொல்வதும் நூல்களின் உண்மை புணராதவர் செய்கைகளாம்.

உயிர்கட்கு - உருபுமயக்கம். உடன்பாடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். வினை - ஊழ்; முன் வினைப்பயன். ஒருவன் தனக்குள் தானொன்றைக் கருதும்போது தன்னைத் தன்மைப் பன்மையாக வைத்துக் கூறுதல் மரபாதலால் உடையேம் என்பது வழாநிலை. காமுறு வேள்வியாவது - தான் விரும்பிய பொருளை அடையும் பொருட்டுச் செய்யப்படும் யாகம். அறநூலின் கருத்தை அறிவுடையோர்பாற் கேட்டு உண்மை உணர்ந்திலராதலால், தாங் கண்டவாறு தாம் அறிவர் எனப்பட்டது. ஆக்கும் என்ற குறிப்பால் வினை ஊழை உணர்த்தியது. (௩௯)

குறளையு ணட்பளவு தோன்று முறலினிய
சால்பினிற் றோன்றுங் குடிமையும்—பால்போலுந்
தூய்மையுட் டோன்றும் பிரமாண மிம்மூன்றும்
வாய்மை யுடையார் வழக்கு.

(இ-ள்.) குறளையுள் - பொருட் சுருக்கத்தினால், நட்பு அளவு - ஒருவன் நட்பின் எல்லை, தோன்றும் - காணப்படும், உறல் இனிய - பொருந்துதற்கு இனிய, சால்பினில் - (நற்குண நற்செய்கைகளின்) நிறைவில், குடிமை - உயர்குடிப் பிறப்பின் தன்மை, தோன்றும் - விளங்கும், பால் போலும் - பால்போன்ற, தூய்மையுள் - மனம்

தூயனூர்தன்மையினால், பிரமாணம் - (நிலையினது) அளவு, தோன்றும் - விளங்கும், இ மூன்றும் - இந்த மூன்றும், வாய்மை உடையார் வழக்கு - உண்மை கூறும் பெரியோரது நெறியாம்; (எ-று.)

(க-ரை.) நட்பளவு, குடிமை, பிரமாணம் இம்மூன்றும் ஒரு தன்மையவாய் நல்லாரிடத்து நிற்கும்.

குறளையுள் - குறு பகுதி. அள் - தொழிற்பெயர் விகுதி. ஐ - சாரியை, உள் - ஏழனுருபு, ஏதுப் பொருளில் மயங்கிற்று. குறளையுள் நட்பளவு தோன்றும் என்பதற்கு (நட்பின ரிருவரைப் பிரிக்கும்படி ஒருவன் சொல்லும்) கோட்சொல்லில் அக்கோளைக் கேட்டோனது நட்பினது அளவு விளங்கும் என்றுங் கூறலாம். பாலில் பிரை முதலிய பொருள்களுள் ஒன்று கலக்கின், அது கெடுதல்போல, மனத் தூய்மையில் காமம் முதலிய குற்றம் மூன்றனுள் ஒன்று கலக்கினும் அத்தூய்மை கெடுமாதலால், பால்போலுந் தூய்மை எனப்பட்டது. வாய்மை யுடையார் வழக்கு - மெய்ந்நெறி யுடையார் ஒழுங்கு எனலுமாம். வழக்கு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். தொழிலாகு பெயருமாம். சால்பினில் - இல், ஐந்தனுருபு - ஏதுப்பொருள். (ருஎ)

தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலு—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையு மிம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் படை.

(இ-ள்.) தன்னை - ஒருவன் தன்னை, வியந்து - (தானே) நன்கு மதித்து, தருக்கலும் - அகங்கரித்தலும், தாழ்வு இன்றி - அடக்கம் இல்லாமல், கொன்னே - வீணாக, வெகுளி - சினத்தை, பெருக்கலும் - பெருகச் செய்தலும், முன்னிய - கருதிய, பல் பொருள் - பலவகைப் பொருள்களையும், வெஃகும் - இச்சிக்கின்ற (விரும்புகின்ற), சிறுமையும் - சிறுமைத் தன்மையும், இம்மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், செல்வம் - (ஒருவன்) செல்வத்தை, உடைக்கும் படை - அழிக்கும் கருவி; (எ-று.)

(க-ரை.) தற்புகழ்ந்து செருக்குவதும், வீணைகச் சினங் கொள்வதும், பிறர் பொருளை விரும்புவதும் செல்வத்தைத் தேய்க் கும்படை என்றபடி.

வியந்து, தருக்கல் - விய, தருக்கு - பகுதிகள். கொன் - பயனின்மையைக் குறிக்கும் இடைச்சொல். வெகுளி - தொழிற் பெயர், வெகுள் - பகுதி. முன்னிய - முற்பட்ட என்பதுமாம் ; படை - படு என்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர். தன்னை வியத்தலால் அடக்கமின்மையும், வெகுளி பெருக்குதலால் துணையாயினவர் பிரிவும், பல பொருளையும் விழைதலால் குற்றமும் விளங்கும் என்பது. இம்மூன்றும் படை யென்று உருவகிக்கப் பட்டன. (ந-அ)

புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்
கலமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து
பொய்ம்மயக் கஞ்சூதின் கட்டங்க லிம்மூன்று
நன்மையி லாளர் தொழில்.

(இ-ள்.) புலை - இழிதன்மையோடு, மயக்கம் - கலத்தலாவது, பொருட் பெண்டிர் - பொருளை விரும்பி நிற்கும் வேசியரை, வேண்டி - விரும்பி, தோய்தல் - கூடுதலாம், கலம் மயக்கம் - பிறர் எச்சிற் கலத்தோடு கலத்தலாவது, கள் உண்டு - கள்ளைக் குடித்து, வாழ்தல் - வாழ்தலாம், சொல்லை - (பெரியோர் கூறும் உண்மை) மொழியை, முனிந்து - வெறுத்து, பொய் மயக்கம் - பொய்யோடு கலத்தலாவது, சூதின்கண் தங்கல் - சூதாட்டத்தில் இருத்தலாம் ; இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், நன்மை - அறம், இலாளர் - இல்லாதவரது, தொழில் - தொழில்களாம் ; (எ-று.)

(க-ரை.) வேசியரைச் சேர்வது நீசத்தன்மையும், கள்ளுண்ட லாகிய பிறர் எச்சிலையுண்பதும், சூதாடுமிடத்திற் சேர்வது பொய்யை மேற்கொள்வதுமாம்.

புலைமயக்கம் - புலையொடு மயக்கம், புலையை மயங்கும் மயக்கம், புலையினது மயக்கம் என்று மூன்று பொருளிலும் மயங்கும். பொருட்பெண்டிர் என்பதும் பொருளை விரும்பும் பெண்டிர் பொருளுக்கு முயங்கும் பெண்டிர், பொருளால் முயங்கும் பெண்டிர் என முப்பொருளில் மயங்கினவாறு காண்க. கள்ளுண் டென்ற குறிப்பால் வாழ்தல் கெடுதலை யுணர்த்தியது. பெண்டீர்த் தோய்தல் என்பதில் நிலைமொழி உயர்திணைப் பெயராதலாலும், இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலாலும், இயல்பில் விகார மாயிற்று. சொல் - ஈண்டு மெய். சூது தன்னாலாகும் ஆட்டத்தை யுணர்த்தியது, கருவியாகு பெயர். நன்மையிலாளர் என்பதை - நன்மை + இன்மை + ஆளர் என்று முறையே ஆறும் வேற்றுமைத் தொகையாகவும் இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும் கொள்க. (௩௧)

வெகுளி நுணுக்கும் விறலு மகளிர்கட்
கொத்த வொழுக்க முடைமையும்—பாத்துண்ணு
நல்லறி வாண்மை தலைப்படலு மிம்மூன்றுந்
தொல்லறி வாளர் தொழில்.

(இ-ள்.) வெகுளி - (தம் இடத்து எழுந்த) சினத்தை, நுணுக்கும் - சுருங்கச் செய்யும், விறலும் - வலிமையும், மகளிர் கட்கு - பெண்கட்கு, ஒத்த - இசைந்த, ஒழுக்கம் - நடையை, உடைமையும் - உடையரா யிருத்தலும், பாத்து உண்ணும் - பகுத்து உண்ணுதற்குக் காரணமாகிய, நல்அறிவு ஆண்மை - நல்லறிவை ஆளுந்தன்மையில், தலைப்படலும் - கூடுதலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், தொல் அறிவு ஆளர் - பழமையாகிய நூலறிவை ஆளுதலுடையவர், தொழில் - செயல்களாம்; (எ-று.)

(க-ரை.) எழுந்த சினத்தை அடக்குதலும், பெண்களுக்கு வயப்படாமலும், அவர்களால் வெறுக்கப்படாமலும் நடத்தலும், தக்கார்க்குக் கொடுத்துத் தானும் உண்கின்ற நன்மையோ டிருத்தலும், இன்றியமையாதன.

நுணுக்கும் - நுணுக்கு என்னும் வினையடியாகப் பிறந்த பிற வினைப் பெயரெச்சம். தன்வினைப்பகுதி - நுணுகு. விறல் - தொழிற்பெயர். விற - பகுதி, அல் - விகுதி. தொல்லறிவு - தொன்மை + அறிவு. தொன்மை - பழமை. ஒத்த ஒழுக்கமாவது தன்சொற்கு இசைந்து நடக்கும்படி செய்தலும் அவரோடு இசைந்து இன்புற்றிருத்தலுமாம். (௩௦)

அலந்தார்க்கொன் றீந்த புகழுந் துளங்கினுந்
தன்குடிமை குன்றாத் தகைமையு—மன்போடி
நாணாளு நட்டார்ப் பெருக்கலு மிம்மூன்றுங்
கேள்வியு ளெல்லாந் தலை.

(இ-ள்.) அலந்தார்க்கு - (வறுமையால்) துன்பப்பட்டு வந்தவர்கட்கு, ஒன்று - (அவர் விரும்பும்) ஒரு பொருளை, ஈந்த புகழும் - ஈந்ததனாலாகிய இசையும், துளங்கினும் - (வறுமை முதலியவற்றால்) தளர்ந்த காலத்தும், தன் குடிமை - தன் குடிப் பிறப்புக்குத் தகுந்த ஒழுக்கம், குன்றாத் தன்மையும் - குறையாத இயல்பும், அன்பு ஓடி - அன்பு மிகுந்து, நாள் நாளும் - நாடோறும், - நட்டார்—நட்புச் செய்தவரை, பெருக்கலும் - பெருகச் செய்தலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், கேள்வியுள் எல்லாம் - கேட்கப் படும் அறங்கள் பலவற்றிலும், தலை - முதன்மையானவையாம்; (எ-று.)

(க-ரை.) வறுமையால் வருந்துவோர்க்கு ஈதலும், வறுமையுற்ற விடத்தும் தன் குடிப்பிறப்புக்குத் தாழ்வானவற்றைச் செய்யாமையும், நட்புச் செய்தவரை மேல் மேலும் பெருக்குவதும் சிறந்த அறம்.

அலந்தார்க்கு - அல என்ற பகுதியடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர். ஈந்த புகழ் - ஈந்ததனலாய புகழ்; காரணப் பொருளில் வந்த பெயரெச்சம். இன்றைத்தகைமை - இன்றைமைக்கு ஏதுவாகிய தகைமை; காரணப்பொருள் தரும் பெயரெச்சம். கேள்வி - கேட்டலாலுண்டாகிய அறிவு, காரணவாகு பெயர். (௩௧)

கழகத்தால் வந்த பொருள்கா முறுமை
பழகினும் பார்ப்பாரைத் தீப்போ—லொழுகல்
உழவின்கட் காமுற்று வாழ்தலிம் மூன்று
மழகென்ப வேளாண் குடிக்கு.

(இ-ள்.) கழகத்தால் - சூதாட்டத்தினால், வந்த - கிடைத்த, பொருள் - பொருளை, காமுறுமை - விரும்பாமையும், பழகினும் - (பலநாள்) பழகினாலும், பார்ப்பாரை - பிராமணரை, தீப்போல் - தீக்கு அஞ்சி நடப்பதுபோல், ஒழுகல் - அஞ்சி நடத்தலும், உழவின்கண் - பயிர் செய்தலில், காமுற்று - விருப்பம் செலுத்தி, வாழ்தல் - வாழுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், வேளாண் குடிக்கு - வேளாண்மையுடைய குலத்துக்கு, அழகு என்ப - (பெரியோர்) அழகு என்று சொல்வர்.

(க-ரை.) சூதாடிப் பொருள் சம்பாதியாதிருத்தலும், அந்தணரை நெருப்புக்கு ஒப்பாக நினைந்து நடத்தலும், உழுது பயிர் செய்து வாழுதலும் வேளாளர்க்குச் சிறந்த அறம் ஆகும்.

காமுறுமை, ஒழுகல், வாழுதல் என்பன பெயர்ச்செவ்வெண்ணாதலால், மூன்றும் என்னும் தொகையோடு ஈற்றில் முற்றும்மை பெற்றது. காமுறுமை - எதிர்மறைத் தொழிற் பெயர். பழகினும் - உம் - எதிர்மறை. கழகம் - சூதாடுமிடம், இடவாகு பெயராய்ச் சூதை யுணர்த்திற்று. தீப்போல் ஒழுகலாவது - குளிர் காய்வார் நெருப்பை மிக நெருங்காமலும் நீங்காமலும் ஒத்த இடத்து இருப்பது போல், பார்ப்பார் இடத்தும் நின்று நடத்தல். பார்ப்பார் - மறைநூல் பார்ப்பார்; காரண இடுகுறிப் பெயர். (சஉ)

வாயி னடங்குத றுப்புரவா மாசற்ற
செய்கை யடங்குத றிப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகு மிம்மூன்றும்
வஞ்சத்திற் றீர்ந்த பொருள்.

(இ-ள்.) வாயின் அடங்குதல் - தீவழிச் செல்லாமல் காக்குதலால், துப்புரவு ஆம் - இப் பிறப்பில் அனுபவிக்கப்படும் செல்வம் உண்டாகும், செய்கை - உடலின் செய்கை, அடங்கல் - அடங்குதலால், மாசு அற்ற - குற்றம் அற்ற, திப்பியம் ஆம் - (மறுமையில்) தெய்வப் பிறப்பு உளதாகும், பொய் இன்றி - உண்மையாக, நெஞ்சம் - மனம், அடங்குதல் - அடங்குதலால், வீடு ஆகும் - முத்தி உள்ளதாகும். இ மூன்றும் - இம் மூன்று அடக்கமும், வஞ்சத்தின் - பொய்யினின்றும், தீர்ந்த - நீங்கிய, பொருள் - பொருள்களாகும் ; (எ-று.)

(க-ரை.) உளம் உரை செயல் ஆகிய மூன்றும் அடக்கமாயிருப்பவர் முத்தி யடைவர்.

துப்புரவு - உறுதியான அநுபவம் ; இங்குச் செல்வம். திப்பியம் திவ்வியம் என்ற வட சொல் திரிபு ; சொர்க்கத்தில் பிறப்பது என்பது பொருள். வீடு - அவா முதலியவற்றை விடுதலால் உளதாகும் முத்தி, காரண வாகுபெயர். நெஞ்சம் - இடவாகுபெயர். வஞ்சத்தின் - இன் - ஐந்தனுருபு - நீக்கப் பொருள். (சங)

விருந்தின்றி யுண்ட பகலுந் திருந்திழையார்
புல்லப் புடைபெயராக் கங்குலு—மில்லார்க்கொன்
றீயா தொழிந்தகன்ற காலையு மிம்மூன்றும்
நோயே யுரனுடை யார்க்கு.

(இ-ள்.) விருந்து இன்றி-விருந்தினரை இல்லாமல், உண்ட - தனித்து உண்ணக் கழிந்த, பகலும் - பகற் பொழுதும், திருந்து இழையார் - திருந்திய அணிகளை அணிந்த மனைவிகளை, புல்ல - பொருந்துவதால், புடை பெயரா - கழிதல் இல்லாத, கங்குலும் - இரவும், இல்லார்க்கு - வறியவர்க்கு ஒன்று - ஒன்றை, ஈயாது - கொடாமையினால், ஒழிந்து அகன்ற - கழிந்த, காலையும்-நாளும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், உரன் உடையார்க்கு - அறிவுடையார்க்கு, நோயே - (நினைக்குந்தோறும்) நோய்களாம் ; (எ-று.)

(க-ரை.) விருந்தில்லாப் பகலும், மனைவியில்லா இரவும், வறிஞர்க் கீயாக் காலவேளையும் அறிவுடையோர்க்கு நோய் செய்வன என்றபடி.

பகல் - தொழிலாகுபெயர். ஈயாது - வினையெச்சம்; ஒழிந்து அகன்ற - ஒரு பொருட் பன்மொழி, நோயைத் தருபவற்றை நோய் என்றது, காரணத்தைக் காரியமாகக் கூறுவதோர் உபசார வழக்கு. உரன் - உரம் என்பதன் போலி. உடையார் - உடைமை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். திருந் திழையார் என்பதற்கு மேற் பொருளின்றி, திருந்து என்பதை இழைக்கு அடையாகக் கொள்ளாது பொருள் சிறப்புக் கருதி இழையார் என்பதற்கு அடையாகக் கொள்வதும் ஆம். இழை - அணி. தொழிலாகுபெயர். (சச)

ஆற்றானை யாற்றென் றலைப்பானு மன்பின்றி
யேற்றார்க் கியைவ கரப்பானுங்—கூற்றம்
வரவுண்மை சிந்தியா தானுமிம் மூவர்
நிரயத்துச் சென்று வீழ்வார்.

(இ-ள்.) ஆற்றானை - (தான் குறித்த தொழிலை) செய்யத் திறமையற்ற ஏவலாளனை, ஆற்று என்று - செய் என்று ஏவி, அலைப்பானும் - வருத்துகின்றவனும், ஏற்றார்க்கு - தன்னிடத்தில் வந்து இரந்தவர்க்கு, இயைவ - (கொடுப்பதற்கு) இசையும் பொருளை, அன்பு இன்றி - அன்பு இல்லாதவராகி, கரப்பானும் - மறைத்து இல்லையென்று சொல்லும் செல்வனும், கூற்றம் - யமன், வரவு உண்மை - வருதலது உண்மையை, சிந்தியாதானும் - நினையாமல் தீமையைச் செய்தோனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், சென்று - உடல் அற்று நீங்கி, நிரயத்து - நரகத்தில், வீழ்வார் - விழுவார்; (எ-று.)

ஆற்றான் - வினையாலணையும் பெயர், ஆற்று - ஆய் விகுதி புணர்ந்து கெட்டு நின்ற ஏவலொருமை வினைமுற்று. ஏற்

ருர், இயைவ - வினையாலணையும் பெயர்கள்; ஏல், இயை - முத னிலைகள். நிரயம் - வடசொல். (சரு)

காறூய்மை யில்லாக் கலிமாவுங் காழ்கடிந்து
மேறூய்மை யில்லாத வெங்களிறுஞ்—சீறிக்
கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளியிம் மூன்றும்
குறுகா ரறிவுடை யார்.

**(இ-ள்.)** கால் - நடையில், தூய்மை - தூய்து ஆகுந்தன்மை, இல்லா - இல்லாத, கலிமாவும் - குதிரையும், காழ் - கட்டுத் தறியை, கடிந்து - முறித்து, மேல்தூய்மை - (வீரனிருப்பதற் கேற்ற) மேலிடம் தூயதாம் தன்மை, இல்லாத - உடையதாயிராத, வெல்களிறும் - வெல்லுதற்கரிய யானையும், கறுவி - (மாணக்கன் மேல்) வைரமடைந்து, சீறி - சீற்றங்கொண்டு, வெகுண்டு - சினந்து, உரைப்பான் - (பாடம்) சொல்லுவோனுடைய, பள்ளி - கல்விச்சாலையும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றையும், அறிவு உடையார் - (அவற்றின் பயனின்மையை) உணர்தலுடையார், குறுகார் - சேரார்; (எ-று.)

**(க-ரை.)** நடைச் சிறப்பற்ற குதிரையும், ஏறிச் செல்ல உத வாத யானையும், முகமலர்ச்சியுடன் கூறுதான் பள்ளியும் வீண் என் பது.

கால் - எண்ணலளவை யாகுபெயராகிய கால் என்பது முத லாகு பெயராய் நடையை யுணர்த்தியது. இந்நடை ஐவகைப்படும். அவை மென்னடை, விரை நடை, ஆடு நடை, சுற்று நடை, ஓட்ட நடை. கலிமா - கலிநமா என்பது நகரந்தொக்கி மருவியது போலும். கலிநம் - கடிவாளம். கலிக்கின்றமா என்னலுமாம், கலித் தல் - கனைத்தல். காழ் - பண்பாகு பெயர். சீற்றம் - சிறிது பொழுது நிகழும் சினம். வெள்களிறு - வினைத்தொகை. பள்ளி - உம் தொக்கது. குறுகார் - எதிர்மறை வினைமுற்று. (சசு)

சில்சொற் பெருந்தோண் மகளிரும் பல்வகையுந்
தாளிற்ற றந்த விழுநிதியு—நாடோறு
நாத்தளிர்ப்ப வாக்கிய வுண்டியுமிம் மூன்றுங்
காப்பிகழ லாகாப் பொருள்.

(இ-ள்.) சில் சொல் - மெல்லிய சொல்லையும், பெரும் தோள் - பெரிய தோள்களையுமுடைய, மகளிரும் - பெண்டிரும், பல்வகையும் - பலவகையாலும், தாளினல் - முயற்சியினல், தந்த - தேடிய, விழு நிதியும் - சிறப்பாகிய பொருளும், நாள்தோறும் - எப்பொழுதும், நா - நாக்கு, தளிர்ப்ப - நீர் அருந்தும்படி, ஆக்கிய - சமைத்த, உண்டியும் - உணவும், இ மூன்றும் - ஆகிய இம்மூன் றும், காப்பு - காத்தலை, இகழல் ஆகா - தாழ்த்திக் கூறுதலாகாத, பொருள் - பொருள்களாம்; (எ-று.)

(க-ரை.) பெண்டிரும், பொருளும், உண்டியும் காப்பாற்று முறையில் காப்பாற்றப் படாமற்போனல் கெட்டுப்போம் என்றபடி.

சிறு சொல் என்பது சில் சொல் என்றாயிற்று. சிறுமை - நிரம்பாமை, தந்த - இடவழுவமைதி. விழுநிதி - பண்புத்தொகை நிலைத்தொடர். தோறு - ஏழாம் வேற்றுமை இடப்பொருள்மையை யும் பன்மையையும் உணர்த்தும் இடைச்சொல். உண்டி - தொழி லடியாகப் பிறந்த பெயர். (சஎ)

வைததனை யின்சொல்லாக் கொள்வானு நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானு—மூறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.

(இ-ள்.) வைததனை - ஒருவன் வைததை, இன்சொல் ஆ - இனிய சொல்லாக, கொள்வானும் - கொள்கின்றவனும், நெய் பெய்த - நெய் வார்த்த, சோறு என்று - சோறு இது ஆம் என்று, மதிப்பானும் - மதிக்கின்றவனும், கைப்பு அதனை - கைக்கின்ற

பொருளை, கட்டி என்று - வெல்லக்கட்டி என்று, ஊறிய - தன் வாயில் ஊறும்படி, உண்பானும் - உண்கின்றவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், மெய்ப்பொருள் - உண்மையாகிய பரம் பொருளை, கண்டு வாழ்வார் - கண்டு வாழ்பவர் ஆவர்.

(க-ரை.) வன் சொல்லை மென் சொல்லாகவும், கூழைப் பாற் சோறாகவும், கைப்புணவை இனிப்புணவாகவும் கருதுகின்றவர் மெய்ப்பொரு ளுணர்ந்தவர் என்றபடி.

வைதது - படர்க்கை ஒன்றன்பால் இறந்தகாலச் செயப்பாட்டு வினையாலணையும் பெயர். ஆ - ஆக என்பதன் ஈறு தொக்கது. ஊறிய - செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். மெய்ப்பொருள் உணர்ந்தவர்கட்கு உடலுக்கும் உயிருக்கு முள்ள குண வேற்றுமைகள் தெரியுமாதலால் வைதல் உடலையன்றி உயிரைச் சேராதென்றும், கைப்பும் இனிப்பும் மண்ணின் நிலைகளே யன்றி உண்மையல்ல வென்றும் அறிந்ததனால் அறிவில் வேற்றுமை யில்லையென்று தோன்றி உடம்பின்மேல் பற்று இல்லாததுபற்றி அவற்றைப் பாராட்டார் என்பது. கூழ் - புல்லரிசி. ஊறிய கைப் பதனை என்று கொண்டு, ஊறிய என்பதற்கு மிகுந்த என்றும் பொருள் கூறலாம். இப்பொருளில் பெயரெச்சம். (சஅ)

ஏவாது மாற்று மிளங்கிளையுங் காவாது
வைதெள்ளிச் சொல்லுந் தலைமகனும்—பொய்தெள்ளி
யம்மனை தேய்க்கு மனையாளு மிம்மூவ
ரிம்மைக் குறுதியில் லார்.

(இ-ள்.) ஏவு - (பெற்றோரால்) ஏவப்பட்ட, ஆதும் - எந்தக் காரியத்தையும், மாற்றும் - தன்னால் முடியாதென மறுக்கின்ற, இளங்கிளையும் - புதல்வனும், காவாது - மனைவியைக் காவாமல், வைது - திட்டி, எள்ளி - இகழ்ந்து, சொல்லும் - பேசுகின்ற, தலைமகனும் - கணவனும், பொய் - பொய் மொழியை, தெள்ளி - ஆராய்ந்து சொல்லி, அம்மனை - தான் வாழ்கின்ற வீட்டின் செல்

வத்தை, தேய்க்கும் - அழிக்கும், மனையாளும் - மனைவியும், இ மூவரும் - ஆகிய இம்மூவரும், இம்மைக்கு-இப்பிறப்பில், உறுதி யில்லார் - எவருக்கும் பயனில்லாதவர் ஆவர் ; (எ-று.)

(க்-ரை.) ஏவிய சொற் கேளா மக்களும், மனைவியைப் போற் றுக் கணவனும், வீட்டுப் பொருளை வீணே அழிக்கின்ற மனைவியும் இம்மையில் எவருக்கும் பயனற்றவர்.

ஏவாதும் ஆற்றும் இளங்கிளை என்று கொண்டு சொல்லாத காரியத்தையும் தன் விருப்பம்போல் செய்கின்ற புதல்வன் எனலு மாம். ஆது - யாது என்பதன் மரூஉ; உம் - இழிவு சிறப்பும், முற் றுப் பொருளும் தாநின்றது. எள்ளி - எள் என்னும் முதனிலையடி யாகப் பிறந்த வினையெச்சம். தலைமகன் - கணவன். இம்மைக்கு என்பதில் இழிவு சிறப்பு உம் தொக்கது; கு-உருபு மயக்கம். மனை தன்னிடத்திலுள்ள செல்வத்தை யுணர்த்தலால் இடவாகு பெயர். தேய்க்கும் - பிறவினைப் பெயரெச்சம். தேய் - தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது. உறுதி - தொழிலாகு பெயர். (௩௧)

கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனு
முள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரு
மில்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்.

(இ-ள்.) கொள்பொருள் - தான் கொள்ளுதற்குரிய பொருளை, வெஃகி - விரும்பி, குடி அலைக்கும் - குடிகளை வருத்துகின்ற, வேந் தனும் - அரசனும், உள்பொருள் - உண்மை நிகழ்ச்சியை, சொல்லா- சொல்லாமல், சலம் மொழி - பொய் சொல்லுகின்ற, மாந்தரும் - மனிதரும், இல் இருந்து - (ஒருவனுக்கு) மனையாளாய் வீட்டி லிருந்து, எல்லை - (அவன் சொல், மனை என்னும் இரண்டின்) எல் லையை, கடப்பாளும் - கடந்து நடப்பவளும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், வல்லே - விரைந்து, மழை அருக்கும் - மழையைக் குறைக்கின்ற, கோள் - கோள்களாம்; (எ-று.)

(க-ரை.) குடி கொன்று இறை கொள்ளும் கொடுங்கோல் மன்னனும், பொய் பேசுகின்றவனும், பெண்தன்மை மீறி நடக்கின்ற பெண்ணும் இருக்கும் நாட்டில் மழை பெய்யாதென்பது.

கொள் பொருள் - வினைத்தொகை. இறை - வரி. உள் பொருள் - பண்புத்தொகை. சொல்லா - மல் ஈறு தொக்க வினை யெச்சம். வல்லே - இடைச்சொல். அருக்கும் - பிறவினைப் பெய ரெச்சம். அருகு - தன் வினைப்பகுதி. கோள் - வலி; தங்கள் இயக் கத்தால் ஒருவனுக்கு நன்மையேனும் தீமையேனும் வருவிக்கும் கிரகங்களுக்கு ஆதலால், பண்பாகு பெயர். (ருய)

தூர்ந்தொழுகிக் கண்ணுந் துணைக டுணைகளே
சார்ந்தொழுகிக் கண்ணுஞ் சலவர் சலவரே
யீர்ந்தகல் லின்னுக் கயவ ரிவர்மூவர்
தேர்ந்தக்காற் றோன்றும் பொருள்.

(இ-ள்.) தூர்ந்து - (பொருள் வருவாய்) அடைபட்டு, ஒழுகிக் கண்ணும் - (இல்லாமல்) வாழுமிடத்தும், துணைகள் - உறவாவோர், துணைகளே - உறவினரே யாவர்; சார்ந்து - கருத்துக்கு இணங்கி, ஒழுகிக் கண்ணும் - நடந்த விடத்தும், சலவர் - பகைவர், சலவரே - பகைவரே, இன்னு - துன்பஞ்செய்யுங் குணமுள்ள, கயவர் - கீழ்மக்கள், ஈர்ந்த - பிளக்கப்பட்ட, கல் - கல்லை ஒப்பாவர், இவர் மூவர் - இவர் மூவரும், தேர்ந்தக்கால் - (அறிவுடையோர்) ஆராயு மிடத்து, தோன்றும் - வெளிப்படும், பொருள் - பொருள்க ளாவர்; (எ-று.)

(க-ரை.) வறுமைக் காலத்தும் உறவினர்களே உதவிபுரிபவர், எவ்வளவு நெருங்கிப் பழகினும் பகைவர் பகைவரே, கற்பிளப்பைப் போல் என்றும் ஒன்று கூடாதவர் அற்பர், இவர்கள் தன்மை ஆராய்ந்து சொல்லப்பட வேண்டுபவை.

ஒழுகியக்கண் என்பதில் அகரம் தொக்கு ஒழுகிக்கண் என்று வந்தது; கண் ஈற்று வினையெச்சம். தேர்ந்தக்கால் - இது

கால் ஈற்று வினையெச்சம். உம் இரண்டும் இறந்தது தழீஇயதனோடு உயர்வு சிறப்பில் வந்தன. ஏ - இரண்டும் தேற்றம். துணை - பண்பாகுபெயர். கல் பொருள் இரண்டும் உவமையாகுபெயர்கள். தேர்ந்தக்கால் தோன்றும் பொருள் எனவே, தேராதவிடத்து இத் தன்மையது எனத் தோன்றாப் பொருளாவார். (௫௧)

கண்ணுக் கணிகலங் கண்ணோட்டங் காமுற்ற 51
பெண்ணுக் கணிகல நாணுடைமை—நண்ணு
மறுமைக் கணிகலங் கல்வியிம் மூன்றுங்
குறியுடையார் கண்ணே யுள.

(இ-ள்.) கண்ணுக்கு - கண்களுக்கு, அணிகலம் - அணியத் தக்க பூணுவது, கண்ணோட்டம் - கண்ணோடுதல், காமுற்ற - (கணவனால்) விரும்பப்பட்ட, பெண்ணுக்கு - குலமகளுக்கு, அணிகலம் - அணிகலனாவது, நாண் உடைமை - நாணம் உடையவளாயிருத்தல், நண்ணும் - பொருந்துகின்ற, மறுமைக்கு - மறு பிறப்புக்கு, அணிகலம் - அணிகலனாவது, கல்வி - கல்வி அறிவு, இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், குறிஉடையார் கண்ணே-ஆராயும் இயல்புடையாரிடத்தே, உள - உண்டு ; (எ-று.)

(க-ரை.) கண்ணோட்டத்தாற் கண்ணும், நாணத்தாற் பெண்ணும், கல்வியால் மறுமையும் அழகு பெறும் என்பது.

அணிகலம் - வினைத்தொகை. கண்ணோட்டமாவது தன்னோடு பழகினவர் சொன்னவற்றை மறுக்கமாட்டாமை. அஃது அவர் மேல் கண் சென்ற பின்பே உண்டாவதுபற்றி, கண்ணோட்டம் - காரண ஆகுபெயர். நாணம் - பெண்கட்குரிய நாற்குணங்களில் முதன்மையானது, மற்றவை மடம் அச்சம் பயிர்ப்பு என்பன. ஓட்டம் - அம்- கருவிப் பொருளுணர்த்தும். உடைமை - இடைநிலைத் தீவகவணி. சிற்றுயிர்க்கு உற்ற துணையாகிய கல்வி ஒருவனுக்கு இம்மையில் நன்மையைச் செய்து மறுமையிலும் இன்பந் தருதலால் மறுமைக்கு அணிகலம் என்றார். உள - உண்மை என்னும் பண்படியாகப் பிறந்த பலவின்பால் வினைமுற்று. (௫௨)

குருடன் மனையா ளழகு மிருடீரக்
கற்றறி வில்லான் கதழ்ந்துரையும்—பற்றிய
பண்ணிற் றெரியாதான் யாழ்கேட்பு மிம்மூன்று
மெண்ணிற் றெரியாப் பொருள்.

(இ-ள்.) குருடன் - குருடனுடைய, மனையாள் - மனைவியினது, அழகு - அழகும், இருள்தீர - மயக்கம் நீங்க, கற்று - (உண்மை நூலைக்) கற்று, அறிவில்லான் - அதன் பொருளை அறியாதவன், கதழ்ந்து - விரைந்து, உரையும் - சொல்லுகின்ற சொல்லும், பற்றிய - பொருந்திய, பண்ணின் - பண்களை, தெரியாதான் - அறியாதவன், யாழ் - யாழின் இசையை, கேட்பும் - கேட்டலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், எண்ணின் - ஆராயின், தெரியா - மூவர்க்கும் முறையே தெரியாத, பொருள் - பொருள்களாம்; (எ-று.)

(க-ரை.) குருடனுக்கு அவன் மனைவியழகும், படிப்பில்லாதவன் அவையிற் பேசும் பேச்சும், இசையில்லாதவன் கேட்கும் பாட்டும் பயனற்றவை என்பது.

இருள் - பேதைக்குணம்; உவமையாகு பெயர். கதழ்ந்து - கதழ் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். உரை - முதனிலைத் தொழிற்பெயர். யாழ் - கருவியாகுபெயர். கேட்பு - பு ஈற்றுத் தொழிற் பெயர். பற்றிய - விரும்பப்பட்ட எனலுமாம். பண் - காரியவாகு பெயர். (ருங)

தன்பயந் தூக்காரைச் சார்தலுந் தாம்பயவா
நன்பயங் காய்வின்கட் கூறலும்—பின்பயவாக்
குற்றம் பிறர்மே லுரைத்தலு மிம்மூன்றுந்
தெற்றெனவில்லார் தொழில்.

(இ-ள்.) தன்பயன் - தனக்கு வரும் பயனை, தூக்காரை - ஆராய்ந்து அதற்கு உதவி செய்யாதாரை, சார்தலும் - அடுத்தலும்,

காய்வின்கண் - ஒருவன் சினமுற்ற காலத்து, தாம்பயவா - தாம் பயன்படாமல் போவனவாகிய, நல்பயம் - நன்மையாகிய பயனைத் தரும் மொழிகளை, கூறலும் - சொல்லுதலும், பின்பயவா - பின்னே பயன்படுதலில்லாத, குற்றம் - குற்றங்களை, பிறர்மேல் - மற்றவர்கள் மேல், உரைத்தலும் - சொல்லுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், தெற்றெனவு - (இன்னது இன்ன பயனைத் தரும் என்பதனைத்) தேறுதல், இல்லார் - இல்லாதவருடைய, தொழில் - செய்கையாம்; (எ-று.)

(க-ரை.) தனக்கு உதவியற்றவரைச் சேர்தலும், சினமுற்ற காலத்தில் பயனற்ற மொழிகளைப் பேசுதலும், மனவருத்தத்துடன் வீணுகக் குற்றத்தைச் சாட்டுதலும் அறிவின்மை என்றபடி.

பயம் - பயன். தூக்கார் - வினையாலணையும் பெயர். தெற்றெனவு - தெற்று என்னும் முதனிலையடியாகப் பிறந்த தொழிற் பெயர். காய்வு - தொழிற் பெயர். (ருச)

அருமறை காவாத நட்பும் பெருமையை
வேண்டாது விட்டொழிந்த பெண்பாலும்-யாண்டானுஞ்
செற்றங் கொண்டாடுஞ் சிறுதொழும்பு மிம்மூவ
ரொற்ரு ளெனப்படு வார்.

(இ-ள்.) அருமறை - பிறர்க்கு வெளிப்படுத்தக் கூடாத மறை மொழியை, காவாத - காப்பாற்ருத, நட்பும் - நட்பாளனும், பெருமையை - பெருமைக் குணத்தை, வேண்டாது - விரும்பாமல், விட்டு - தலைவன் குறைகளை வெளிப்படுத்தி, ஒழிந்த - தருமத்தின் நின்றும் நீங்கிய, பெண்பாலும் - பெண்ணும், யாண்டானும் - எங்காயினும், செற்றம் கொண்டு - கோபம் கொண்டு, ஆடும் - அவன்மேல் குற்றங் கூறுகின்ற, சிறு தொழும்பும் - குற்றேவலாள னும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், ஒற்ருள் எனப்படுவார் - ஒற்றர்களை ஒப்பரென்று சொல்லப்படுவார்; (எ-று.)

(க-ரை.) ஒருவன் மறை மொழியை வெளிப்படுத்தும் நண்பனும், உள்ளபெருமையும் ஒழிக்கக் கருதும் பெண்ணும், தலைவரிடம் பகை பாராட்டும் வேலையாளனும் ஒற்றரை ஒத்தவர் என்பது.

அருமறை - அருமை மறை. அருமை - சொல்லக் கூடாமை. மறை - மறைக்கப்படுவது; செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டது. நட்பு, தொழும்பு அவற்றையுடையவர்க்கு ஆகுபெயர். பெருமை - ஒரு பெண்ணுக்குக் கற்பால் உண்டாகும் பெருமை. அறத்தில் நீங்கிய பெண் உருவில் மட்டும் பெண்ணே என்பார் பெண்பால் என்றார். யாண்டு என்பது தன் தலைவனுக்குப் பகைவர் அயலார் நட்பினராகிய இடம். ஆன் - ஆயின் என்பதன் மரூஉ. ஆடுதல் - பேசுதல். ஒற்றாள் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. ஒற்று - துறந்தார் முதலிய மாற்றுருக் கொண்டு பகைவரிடஞ் சென்று ஒன்றுபட்டு அங்கு நடப்பனவற்றை அறிந்து வந்து உரைப்பவர். ஒற்று - முதனிலைத் தொழிலாகுபெயர். (ருரு)

முந்தை யெழுத்தின் வரவுணர்ந்து பிற்பாடு
தந்தையுந் தாயும் வழிபட்டு—வந்த
வொழுக்கம் பெருநெறி சேர்தலிம் மூன்றும்
விழுப்ப நெறிதூரா வாறு.

(இ-ள்.) முந்தை - (முன்னதாகிய) இளமைப்பருவத்தில், எழுத்தின் வரவு - கல்வியறிவு உண்டாதலும், பிற்பாடு - அதன் பின்பு, உணர்ந்து - கல்விப்பொருள் உணர்ந்து, தந்தையும் தாயும் - தந்தையையும் தாயையும், வழிபட்டுவந்த - போற்றிவந்த, ஒழுக்கம் - ஒழுக்கமும், பெரு நெறி - பெரியோரது வழியை, சேர்தல் - சேர்தலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், விழுப்ப நெறி - உயர்வாகிய நெறியை, தூரா ஆறு - தூர்க்காத வழியாம்; (எ-று.)

(க-ரை.) இளமையில் கல்வி கற்றுப் பெற்றோர்களை வழிபட்டுப் போற்றிச் சான்றோர் செல்லும் நெறியிற் செல்லுதல் ஒருவனுக்கு உயர்வாம்.

முந்தை - பண்புப் பெயர். இஃது இளமையின் மேல் நின்றது. எழுத்தின் வரவு - எழுத்தினது வரவு. ஆறுவது வினைமுதற் பொருண்மையில் வந்த காரகம். தூரா என்ற ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சத்தின் முதல் நிலையாகிய தூர் என்பது தன்வினை பிறவினை யிரண்டுக்கும் பொது. விழுப்ப நெறி - விழுப்பத்தை யுடைய நெறி எனின் இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்க தொகை. (௫௬)

கொட்டி யளந்தமையாப் பாடலுந் தட்டித்துப்
பிச்சைபுக் குண்பான் பிளிற்றலுந்—துச்சிருந்தா
ளுளுங் கலங்கா முறுதலு மிம்மூன்றுங்
கேள்வியு ளின்னா தன.

(இ-ள்.) கொட்டி - தாளவோசையால், அளந்து - அளவிட்டு, அமையாப்பாடலும் - அதற்குத் தகுந்தபடி பாடாத பாட லும்; தட்டி - கைதட்டி, துப்பிச்சை - சோற்றுப் பிச்சைக்கு, புக்கு - போய், உண்பான் - வாங்கி உண்பவனுடைய, பிளிற்றலும் - இரைதலும், துச்சு இருந்தான் - ஒதுக்குக் குடியிருந்தவன், ஆளும் கலம் - (அவ்வில்லத்தான்) ஆளும் பண்டங்களை, காமுறுதலும் - விரும்புதலும், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், கேள்வியுள் - கேட்கப்படுபவைகளுள், இன்னாதன - இன்பத்தைத் தாராதனவாம்; (எ-று.)

(க-ரை.) தாளத்துக்கு ஒவ்வாப் பாட்டும், பிச்சையெடுத் துண் பான் பேரிரைச்சலும், ஒட்டுக்குடியன் பெரும் வீட்டின் பொரு ளைக் கருதுதலும் இன்பத்தைத் தாராதவை.

கொட்டி - தொழிலடியாகப் பிறந்த பெயர்; இ - செயப்படு பொருள் விகுதி: ஓசையை யுணர்த்தின் கருவியாகு பெயர். து - உணவு, முதனிலைத் தொழிலாகு பெயர். துச்சு - சிறிது பொழுது தங்குமிடம். (௫௭)

பழமையை நோக்கி யளித்தல் கிழமையாற்
கேளீ ருவப்பத் தழுவுதல்—கேளீராய்த்
துன்னிய சொல்லா லினந்திரட்ட லிம்மூன்று
மன்னற் கிளையான் றொழில்.

(இ-ள்.) பழமையை - (நண்பரின்) பழையராகுந் தன்மையை, நோக்கி - பாராட்டி, அளித்தல் - (அவருக்கு வேண்டுவன கொடுத்து) காப்பாற்றுதலும், கேளிர் - சுற்றத்தார், உவப்ப - மகிழும்படி, கிழமையால் - உரிமையால், தழுவுதல் - அணைத்தலும், கேளிர்ஆய் - உறவினராய், துன்னிய - சூழும்படி, சொல்லால் - இன்சொற்களால், இனம் திரட்டல் - நல்லினத்தைக் கூட்டலும்; இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், மன்னற்கு இளையான் - இளவரசனுடைய, தொழில் - தொழில்களாம்; (எ-று.)

(க-ரை.) இளவரசனா யிருப்பவன் தன் முன்னோரோடு பழகி வந்த அமைச்சர் முதலியோரைப் பேணுதலும், இனத்தாரை உரிமையுடன் காப்பாற்றுதலும், நல்லவரைத் தனக்கு நட்பாக்குதலும் செய்யவேண்டும் என்பது.

பழமையாவது - பழமையோர் உரிமையால் செய்வனவற்றைச் சிறிதும் சிதையாது அவர்க்கு உடன்படும் நட்பு. துன்னிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அமைச்சன் அரசனுக்கு இணையாயிருத்தல்பற்றி மன்னற் கிளையான் அமைச்சன் எனலுமாம். திரட்டல் - பிறவினைத் தொழிற் பெயர். (ருஅ)

கிளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவு—மிளையனைக்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையு மிம்மூன்று
முள்ளன போலக் கெடும்.

(இ-ள்.) கிளைஞர்க்கு - சுற்றத்தார்க்கு, உதவாதான் - உதவாதவனுடைய, செல்வமும் - பொருளும், பைங்கூழ் - பசிய பயிர்,

விளைவின்கண் - தனக்குப் பயன் கொடுக்குங்காலத்து, போற்றான்- அதனைக் காக்கும் இயல்பில்லாதவனுடைய, உழவும் - உழவுத் தொழிலும், இளையனாய் - இளையனாயிருந்து, கள் உண்டு - கள்ளைக் குடித்து, வாழ்வான் - வாழ்கின்றவனுடைய, குடிமையும் - குடிப் பிறப்பும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், உள்ளன போல - நிலைநிற்பனபோலத் தோன்றி, கெடும் - அழியும் ; (எ-று.)

(க-ரை.) செழுங்கிளை தாங்காதான் செல்வமும், விளையுங் காலத்திற் காவாதான் பயிரும், இளமை தொட்டே கள்ளுண்கின்ற வன் நற்குடி வாழ்க்கையும் கெட்டுப்போம் என்பது.

கிளைஞர் - சுற்றத்தார். இளையன் - அறிவில் சிறியவன் என லுமாம். தோன்றி - சொல்லெச்சம். பைங்கூழ் - பசுமை + கூழ் - பசுமை - இளமை. (ருக)

பேஎய்ப் பிறப்பிற் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெருவும்—புலந்தெரியா
மக்கட் பிறப்பி னிரப்பிடும்பை யிம்மூன்றுந்
துக்கப் பிறப்பாய் விடும்.

(இ-ள்.) பேஎய் பிறப்பில் - பேயினது பிறப்புடையவர்களில், பெரு பசியும் - மிக்க பசியும், பாஅய் விலங்கின் - பாயும் இயல்புடைய மிருகப் பிறப்படைந்த உயிர்களில், வெருவும் - அச்சமும், புலம் தெரியா - அறிவாகிய பொருளை உணராத, மக்கள் பிறப்பின்- மனிதப் பிறப்படைந்த உயிர்களில், நிரப்பு - வறுமையும், இடும்பை - துன்பந் தருவனவாம் ; இ மூன்றும் - இம்மூன்று பிறப்புயிர்களும், துக்கப் பிறப்பு ஆய்விடும் - துன்பமாகிய பிறப்புள்ள உயிர்களாய் விடும் ; (எ-று.)

(க-ரை.) பேய்ப்பிறப்பில் பசிவருத்தமும், விலங்குப் பிறப்பில் கொலைப் பயமும், மக்கட் பிறப்பில் வறுமைத்துன்பமும் மிகுந் திருக்கின்றமையால் எப்பிறப்பும் நலமுடையதன்று, பிறப்பு நீங்க முயலவேண்டும் என்பது.

பேஎய், பாஅய் - செய்யுளிசைநிறை அளபெடைகள். வெருவு - தொழிற் பெயர். நிரப்பு - மங்கல வழக்கு; எதிர்மறை இலக்கணை யால் நிரம்பாமையை யுணர்த்தி அதன் காரணமாகிய வறுமைக்கு ஆகுபெய ராயிற்று. (சுய)

ஐயறிவுந் தம்மை யடைய வொழுகுத
லெய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலு
மாறேற்கு மன்னர் நிலையறித லிம்மூன்றுஞ்
சீரேற்ற பேரமைச்சர் கோள்.

(இ-ள்) ஐஅறிவும் - ஐம்பொறிகளின் அறிவும், தம்மை அடைய - (தீயவழியில் செல்லாது) தம்மிடத்து அடங்கி நிற்கும்படி, ஒழுகுதல் - நடத்தலும், எய்துவது - அரசனுக்கு வருவதாகிய தீங்கை, எய்தாமை - வாராதபடி, முன்காத்தல் - முன் அறிந்து தடுத்தலும், வைகலும் - நாடோறும், மாறு - (தம்முடைய) பகைமையை, ஏற்கும் - ஏற்றுக்கொள்ளுதற்குரிய, மன்னர் நிலை - அரசருடைய இருப்பை, அறிதல் - ஒற்றர்களால் அறிந்து அதற்குத் தக்கபடி செய்தல், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், சீர் ஏற்ற - புகழை மேற்கொண்ட, பேர் அமைச்சர் - பெருமையாகிய அமைச்சர்களின், கோள் - துணிவுகளாம்.

(க-ரை.) பேரமைச்சர்கள் ஐம்பொறிகளை அடக்கி நடத்தவும், அரசனுக்குத் தீங்கு வாராமல் காக்கவும், பகைவருடைய நிலைமையை அறிந்து நடக்கவும் வல்லவர்களாயிருக்க வேண்டும்.

ஐம்பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி. எய்துவது - எய்து என்னும் வினையினடியாகப் பிறந்த எதிர்கால வினையாலணை யும் பெயர். மாறு - முதனிலைத் தொழிற் பெயர். நிலை - தொழிற் பெயர். (சுக)

நன்றிப் பயன்றூக்கா நாணிலியுஞ் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பா டுரைப்பானு—நன்றின்றி

வைத்த வடைக்கலங் கொள்வானு மிம்மூவ
ரெச்ச மிழந்துவாழ் வார்.

(இ-ள்.) நன்றிப்பயன் - ஒருவன் தனக்குச் செய்த நன்றியின் பயனை, தூக்கா - அளந்தறியாத, நாண் இலியும் - நாணமில்லாதவனும், சான்றோர் முன் - பெரியவர் முன்னே, மன்றில் - அறநிலையத்தில், கொடும்பாடு - பொய்ச் சொல்லை, உரைப்பானும் - சொல்லுகின்றவனும், நன்று இன்றி - நற்செய்கை இல்லாதவனாய், வைத்த - ஒருவன் வைத்த, அடைக்கலம் - அடைக்கலப் பொருளை, கொள்வானும் - கைப்பற்றிக் கொள்பவனும், இ மூவர் - ஆகிய இந்த மூவரும், எச்சம் இழந்து - தம்மக்களை இழந்து வருந்தி, வாழ்வார் - உயிர் வாழ்வார்; (எ-று.)

(க-ரை.) நன்றி மறந்த நாணிலியும், மன்றிற் பொய்ச்சாட்சி புகன்றவனும், அடைக்கலப் பொருளை வெளவியவனும் மக்கட்பேறற்று வருந்துபவர் என்பது.

கொடும்பாடு - பண்புத் தொகை. கொடுமை - வளைவு. எச்சம் - எஞ்சுவது, தொழிற் பெயர்; ஒருவன் இறந்த பின் மிகுந்து நிற்பது மக்களும் புகழும் ஆதலால் இரண்டும் கூறலாம். நாணிலி என்பதில் இகரம் ஆண்பாலை யுணர்த்தியது. வாழ்வார் - வாழார் என உடன்பாட்டில் வந்த எதிர்மறை. அடைக்கலம் - பண்பாகு பெயர். (சுஉ)

நோவஞ்சா தாரோடு நட்பும் விருந்தஞ்சு
மீர்வளையை யில்லத் திருத்தலுஞ்—சீர்பயவாத்
தன்மையி லாள ரயலிருப்பு மிம்மூன்று
நன்மை பயத்த லில.

(இ-ள்.) நோ - (தமக்கு வரும்) துன்பத்துக்கு, அஞ்சாதாரோடு - பயப்படாதவரிடத்து, நட்பும் - கொண்ட நட்பும், விருந்து அஞ்சும் - விருந்தினர்க்கு உண்டி கொடுக்க அஞ்சுகின்ற, ஈர் வளையை - மனைவியை, இல்லத்து - மனையினிடத்தில், இருத்

தலும் - இருக்கச் செய்தலும், சீர் பயவா - சிறப்பைத் தராத, தன்மை - தன்மையையுடைய, இல் ஆளர் - இல் வாழ்வோருக்கு, அயல் இருப்பும் - அயலில் குடியிருத்தலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நன்மை - நன்மையை, பயத்தல் இல - தருதலில்லன வாம்; (எ-று.)

(க-ரை.) வருந் துன்பத்துக்கு அஞ்சா நண்பரின் நட்பும், விருந் தோம்பாத மனைவியோடிருப்பும், நற்குணமில்லாதவர் அயலிற் குடி யிருப்பும் பயனற்றவை என்பது.

நோ - முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஈர்வளை - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; பைந்தொடி என்னும் பொருளஃது. ஈர் - வினைத்தொகையாயின் அறுக்கப்பட்ட என்னும் பொருட்டு. வளை - பண்பாகு பெயர். (சுரு)

நல்விருந் தோம்பலி னட்டாளாம் வைகலு
மில்புறஞ் செய்தலி னீன்றதாய்—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன்றுங்
கற்புடையாள் பூண்ட கடன்.

(இ-ள்.) நல்விருந்து - நன்மையான விருந்தினரை, ஓம்பலின் - பாதுகாத்தலால், நட்டாள்ஆம் - கணவனுக்கு நட்பினளாம்; வைக லும் - நாடோறும், இல் - இல்லறத்தை, புறஞ்செய்தலின் - (வழு வாது) காத்தலால், ஈன்ற தாய் (ஆம்) - பெற்ற தாயாம்; தொல் குடியின் - தன் பழைய குடும்பத்துக்குரிய, மக்கள் பெறலின் - மக்களைப் பெறுதலால், மனைக் கிழத்தி (ஆம்) - மனையாளாம்; இ மூன்றும் - (விருந்தோம்பல் முதலிய) இம்மூன்று செயலும்; கற்பு உடையாள் - கற்பையுடைய பெண், பூண்ட - மேற்கொண்ட, கடன் - கடமைகளாம்; (எ-று.)

(க-ரை.) விருந்தோம்பல், மனையறம்போற்றல், மக்கட்பெறு தல் இவற்றைச் செய்யும் பெண்ணே கற்புடைப் பெண் என்பது.

மனைக் கிழத்தி - மனைவி. கிழமையுடையவள் - கிழத்தி. புறஞ்செய்தல் என்பதில் புறஞ்செய் ஒரு சொல். விருந்தினர்க்கு நன்மையாவது, இல்வாழ்வானால் இயன்றவளவு தந்த உண்டி முதலியவற்றை ஏற்று மகிழ்தல். ஆம் என்பதனை தாய் கிழத்தி என்பவற்றோடுங் கூட்டுக. தொன்மை குடி - தொல் குடி, தொன்மை - பழமை; அதாவது தொன்றுதொட்டு வருவது. (கூ௪)

அச்ச மலைகடலிற் றோன்றலு மார்வுற்ற
விட்டகல கில்லாத வேட்கையுங்—கட்டிய
மெய்ந்நிலை காணா வெகுளியு மிம்மூன்றுந்
தந்நெய்யிற் றம்பொரியு மாறு.

(இ-ள்.) அலைகடலின் - அலைகின்ற கடலைப்போல், அச்சம் தோன்றலும் - மாறி மாறிப் பெரும்பயம் (ஒருவர் உள்ளத்தில்) தோன்றுதலும், ஆர்வு உற்ற - அனுபவித்தவற்றை, விட்டு அகல கில்லாத - விட்டு நீங்கமாட்டாத, வேட்கையும்-விருப்பமும், கட்டிய - (அறிவுடையோரால்) யாக்கப்பட்ட செய்யுள்களின், மெய்ந்நிலை - பொருளின் உண்மை நிலையை, காணா வெகுளியும் - அறியாத சினமும், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், தந்நெய்யில் - (ஆடு முதலானவை) தம்மிடத்துப் பிறந்த நெய்யிலே, தாம் பொரியும் ஆறு - தாம் பொரிகின்ற வகைபோல எவரிடத்துப் பிறந்தனவோ அவரைத் தம்மில் வேவச் செய்வனவாம்; (எ-று.)

(க-ரை.) நெஞ்சில் எஞ்சா அச்சமும், நீக்கமாட்டாத வேட்கையும், உண்மை யுணராமையா லுண்டாகும் சினமும் ஒருவனுக்கு மிகுந்த வருத்தத்தைச் செய்வனவாம் என்றபடி.

அலைகடல் - வினைத்தொகை, கடலின் - இன் ஐந்தாம்வேற்றுமையுருபு, ஒப்புப்பொருள். ஆர்வு - தொழிலாகுபெயர். கட்டிய மெய்ந்நிலை என்பதற்குப் பெரியோரால் உறுதியாகத் தழுவப்பட்ட மெய்யினது நிலை எனினுமாம். ஆடு முதலானவை - இசை யெச்சம். அகல கில்லாத - இதில் கில் ஆற்றலுணர்த்தும் இடைநிலை. (கூரு)

கொழுநனை யில்லாள் கறையும் வழிநிற்குஞ்
சிற்றாளில் லாதான்கைம் மோதிரமும்—பற்றிய
கோல்கோடி வாழு மரசனு மிம்மூன்றுஞ்
சால்போடு பட்ட தில.

(இ-ள்.) கொழுநனை - கணவனை, இல்லாள் - இல்லாதவளது, கறையும் - மாதவிடாயும், வழிநிற்கும் - தன் ஏவலின் வழியில் நிற்கின்ற, சிறு ஆள் - சிற்றாளை, இல்லாதான் - இல்லாதவனுடைய, கைமோதிரமும் - கைவிரலில் அணிந்த மோதிரமும், பற்றிய - தான் மேற்கொண்ட, கோல் - ஆளும்முறை, கோடி - தப்பி, வாழும் அரசனும் - வாழ்கின்ற அரசனும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், சால்போடு - நிறையோடு, பட்டது இல - பொருந்திய சிறப்புடையன அல்லவாம்; (எ-று.)

(க-ரை.) புருடன் இல்லாதவள் பூப்பும், சிற்றாளில்லான் செங் கையாழியும், கொடுங்கோல் அரசும் சிறப்பற்றவை என்பது.

கொழுநன் - மனையாளுக்கு உறுதியாகிய துணையாயுள்ளவன். கறை - கறுப்பு. கோடி - கோடு முதனிலை, இகரம் வினையெச்ச விகுதி. சால்பு - நிறைவு, அதாவது அன்பு நாண் ஒப்புரவு கண் ணோட்டம் வாய்மையாகிய ஐந்து நற்குணங்களும் நிறைந்தது. கொழுநனையில்லாள் நலனும் என்று பாடங் கொள்ளின் நலன் என்பது அழகாம். (கூகூ)

எதிர்நிற்கும் பெண்ணு மியல்பி றொழும்புஞ்
செயிர்நிற்குஞ் சுற்றமு மாகி—மயிர்நரைப்ப
முந்தைப் பழவினையாய்த் தின்னு மிவைமூன்று
நொந்தார் செயக்கிடந்த தில்.

(இ-ள்) எதிர் நிற்கும் - (தாம் சினந்தால்) தம் எதிர் நின்று பேசும், பெண்ணும் - மனையாளும், இயல்பு இல் - ஒழுக்கமில்லாத, தொழும்பும் - ஏவலாளும், செயிர் - பகை, நிற்கும் - கெடாது நிற்

கும், சுற்றமும் - உறவினரும், ஆகி - ஆய் நின்று, முந்தை - முற் பிறப்பிற் செய்த, பழவினை - பழைய வினை, ஆய் - ஆகும்படி, மயிர் நரைப்ப - முதுமைப் பருவம் வரைக்கும், தின்னும் - மெலியச் செய்யும்; இவை மூன்றும் - இந்த மூன்றுக்கும், நொந்தார் - வருந்தினோர், செயக்கிடந்தது - செய்யக் கூடியதாகிய பரிகாரம், இல் - இல்லை; (எ-று.)

(க-ரை.) கணவனை எதிர்த்து நிற்கும் மனைவியும், நன்னடக்கையில்லா அடிமையும், பகை பாராட்டும் உறவினரும் பழவினைப் பயன்போற் பரிகரிக்கப்படாதவர் என்பது.

தொழும்பு - தொழிலாகு பெயர். செயிர் - குற்றம்; ஈண்டுப் பகை. மயிர் நரைப்ப என்பது முதுமைப் பருவத்தை யுணர்த்த வந்த குறிப்புச் சொல். (௬௭)

இல்லார்க்கொன் றீயு முடைமையு மிவ்வுலகி
னில்லாமை யுள்ளு நெறிப்பாடு—மெவ்வுயிர்க்குந்
துன்புறுவ செய்யாத தூய்மையு மிம்மூன்று
நன்றறியு மாந்தர்க் குள.

(இ-ள்.) இல்லார்க்கு - வறியவர்க்கு, ஒன்று - ஓர் பொருளை, ஈயும் - கொடுக்கும், உடைமையும் - செல்வமும், இவ்வுலகில் - இவ்வுலகத்துப் பொருள்களின், நில்லாமை - நிலையாமையை, உள்ளும் - ஆராய்ந்து அறியும், நெறிப்பாடும் - வழியில் பொருந்துதலும், எவ்வுயிர்க்கும் - எல்லா உயிர்க்கும், துன்பு உறுவ - துன்பம் அடைவதற்கு ஏதுவாகிய செய்கைகளை, செய்யாத தூய்மையும் - செய்யாத தூய தன்மையும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நன்று - அறத்தை, அறியும் - அறியக் கூடிய, மாந்தர்க்கு - மக்கட்கு, உள - உண்டு; (எ-று.)

(க-ரை.) வறியோரைக் காக்கும் செல்வமும், பொருள்களின் நிலையாமையை யறிந்து நடக்குந் தன்மையும், எவ்வுயிர்க்கும் இன்

பம் அளிக்கும் செம்மையும் அறமுணர்ந்தவர்களிடத்திலேயே உண்டு என்பது.

ஒன்று - எண்ணல் அளவையாகு பெயர். உடைமை - பண்பாகு பெயர். உலகு - இடவாகு பெயர். நில்லாமை - நிலையாமை. நில்லாதவற்றை நிலையினவென்றுணர்வது புல்லறிவாண்மை எனப்படும். உறுவ - பலவின்பால் வினையாலணையும் பெயர். (சுஅ)

அருந்தொழி லாற்றும் பகடுந் திருந்திய
மெய்நிறைந்து நீடிருந்த கன்னியு—நொந்து
நெறிமாறி வந்த விருந்துமிம் மூன்றும்
பெறுமா றரிய பொருள்.

(இ-ள்.) அரும் தொழில் - (உழுதல் பெருஞ்சுமை தாங்குதல் முதலிய) அரிய தொழிலை, ஆற்றும் பகடும் - செய்யவல்ல கடாவும், திருந்திய - குற்றமற்ற, மெய் நிறைந்து - உடலிலக்கணம் நிரம்பி, நீடு இருந்த - நெடுநாள் (மணமின்றி) இருந்த, கன்னியும் - இளம் பெண்ணும், நெறி மாறி - வழிதப்பி, நொந்து வந்த - பசித்து வந்த, விருந்தும் - விருந்தும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், பெறும் ஆறு - பெறுகின்ற வழியில், அரிய பொருள் - அரிய பொருள்களாம் ; (எ-று.)

(க்-ரை.) நிலத்தை யுழவல்ல பாரம் சுமக்கும் எருதும், உடலுறுப்பிலக்கணம் அமைந்த கன்னியும், வழிதப்பிப் பசித்து வருந்தும் விருந்தும் கிடைத்தற்கரிய பொருள் என்பது.

மெய் - மெய்யின் இயல் : பொருளாகு பெயராய்த்தன் இலக்கணத்தை யுணர்த்திற்று. வந்த - இடவழுவமைதி. உயர்திணையாகிய கன்னி மிகுதி பற்றி மூன்றும் என்னும் அஃறிணை முடிபேற்றது.

காவோ டறக்குளந் தொட்டானு நாவினல்
வேதங் கரைகண்ட பார்ப்பானுந்—தீதிகந்

தொல்வதுபாத் துண்ணு மொருவனு மிம்மூவர்
செல்வ ரெனப்படு வார்.

(இ-ள்.) காவோடு - சோலையை உண்டாக்குதலுடன், அறக்குளம் - அறத்துக்குரிய குளத்தை, தொட்டானும் - தோண்டுவித்தவனும், நாவினல் - நாவினல் ஓதி, வேதம் - வேதத்தை, கரைகண்ட - முடிவு கண்ட, பார்ப்பானும் - அந்தணனும், தீது - தீயவழியை, இகந்து - கடந்து, ஒல்வது - (தனக்கு) இசையும் பொருளை, பாத்து - பகுத்து, உண்ணும் - உண்கின்ற, ஒருவனும் - ஒப்பற்ற இல்லறத்தானும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், செல்வர் எனப்படுவர் - செல்வத்தை யுடையா ரென்று சொல்லப்படுவார்; (எ-று.)

(க-ரை.) தோப்பும் குளமும் அமைத்தவனும், மறைநூலோதியுணர்ந்தவனும், பிறர்க்குப் பகுத்துக் கொடுத்துண்ணும் இல்வாழ்வானும் உண்மைச் செல்வராவர் என்பது.

காவோடு குளந்தொட்டான் என்பதில் மூன்றனுருபு வேறுவினை உடனிகழ்ச்சி யாதலால், கா என்றதற் கேற்ப உண்டாக்குதல் என்னும் தொழில் வருவிக்கப்பட்டது. கரைகாண் என்பது ஒரு சொல்லின் தன்மையது. (எ௰)

உடுத்தாடை யில்லாதார் நீராட்டும் பெண்டிர்
தொடுத்தாண்ட வைப்போர் புகலுங்—கொடுத்தளிக்கு
மாண்மை யுடையவர் நல்குரவு மிம்மூன்றுங்
காண வரியவென் கண்.

(இ-ள்.) உடுத்த ஆடை - உடுக்கப்பட்ட ஆடை, இல்லாதார் - இல்லாதவர், நீர் ஆட்டும் - நீராடுதலும், பெண்டிர் - பெண்கள், தொடுத்து - (பிறரோடு) வழக்குத் தொடுத்து, ஆண்டு - அங்குள்ள, அவை - சபைகளிடத்தில், போர்புகலும் - போர்க்குப் புகுதலும், கொடுத்து - பிறர்க்குக் கொடுத்து, அளிக்கும் - காக்கின்ற,

ஆண்மை யுடையவர் - ஆண் தன்மையுடையவரது, நல்குரவும் - வறுமையும், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், என் கண் - என் கண்கள், காண அரிய - பார்க்கத் தகுவன வல்லவாம் ; (எ-று.)

(க-ரை.) ஆடையின்றி நீரில் இறங்கிக் குளிப்பதும், பெண்கள் வழக்குத்தொடுத்து மன்றேறுதலும், கொடையாளர்கள் வறுமை யுறலும் காணக்கூடியவல்ல என்பது.

உடுத்தாடை என்பதில் உடுத்த என்ற பெயரெச்சத்து ஈறு தொகுத்தல். ஆட்டு - பிறவினை முதனிலைத் தொழிற் பெயர். நல்குரவு என்ற தொழிற்பெயரில் நல்கூர் முதனிலை. "உடுத்த லால் நீராடார், ஒன்றுடுத் துண்ணார், உடுத்தாடை நீருட் பிழியார் - விழுத்தக்கார் ஒன்றுடுத் தென்றும் அவைபுகார் என்பதே, முந்தை யோர் கண்ட முறை," என்ற ஆசாரக்கோவையடிகளும் காண்க. (எக)

நிறைநெஞ் சுடையானை நல்குர வஞ்சு
மறனை நினைப்பானை யல்பொரு ளஞ்சு
மறவனை யெவ்வுயிரு மஞ்சுமிம் மூன்றுந்
திறவதிற் றீர்ந்த பொருள்.

(இ-ள்.) நிறை - புலன்கள் மேற்போகாமல் நிறுத்தப்படும், நெஞ்சு உடையானை - நெஞ்சுடையவனுக்கு, நல்குரவு அஞ்சும் - வறுமை பயப்படும், அறனை - அறத்தையே, நினைப்பானை - நினைக்கின்றவனுக்கு, அல்பொருள் - பாவம், அஞ்சும் - பயப்படும், மறவனை - கொலையாளிக்கு, எவ்வுயிரும் - (போர்க்களத்து வந்த) எல்லா உயிர்களும், அஞ்சும் - பயப்படும், இ மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், திறவதில் - வன்மைகளுள், தீர்ந்த பொருள் - சிறப்பாக முடிந்த பொருள்களாம் ; (எ-று.)

(க-ரை.) வறுமை நிறைநெஞ்சுடையானைச் சேரவும், மறம் அறநினைப்பாளனை யணுகவும், எவ்வுயிரும் கொலையாளியைக் காணவும் அஞ்சும் என்பது.

நிறை - நிறுத்தல்; தொழிற் பெயர். முன்னர் அறம் என்றமையால் அல்பொருள் - பாவம் அல்லது மறம் எனப்பட்டது. திறவது - பண்புப் பெயர். திறவதிற்றீர்ந்த பொருள் என்பதற்கு வேறுபாட்டில் நீங்கித் தம்முட் சிறந்த பொருள்களாம் என்க. (எஉ)

இரந்துகொண் டொண்பொருள் செய்வலென் பானும்
பரந்தொழுகும் பெண்பாலைப் பாசமென் பானும்
விரிகட லூடுசெல் வானுமிம் மூவ
ரரிய துணிந்துவாழ் வார்.

(இ-ள்.) இரந்து கொண்டு - (இல்லாமையால் பிறரிடம்) கெஞ்சிப் பெற்று, ஒண்பொருள் - ஒள்ளிய பொருளை, செய்வல் என்பானும் - ஈட்டுவன் என்று கூறும் இரப்போனும், பரந்து - (பலரிடத்தும்) சென்று, ஒழுகும் - நடக்கின்ற, பெண்பாலை - பெண்வகுப்பைச் சேர்ந்த வேசையை, பாசம் என்பானும் - அன்புடையா ளெனக் கருதும் காமுகனும், விரிகடல் ஊடு - பரந்த கடலினடுவில், செல்வானும் - (தக்க கருவியின்றி) பொருளீட்டச் செல்லும் வாணிகனும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், அரிய - செய்வதற்கு அரிய பொருள்களை, துணிந்து பின்வாங்கலின்றி மேற்கொண்டு, வாழ்வார் - வாழ்பவர் போலத் தாழ்பவராவர்; (எ-று.)

(க-ரை.) பிச்சை யெடுத்துப் பெறும் பொருள் ஈட்டுதலும், வேசை தன்னிடம் மெய்யன்புடையவளென்று நம்புதலும், வேண்டிய கருவிகளில்லாமல் திரைகடலோடித் திரவியந் தேட முயலுதலும் முடியாத செயல் என்பது.

ஒண்பொருள் - ஒருவனைப் பலருள்ளும் ஒண்மையுடையவனாகச் செய்யவல்ல செல்வம். செய்வல் - அல் ஈற்றுத் தன்மையொருமை எதிர்கால வினைமுற்று. பரந்தொழுகுதலாவது - உள்ளம் ஒருவனைப்பற்றி நில்லாது பொருள்வளம் மிக்க பலரிடத்தும் செல்லுதல். பாசம் - பற்று, பண்பாகுபெயர். கடலூடு - ஊடு - ஏழனுருபு. (எரு)

கொலைநின் றுதின்றொழுகு வானும் பெரியவர்
புல்லுங்காற் றான்புல்லும் பேதையும்—இல்லெனக்கொன்
றீகென் பவனை நகுவானு மிம்மூவர்
யாதுங் கடைப்பிடியா தார்.

(இ-ள்.) கொலை நின்று - கொல்லுந் தொழிலில் நீங்காது நிலைபெற்று, ஒழுகுவானும் - (ஒருயிரை வதைத்து) அதன் இறைச்சியைத் தின்பவனும், பெரியவர் - பெரியோர், புல்லுங்கால் - தன்னைத் தழுவும்போது, தான் புல்லும் - (அவரோ டொப்பவனாகத் தன்னை மதித்து) தானும் அவரை எதிர் தழுவுகின்ற, பேதையும் - அறிவில்லாதவனும், எனக்கு இல் - எனக்கு இல்லை, ஒன்று ஈக - ஒன்றை (ஒரு பொருளை) ஈயக் கடவாய், என்பவனை - என்று இரக்கின்றவனை, நகுவானும் - இகழ்வானும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், யாதும் - யாதோர் அறத்தையும், கடைப்பிடியாதார் - உறுதியாகக் கொள்ளாதவராவர்; (எ-று.)

(க-ரை.) கொலை செய்துண்பதும், பெரியோர் தழுவினால் அவர்க்கு வணக்கஞ் செய்யாது தானும் அவரைத் தழுவுவதும், இல்லை என்று இரப்பவனைப் பார்த்து இகழ்தலும் நல்லொழுக்கத்தை மேற்கொள்ளாதவர் செயல்களாம். ஈக எனப் படுவது தொகுத்தல் விகாரம் பெற்றது. (எச)

வள்ளன்மை பூண்டான்கட் செல்வமு முள்ளத்
துணர்வுடையா னோதிய நூலும்—புணர்வின்கண்
தக்க தறியுந் தலைமகனு மிம்மூவர்
பொத்தின் றிக் காழ்த்த மரம்.

(இ-ள்.) வள்ளன்மை - வரையாது கொடுத்தலை, பூண்டான் கண் - அணியாக மேற்கொண்டவனிடத்துள்ள, செல்வமும் - பொருளும், உள்ளத்து - உள்ளத்தில், உணர்வு உடையான் - (கேட்டதனை) நினைத்துப் பார்க்கும் இயல்புடையவன், ஓதிய நூலும்-

ஆதிதேவர்முன்னின்றங்கருளிச்செய்தபொழுதின்கண்
மாதரார்சங்கிலியார் நமாலுமைய மேவரிய
சீதமலர்த்தாமரையடிக்கீழ்ச்சேர்ந்துவீழ்ந்தெழுந்துசெந்நின்று
வே, முதல்வர்முன்னடுக்கமெய்ந்நிதத்தொழுதவிர்மைபுவார் (உ௪௧)

எம்பிரானேநீரருளிச்செய்தார்க்குரியேனயானிமையோர்
தம்பிரானேயருடலைமேற்கொண்டேன்றக்கவிதிமணத்தா
னம்பியாரூரர்க்கென்னைநல்கியருளும்பொழுதிமயக்
கொம்பினுகங்கொண்டவர்க்குக்கூறுந்திறமொன்றுளதென்பார். ()

பின்னும்பின்னன்முடியார்முன்பெருநாணித்தொழுதுரைப்பார்
மன்னுந்திருவாரூரின்கணவர்தாமிகவுமகிழ்ந்துறைவ
தென்னுந்தன்மையறிந்தருளுமெம்பிராட்டிதிருமுலைதோய்
மின்னும்புரிநூலணிமார்பீரென்றார்குன்றுவிளக்கனையார். (உ௪௩)

வேறு.

மற்றவர்தம்முரைகொண்டுவன்றொண்டர்நிலைமையினை
யொற்றிநகரமர்ந்தபிரானுணர்ந்தருளியுரைசெய்வார்
பொற்றொடியாயுனைப்பிரிந்துபோகாமைக்கொருசபத
மற்றமுறுநிலைமையினாலவன்செய்வானெனவருளி. (உ௪௪)

வேய்பனையதோளியார்பானின்றுமீண்டருளித்
தூயமனமகிழ்ந்திருந்ததோழனார்பாலணைந்து
நீயவளைமணம்புணருநிலையுரைத்தோமத்தகவர்பா
லாயதொருகுறையுன்னாலமைப்பதுளதென்றருளி. (உ௪(

வன்றொண்டர்மனங்களித்துவணங்கியடியேன்செய்ய
நின்றகுறையாதென்னநீயவளைமணம்புணர்தற்
கொன்றியுடனேநிகழ்வதொருசபதமவண்முன்பு
சென்றுகிடைத்தவ்விரவேசெய்கவெனவருள்செய்தார். (உ௪௬)

என்செய்தாலிதுமுடியுமதுசெய்வன்பரனதற்கு
மின்செய்தபுரிசடையீரருள்பெறுதல்வேண்டுமென
முன்செய்தமுறுவலுடன்முதல்வரவர்முகநோக்கி
யுன்செய்கைதனக்கினியென்வேண்டுவதென்றுரைத்தருள (உ௪௭)

வம்பணிமென்முலையவர்க்குமனங்கொடுத்தவன்றொண்டர்
நம்பரிவர்பிறபதியுமநபந்தகோலஞ்சென்று
கும்பிடவேகடவேனுக்கிதுவிலக்காமெனக்குறிப்பாற்
றம்பெருமான்றிருமுன்புதாம்வேண்டுங்குறையுரைப்பார். (உ௪௮)

பிறிது - பிற என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயர். சேவகன் - சேவகம் என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். (எசு)

கயவரைக் கையிகந்து வாழ்த னயவரை
நள்ளிருளுங் கைவிடா நட்டொழுக—றெள்ளி
வடுவான வாராமற் காத்தலிம் மூன்றுங்
குடிமாசி லார்க்கே யுள.

(இ-ள்.) கயவரை - கீழ்மக்களை, கையிகந்து - கைவிட்டு (சேராமல்), வாழ்தல் - வாழ்தலும், நயவரை - நீதியுடையவரை, நட்டு - நட்புச்செய்து, நள் இருளும் - நடு இரவிலும், கைவிடா - கைவிடாமல், ஒழுகல் - (அவருக்கு இணங்க) நடத்தலும், தெள்ளி ஆராய்ந்து, வடுவான - தனக்குப் பழிப்பான காரியங்கள், வாராமல் - வரவொட்டாமல், காத்தல் - காத்துக்கொள்ளுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், குடி - குடிப்பிறப்பிலே, மாசு இலார்க்கே - குற்றம் இல்லாதவர்க்கே, உள - உண்டாகும் ; (எ-று.)

(க-ரை.) கீழ்மக்கள் கூட்டுறவை விட்டிருப்பதும், மேன் மக்களை எப்பொழுதும் பிரியாதிருப்பதும், தனக்குப் பழி வாராமற் காப்பதும் நல்லோர்க்கு உரியன என்பது.

கயவர் - கய என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். நயம் - நீதி. நள் - நடுக்கம், இப் பொருளில் நள்ளிரா அச்சத்தைத் தரும் நடு இரா எனக் கொள்க. இருள் - பண்பாகுபெயர். உம் - உயர்வு சிறப்பு. வடுவான - பலவின்பாற் பெயர். (எஎ)

தூய்மை யுடைமை துணிவாந் தொழிலகற்றும்
வாய்மை யுடைமை வனப்பாகுந்—தீமை
மனத்தினும் வாயினுஞ் சொல்லாமை மூன்றும்
தவத்திற் றருக்கினர் கோள்.

(இ-ள்.) தூய்மை உடைமை - மனத் தூய்மையுடையரா யிருத் தலும், துணிவுஆம் - (மெய்ந்நூல்களாலே) துணியப்பட்ட

தொழில் - நற்செய்கையை, அகற்றும் - விரிக்கின்ற, வாய்மை யுடைமை - உண்மை யுடையவனுயிருத்தலும், வனப்பு ஆகும் - (மங்கையருடைய) அழகாகிய, தீமை - தீமையைத் தருவதனை, மனத்தினும் - மனத்தால் நினையாமையும், வாயினும் - வாயால், சொல்லாமை - சொல்லாமையும், மூன்றும் - ஆகிய இம் மூன்றும், தவத்தில் - தவத்திலே, தருக்கினர் - செருக்கி நின்றவர்களுடைய, கோள் - கொள்கையாம்; (எ-று.)

(க-ரை.) தூய்மையும் வாய்மையாயிருப்பதுவும், தீமையை நினையாமலும் சொல்லாமலு மிருப்பதும் நற்றவமுடையார் செயல் என்பது.

துணிவு - துணியப்பட்டது; தொழிலாகுபெயர். அகற்றும் - அகல் என்னும் முதனிலையடியாகப் பிறந்த பிறவினைப் பெய ரெச்சம். தவத்தினரை நோக்கினமையின் வனப்பு பெண்ணின் வனப்புக்காயிற்று. மனத்தினுற் சொல்லாமையாவது இலக்கணையால் நினையாமையாம். தீமை - தீமையைத் தருவது. காரணம் - காரிய மாகச் சொல்லப்பட்டது. (எஅ)

பழியஞ்சான் வாழும் பசுவு மழிவினுற்
கொண்ட வருந்தவம் விட்டானுங்—கொண்டிருந்
தில்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர்
நெல்லுண்ட னெஞ்சிற்கோர் நோய்.

(இ-ள்.) பழி அஞ்சான் - (உலகம் பழிக்கும்) பழிப்புக்குப் பயப்படாமல், வாழும் - உயிர்வாழுகின்ற, பசுவும் - பசுப்போல் வானும், அழிவினுல் - கேடு வந்தபோது, கொண்ட-(தனக்கு உரித் தாகக்) கொண்ட, அருந்தவம் - அரிய தவத்தினை, விட்டானும் - விட்டவனும், கொண்டிருந்தும் - (தனக்கு உட்பட்டவளாகக்) கொண்டிருந்தும், இல் - மனைவிக்கு, அஞ்சி - பயந்து, வாழும் - நடக்கின்ற, எருதும் - எருது போல்வானும், இவர் மூவர் - ஆகிய இம்மூவரும், நெல் உண்டல் - (மக்கள் உண்ணக் கடவதாகிய)

சோற்றை யுண்ணுதல், நெஞ்சினுக்கு-(அறிவுடையார்) நெஞ்சுக்கு, ஓர் நோய் - ஓர் நோயாம்; (எ-று.)

(க-ரை.) பழிக்கஞ்சாதவனும், கேடுற்ற தென்று தவத்தை விட்டவனும், மனையாளுக்குப் பயந்து நடக்கும் கணவனும் உண்ணுது ஒழியத் தக்கவர் என்பது.

அஞ்சான்-முற்றெச்சம். பசு, எருது-உவமையாகு பெயர்கள். நெல் - அரிசிக்காய் அது சோற்றுக்கு, ஆயினமையின் இருமடியாகு பெயர். 'நெல்லுண்ட நெஞ்சிற் கோர் நோய்' எனப் பாடங் கொள்ளின் நெல்லைத் தின்ன நெஞ்சுக் குண்டாகும் துன்பத்தோடு ஒத்தவர் எனப் பொருள் கொள்க. (எக)

முறைசெய்யான் பெற்ற தலைமையு நெஞ்சி
னிறையிலான் கொண்ட தவமு—நிறையொழுக்கந்
தேற்ருதான் பெற்ற வனப்பு மிவைமூன்றுந்
தூற்றின்கட் டூவிய வித்து.

(இ-ள்.) முறை செய்யான் - முறையறிந்து செய்யமாட்டாதவன், பெற்ற - அடைந்த, தலைமையும் - தலைமைத் தன்மையும், நெஞ்சில் - மனதில், நிறை இலான் - உறுதிப்பாடு இல்லாதவன், கொண்ட - மேற் கொண்ட, தவமும் - தவமும், நிறை ஒழுக்கம் - குறைவற்ற ஒழுக்கத்தை, தேற்ருதான் - தெளிந்து நடவாதவன், பெற்ற வனப்பும் - பெற்ற அழகும், இவை மூன்றும் - ஆகிய இம் மூன்றும், தூற்றின்கண் - புதலினிடத்து, தூவிய - விதைத்த, வித்து - விதையை யொக்கும்; (எ-று.)

(க-ரை.) முறை புரியமாட்டாதவன் தலைவனுயிருப்பதும், மனவலி யில்லாதவன் தவஞ் செய்வதும், நன்னடக்கை யில்லாதவன் அழகும் வீண் என்பது.

நிறை இரண்டனுள் முன்னது தொழிற்பெயர்; பின்னது காலங்கரந்த பெயரெச்சம். தேற்ருதான் - தன்வினை வினையாலணையும் பெயர். தேறு - முதனிலை. (அ)

தோள்வழங்கி வாழுந் துறைபோற் கணிகையு
நாள்கழகம் பார்க்கு நயமிலாச் சூதனும்
வாசிகொண் டொண்பொருள் செய்வானு மிம்மூவ
ராசைக் கடலுளாழ் வார்.

(இ-ள்.) துறைபோல் - (பலர்க்கும் பொதுவாய் நின்று தன்னிடத்து நீரைக் கொடுக்கும்) துறையினைப் போல, தோள் வழங்கி - (பலருக்கும் பொதுவாய் நின்று) தனது தோளைக் கொடுத்து, வாழும் - வாழ்கின்ற, கணிகையும் - வேசையும், நாள் - ஒவ்வொருநாளும், கழகம் பார்க்கும் - சூதாடும் இடத்தைத் தேடி ஆடுகின்ற, நயம் இலாச் சூதனும் - நீதியில்லாத சூதாடியும், வாசிகொண்டு - மிக்க வட்டம் வாங்கி, ஒள் பொருள் - ஒள்ளிய பொருளை, செய்வானும் - தேடுவானும், இ மூவர் - ஆகிய இந்த மூவரும், ஆசைக் கடலுள் - ஆசையாகிய கடலில், ஆழ்வார் - அழுந்துவாராவர்; (எ-று.)

(க-ரை.) பொருட் பெண்டிர் ஆகிய வேசையும், சூதாடியும், மிகுந்த வட்டி வாங்கிப் பொருள் ஈட்டுவானும் பேராசை பிடித்தவர் என்பது.

ஆசைக்கு முடிவில்லை யாதலால் அதனைக் கடலென உருவகித்துள்ளார். கணிகை துறை போலுதலாவது வேண்டினோர் யாரும் அடைந்து இன்பங் கொள்ள இசைதல். நாள் - நாளும், உம் முற்றுப் பொருள்; தொக்கது. வாசி-வட்டம், வட்டி : திசைச்சொல்.

சான்றாருட் சான்றா னெனப்படுத லெஞ்ஞான்றுந்
தோய்ந்தாருட் டோய்ந்தா னெனப்படுதல்—பாய்ந்தெழுந்து
கொள்ளாருட் கொள்ளாத கூறாமை, யிம்மூன்று
நல்லாள் வழங்கு நெறி.

(இ-ள்.) சான்றாருள் - (நற்குணங்களால்) நிறைந்தவரிடத்தில், சான்றான் எனப்படுதல் - நற்குணங்களால் நிறைந்தவன் என்று கருதப்பட நடத்தலும், எஞ்ஞான்றும் - செல்வம் உற்ற காலத்தும்

அற்ற காலத்தும், தோய்ந்தாருள் - (ஒரு தன்மையராய்) நட்புக் கொண்டு கலந்தவரிடத்து, தோய்ந்தான் - நட்புக்கொண்டு கலந்தவன், எனப் படுதல் - என்று கருதப்பட நடத்தலும், பாய்ந்து எழுந்து - (தம்மேல் கோபத்தோடு) பாய்ந்தெழுந்து, கொள்ளாருள் - தமது நற் சொல்லை ஏற்றுக் |கொள்ளாதவரிடத்து, கொள்ளாத - அவர் ஒப்புக்கொள்ளாத சொற்களை, கூறாமை - சொல்லாதிருத்தலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், நல் ஆள் - யாவர்க்கும் நல்லவனாந் தன்மையை ஆளுவோன், வழங்கும் - மேற்கொள்ளும், நெறி - நெறியாம்; (எ-று.)

(க-ரை.) நல்லாருள் நல்லா ரெனப்படுதலும், நண்பரோடு நட்புக்கொள்ள வல்லா ரெனப்படுதலும், தன் பேச்சு செல்லா இடத்திற் சொல்லாதிருத்தலும் நல்லவர் குணம் என்பது.

கொள்ளாத - பலவின்பால் வினையாலணையும் பெயர். உள் உருபு மூன்றனுள் முன்னிரண்டும் உருபு மயக்கம். ஆள் - தொழிலாகுபெயர். (அஉ)

உப்பின் பெருங்குப்பை நீர்படியி னில்லாகு
நட்பின் கொழுமுளை பொய்வழங்கி னில்லாகுஞ்
செப்ப முடையார் மழையனைய ரிம்மூன்றுஞ்
செப்ப நெறிதூரா வாறு.

(இ-ள்.) உப்பின் - உப்பினது, பெருங்குப்பை - பெரிய குவியல், நீர் படியின், தன்னில் நீர்படிந்தால், இல் ஆகும் - இல்லாமற் போகும், நட்பின், கொழு முளை - நட்பினது செழித்த முளையானது, பொய் வழங்கின் - பொய்யாகிய நெருப்பைப் பெய்தால், இல் ஆகும் - அழிந்து போம், செப்பம் உடையார் - நடுவு நிலைமையுடையார், மழை அனையர் - மழைபோல எல்லார்க்கும் ஒப்ப உபகரிப்பார், இ மூன்றும் - நீர் படியாமையும், பொய் வழங்காமையும், மழையை ஒத்தலும் ஆகிய மூன்றும், செப்பநெறி - நல்வழியை, தூராத ஆறு - தூராமைக்குக் காரணமாகிய சாதனங்களாம்; (எ-று.)

(க-ரை.) உப்பின் குவியல் நீர் படியாமையும், நட்பினர் பொய் வழங்காமையும், மழையனையார் செப்ப முடைமையும் நல்வழியைக் கெடுக்கா முறைகள் என்பது.

படியின் - வினையெச்சம்; படிதல் - தோய்தல், பொருந்தல். செப்பம் இரண்டனுள் முன்னது பண்பாகு பெயர், பின்னது பண்புப் பெயர். (அ௩)

வாய்நன் கமையாக் குளனும் வயிறூரத்
தாய்முலை யுண்ணுக் குழவியுஞ் சேய்மரபிற்
கல்விமாண் பில்லாத மாந்தரு மிம்மூவர்
நல்குரவு சேரப்பட் டார்.

(இ-ள்.) வாய் - நீர் வரும்வழி, நன்கு அமையாக் குளனும் - நன்றாக அமைந்திராத குளமும், வயிறு ஆர - தன் வயிறு நிரம்பும் படி, தாய் முலை உண்ணு - தாயின் முலைப்பாலை உண்ணாத, குழவி யும் - குழந்தையும், சேய் மரபில் - உயர்ந்த முறைமையில், கல்வி மாண்பு - நூல்களைக் கற்றலினது மாட்சிமைப்பட்ட அறிவு, இல்லாத மாந்தரும் - இல்லாத மனிதரும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், நல்குரவு சேரப்பட்டார் - வறுமையால் பீடிக்கப் பட்டவ ராவர்; (எ-று.)

(க-ரை.) குளத்துக்கு நீர் இன்மையும், குழவிக்குப்பாலின்மை யும், மாந்தருக்கு அறிவின்மையும் நல்குரவு எனப்பட்டன என்பது.

வாய் - வழி. குளன் - குளம் என்பதன் போலி. சேய் மரபில் - உயர்ந்த குலத்தில் எனவும், உயர்ந்த முறையில் எனவும் பொருள் கொள்ளலாம். இம் மூவரும் நல்குரவு அடைந்து வருந்துதல் உறுதியாதலால், துணிவுபற்றி நல்குரவு சேரப்பட்டார் என இறந்த காலத்தாற் கூறினர். சேய் மரபில் என்றதாவது நல்லாசிரிய ரிடத்து அவர் குறிப்பின்வழி ஒழுகி முன்னர் நிகண்டு கற்றுச்

செய்யுள் ஆராய்ச்சி செய்து இலக்கண நூல் முதலியவற்றைக் கற்பது என்பதாம். (அச)

எள்ளப் படுமரபிற் றாகலு முள்பொருளைக்
கேட்டு மறவாத கூர்மையு முட்டின்றி
யுள்பொருள் சொல்லு முணர்ச்சியு மிம்மூன்று
மொள்ளிய வொற்றாட் குணம்.

(இ-ள்.) எள்ளப்படும் - (தன் செய்கை பகைவரால்) நன்கு மதிக்கப்படாத, மரபிற்று ஆகலும் - முறையை உடையதாதலும், உள்பொருளை - (அப் பகைவரிடத்து) நடந்துள்ள காரியத்தை, கேட்டு மறவாத - கேட்டுப் பின் மறவாத, கூர்மையும் - கூரறிவுடைமையும், உள் பொருள் - அப் பொருளை, முட்டு இன்றி - தடையின்றி, சொல்லும் உணர்ச்சியும் - (தன் அரசனுக்கு) சொல்லுகின்ற தெளிவுடைமையும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், ஒள்ளிய - அறிவுள்ள, ஒற்று ஆள் - வேவுகாரனது, குணம் - தன்மையாம்; (எ-று.)

(க-ரை.) பகைவன் நாட்டில் தான் இருந்து செய்யும் செய்கை பிறர் கருதத் தக்கது ஆகாதபடி செய்தலும், அவன் கருத்தறிந்து மறவாதிருத்தலும், அக் கருத்தை அரசர்க்குச் செவ்வையாகத் தெரிவிக்கும் வலிமை பெற்றிருத்தலும் வேவுகாரர்க்குரிய குணங்களாம் என்பது.

மரபிற்று - குறிப்பு வினைமுற்று ; குறிப்பு வினையாலணையும் பெயருமாம். உள் பொருள் - உண்மையாகிய பொருள் ; பண்புத் தொகை. முட்டு - முட்டுதல்; முதனிலைத் தொழிற்பெயர். (அரு)

அற்புப் பெருந்தளை யாப்பு நெகிழ்ந்தொழிதல்
கற்புப் பெரும்புணை காதலிற் கைவிடுதல்
நட்பி னயநீர்மை நீங்க லிவைமூன்றுங்
குற்றந் தரூஉம் பகை.

(இ-ள்.) அன்பு பெருந்தளை - அன்பினாலாகிய பெருந்தளையினது, யாப்பு-கட்டு, நெகிழ்ந்து ஒழிதல்-தன்னை விட்டுத் தளர்ந்து நீங்குதலும், கற்பு - கல்வியாகிய, பெரும்புணை-பெரிய தெப்பத்தை, காதலின்-பொருள் முதலியவற்றின் விருப்பினால், கை விடுதல்-முற்றும் விட்டுவிடுதலும், நட்பின்-ஒருவரிடத்தில் வைத்த நட்பினால், நயம் நீர்மை - நீதித் தன்மையினின்று, நீங்கல் - நீங்குதலும், இவை மூன்றும் - ஆகிய இவை மூன்றும், குற்றம் தரூஉம் - (ஒருவனுக்கு) குற்றங்களை விளைக்கின்ற, பகை - பகைகளாம்; (எ-று.)

(க-ரை.) உயிரிடத்தில் அன்பற்றிருப்பதும், பொருட்பற்றால் கல்வியை விடுதலும், நட்பினால் ஒருபாற் கோடுதலும் பகைபோற் குற்றந் தருவன என்பது.

அற்புத்தளை - மூன்றும் வேற்றுமை உருபும் பயனுமுடன் றொக்க தொகை: அன்பாகிய தளையெனின் பண்புத் தொகையாம். தளை - முதனிலைத் தொழிலாகு பெயர். கல்வி ஒருவனை அறிவு நூல்களை யுணர்ந்து பொருளியலறிந்து பிறவிக்கடலைக் கடந்து வீடுபெறச் செய்வதால், பெரும் புணையென உருவகிக்கப் பட்டது. குற்றம் - இருமைப் பயனு மிழத்தல். தரூஉம் - செய்யுளிசை நிறை யளபெடை.

(அசு)

கொல்வது தானஞ்சான் வேண்டலுங் கல்விக்
ககன்ற வினம்புகு வானு மிருந்து
விழுநிதி குன்றுவிப் பானுமிம் மூவர்
முழுமக்க ளாகற்பா லார்.

(இ-ள்.) கொல்வது - (ஒருயிரைக்) கொல்வதற்கு, தான் அஞ்சான் - தான் அஞ்சாதவனாகி, வேண்டலும் - அதனைச் செய்ய விரும்புதலும், கல்விக்கு—, அகன்ற - நீக்கமாகிய, இனம் - கூட்டத்திலே, புகுவானும் - நுழைகின்றவனும், இருந்து - (ஒரு முயற்சியும்) செய்யாதவனாயிருந்து, விழுநிதி - (முன்னுள்ள)

பெருஞ் செல்வத்தை, குன்றுவிப்பானும் - (செலவு செய்து) குறைவிப்பவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், முழுமக்கள் - மூடர்கள், ஆகல்பாலார்-ஆகுதலாகிய தன்மையையுடையார்; (எ-று.)

(க-ரை.) அஞ்சாது ஒருயிரைக் கொலை புரியக் கருதுவதும், படிப்பிற் பற்றற்றவரோடு சேர்வதும், முன்னோர் பொருளைப் பெருக்காமல் செலவழிப்பதும் மூடர் செய்கை என்பதாம்.

கொல்வது - தொழிற் பெயர். அஞ்சான் - முற்றெச்சம். கல்விக்கு - கு உருபு நீக்கப் பொருளில் வந்தது. அறிவின்மையால் மக்கட்டன்மையில் குறைந்தவரை முழுமக்கள் என்றது மங்கல வழக்கு. இதை இலக்கணமுடையதாகக் கொண்டு அறிவு நுழையப் புரையில்லாத மக்கள் எனப் பொருள் கூறுவாருமுண்டு. பாலார் - பண்படியாகப் பிறந்த பெயர். (அஎ)

பிணிதன்னைத் தின்னுங்காற் றான்வருந்து மாறுந்
தணிவில் பெருங்கூற் றுயிருண்ணு மாறும்
பிணைசெல்வ மாண்பின் றியங்கலிவை மூன்றும்
புணையி னிலைகலக்கு மாறு.

(இ-ள்.) பிணி - நோயானது, தன்னை—, தின்னுங்கால் - வருத்தும்போது, தான் வருந்தும் ஆறும் - (ஒருவன்) தான் (அதற்கு) வருத்தப்படும் வகையும், பெரும் கூற்று - பெரிய எமன், உயிர் உண்ணும் ஆறும் - உயிரைக் கொண்டுபோக வருத்தும் வகையும், பிணை - (சுற்றத்தோர் முதலியோர்) வந்து சேர்வதற்குக் காரணமாகிய, செல்வம் - செல்வமானது, மாண்பு இன்று - நிலையில்லாமல், இயங்கல் ஆறும் - செல்லும் வகையும், இவை மூன்றும் - ஆகிய இ மூன்றும், புணையின் - (ஒருவனுக்குப் பிறவிப் பெருங் கடற்கு) மரக்கலமாயுள்ள மனத்தின், நிலை - நிலையை, கலக்கும் - கலக்குகின்ற, ஆறு - வழிகளாம்; (எ-று.)

(க-ரை.) நோயால் வருந்துவதும், உயிர் போக நோவதும், செல்வம் அழிவதும் மனவுறுதியைக் கலக்குவன என்பது.

பிணி - கருத்தாப்பொருள் உணர்த்தும் இகர விகுதி புணர்ந்து கெட்ட தொழிற்பெயர். மாண்பு - நிலைமை. இயங்கல் என்பதன் இறுதியில் உம் தொக்கது. ஆறு என்பதை இயங்கலோடும் கூட்டுக. (அஅ)

அருளினை நெஞ்சத் தடைகொடா தானும்
பொருளினைத் துவ்வான் புதைத்துவைப் பானு
மிறந்தின்னா சொல்லகிற் பானுமிம் மூவர்
பிறந்தும் பிறந்திலா தார்.

(இ-ள்.) அருளினை - அருளை, நெஞ்சத்து - மனத்தினிடத்து, அடை கொடாதானும் - நிறைத்து வையாதவனும், பொருளினை - செல்வத்தை, துவ்வான் - (தானும்) நுகராது, புதைத்து- (பிறர்க்குங் கொடாமல்) பூமியில் மறைத்து, வைப்பானும் - வைக்கின்றவனும், இறந்து - தன்னிலை கடந்து, இன்னா - பிறர்க்குத் துன்பந் தருஞ் சொற்களை, சொல்லகிற்பானும் - சொல்ல வல்லவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், பிறந்தும் - மக்கட் பிறப்பிற் பிறந்திருந்தும், பிறந்து இலாதார் - பிறவாதவராவர்; (எ-று.)

(க-ரை.) அருளில்லாதவனும், பொருளை வீணாய்ப் புதைத்து வைக்கின்றவனும், பிறர்க்கு மனம் மிகவும் வருந்தும்படி பேசுகின்றவனும், மக்கட் பிறப்பைச் சார்ந்தவராகக் கருதப்படார் என்பது.

அடை - அடைக்கப்படுவது. துவ்வான் - முற்றெச்சம்; து - முதனிலை. இறந்து - கடந்து; இற - கட. இறந்து இன்னா சொல்லகிற்பான் என்பதற்குத் தன் பகைவன் இறக்க அதன் பின்னும் தீயசொல் சொல்லவல்லவன் என்றுரைத்தலுமாம். (அகூ)

ஈதற்குச் செய்க பொருளை யறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை—யாது
மருள்புரிந்து சொல்லுக சொல்லையிம் மூன்று
மிருளுலகஞ் சேராத வாறு.

(இ-ள்.) பொருளை - செல்வத்தை, ஈதற்கு - பிறருக்குக் கொடுக்கும் பொருட்டு, செய்க - தேடக்கடவன், அறம்நெறி - அறத்தின் வழியில், சேருதற்கு - சேரும் பொருட்டு, பெரும் நூலைச் செய்க - பெருமையாகிய நூற்பொருளைக் கற்கக் கடவன், யாது சொல்லையும் - எத்தன்மைத்தாகிய சொல்லையும், அருள்புரிந்து - அருளை விரும்பி, சொல்லுக - சொல்லக் கடவன், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், இருள் உலகம் - நரக உலகை, சேராத ஆறு - சேராமைக்குக் காரணமாகிய வழிகளாம் ; (எ-று.)

(க-ரை.) அறஞ் செயற்காகப் பொருளையும், அறநெறியி லொழுகுவதற்காகப் படிப்பையும், அருள் விளங்கும்படி பேச்சையும் ஒருவர் கொள்ளவேண்டு மென்பது.

ஈதற்கு—கு, பொருட்டுப் பொருள். நூலைச் செயல் என்பது இங்குத் தகுதியால் கற்பதன்மேற் கூறப்பட்டது. யாதும் - உம் உயர்வு சிறப்பு. யாதும் என்பதன் உம்மையைச் சொல்லை யென்பத னோடு கூட்டுக. (கூ0)

பெறுதிக்கட் பொச்சாந் துரைத்த லுயிரை
யிறுதிக்கண் யாமிழந்தே மென்றன்—மறுவந்து
தன்னுடம்பு கன்றுங்கா ணுத லிம்மூன்று
மன்னு வுடம்பின் குறி.

(இ-ள்.) உயிரை - (தாய்தந்தை முதலிய) உயிர்களை, பெறுதிக் கண் - பெற்றவிடத்து, பொச்சாந்து - (பெற்றோர் தமக்குச் செய்த உதவியையும், தாம் அவர்க்குச் செய்யவேண்டிய உதவியையும்) மறந்து, உரைத்தல் - இகழ்ந்து சொல்லுதலும், இறுதிக் கண் - அவர் தம் கால முடிவில், நாம் இழந்தோம் - நாம் எல்லாவற்றை யும் இழந்து விட்டோம், என்றல் - என்று இரங்குதலும், மறு - நோய், வந்து - வந்ததினால், தன் உடம்பு - தன்னுடைய உடல், கன்றுங் கால் - மெலியுங் காலத்தில், நாணுதல் - (முன் அறஞ்

செய்திலோமே யென்று தனக்குள்ளே) நாணப்படுதலும், இ மூன்றும் - ஆகிய இம் மூன்றும், மன்ற - நிலைபெறுதலில்லாத, உடம்பின் குறி - உடம்பையுடையானிடத்துத் தோன்றும் அடையாளங்களாம் ; (எ-று.)

(க-ரை.) தாய்தந்தையர் இருக்கும்போது அவரை இகழ்ந்து நடப்பதும், அவர்கள் இறந்தபோது வீணாய்த் துன்பப் படுவதும் துன்பம் நேர்ந்தபோது அறஞ் செய்யாது போனேமே யென்று நாணுவதும் உடற்பற்று மிக்க மூடர்கள் செய்கை என்பது.

பெறுதி, இறுதி - தி விகுதிபெற்ற தொழிற் பெயர்கள். நடுநின்ற 'உயிரை' என்னுஞ் சொல் பெறுதிக் கண் என முன்னும், இறுதிக்கண் எனப் பின்னும் சென்றடைதலால் தாப்பிசைப் பொருள் கோள். செய்யுங் கடமைகளைச் செய்த சிறப்புப் பற்றித் தாய்தந்தை முதலியோரை அறிவுப் பொருளாகிய உயிரென்றும், செய்ந்நன்றி யறிதல் முதலிய உயிர்க்குணம் இவனிடத்துத் தோன்றாமையாகிய இழிவுபற்றி இவனை உடம்பு என்றுங் கூறினமையால், அவ் விரண்டும் முறையே அவ் வுயர்வு இழிவுகளைப் பற்றி வந்த திணைவழுவமைதி. பொச்சாந்து - பொச்சா, பகுதி. (௬௧)

விழுத்திணைத் தோன்றா தவனு மெழுத்தினை
யொன்று முணராத வேழையு—மென்று
மிறந்துரை காமுறு வானுமிம் மூவர்
பிறந்தும் பிறவா தவர்.

(இ-ள்.) விழுத்திணை - (அற ஒழுக்கங்களைப் பெறுதற்குரிய) சிறந்த குலத்தில், தோன்றாதவனும் - பிறவாதவனும், எழுத்தினை - இலக்கண நூலை, ஒன்றும் உணராத - எவ்வளவு சிறிதும் அறிந்து கொள்ளாத, ஏழையும் - பேதையும், என்றும் - எப்பொழுதும், இறந்து - முறைதப்பி, உரை - சொற்களை, காமுறுவானும் - பேச விரும்புகின்றவனும், இ மூவர் - ஆகிய இம் மூவரும், பிறந்

தும் - மக்கட் பிறப்பிற் பிறந்தும், பிறவாதவர் - (பிறப்பின் பயனை யடையாமையால்) பிறவாதவராவார்; (எ-று.)

(க-ரை.) நற்குலத்திற் பிறவாதவனும், படிப்பில்லாதவனும், மரியாதை தப்பிப் பேச முயல்கின்றவனும் மனிதர் என்று சொல்லத் தகாதவர் என்பது.

விழுத்திணை - விழுப்பமாகிய திணை; பண்புத் தொகை. எழுத்து - தன்னை யுணர்த்தும் இலக்கண நூலுக்காதலால் காரிய வாகு பெயர். ஒன்றும் - உம் முற்றுப் பொருளுடன் இழிவு சிறப்புப் பொருளிலும் வந்தது. (கூஉ)

இருளாய்க் கழியு முலகமும் யாதுந்
தெரியா துரைக்கும் வெகுள்வும்—பொருளல்ல
காதற் படுக்கும் விழைவு மிவைமூன்றும்
பேதைமை வாழு முயிர்க்கு.

(இ-ள்.) இருளாய் - (அறிவில்லாதவர்க்கிடமாய் அதனால்) இருட்டாய், கழியும் - நாள் கழிக்கின்ற, உலகமும்—, யாதும் - (நன்மை தீமைகளில்) ஒன்றும், தெரியாது - தெரியாமல், உரைக்கும் - சொல்கின்ற, வெகுள்வும் - கோபமும், பொருள் அல்ல - நற்பொருள் அல்லாதவற்றில், காதல் படுக்கும் - அன்பு வைக்கச் செய்யும், விழைவும் - விருப்பமும், இவை மூன்றும் - ஆகிய இம்மூன்றும், வாழும் உயிர்க்கு - உடலோடு கூடி வாழ்கின்ற உயிர்கட்கு, பேதைமை - அறியாமையைத் தருவனவாம்; (எ-று.)

(க-ரை.) அறிவில்லாதவர் இருக்கும் இடமும், நன்மை தீமை தெரியாது கோபித்துரைப்பதும், தீயவைகளில் செல்லும் விருப்பமும் மென்மேலும் அறியாமைக்கு ஏதுவாகிய காரியங்களாம் என்பது.

இருள் அறியாமைக்கு உவமையாகு பெயர். இடத்தின் நிகழும் உயிர்களின் தன்மையை அவ்விடத்தின் மேலேற்றி இலக்

கணையால் இருளாய்க் கழியும் உலகம் என்றார். அல்ல - பண்படி யாகப் பிறந்த பெயர். (கரு)

நண்பில்லார் மாட்டு நகைக்கிழமை செய்வானும்
பெண்பாலைக் காப்பிகழும் பேதையும்—பண்பி
லிழுக்கான சொல்லாடு வானுமிம் மூவ
ரொழுக்கங் கடைப்பிடியா தார்.

(இ-ள்.) நண்பு - நட்புக் குணம், இல்லார் மாட்டு - இல்லாதவரிடத்து, நகைக்கிழமை - அன்புரிமையை, செய்வானும் - செய்கின்றவனும், பெண்பாலை - மனைவியை, காப்பு - காப்பதை, இகழும் - இகழுகின்ற, பேதையும் - அறிவில்லாதவனும், பண்பு இல் - குணமில்லாத, இழுக்கு ஆன - வழுவுதலான, சொல் ஆடுவானும் - சொல்லைச் சொல்பவனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், ஒழுக்கம் - தமக்குரிய ஒழுக்கத்தை, கடைப்பிடியாதார் - உறுதியாகக் கொள்ளாதவராவர்; (எ-று.)

(க-ரை.) நண்பராகத் தகாதவரை நட்புச் செய்கின்றவனும், மனைவியைக் காவாதவனும், இழிமொழி பேசுகின்றவனும் நல்லொழுக்கமில்லாதவர் என்பது.

மாட்டு - ஏழனுருபு. நகைக்கிழமையாவது - நண்பர்கட்குச் செய்யவேண்டிய கடமை. இழுக்கு-முதனிலைத் தொழிற்பெயர். (கசு)

அறிவழுங்கத் தின்னும் பசிநோயு மாந்தர்
செறிவழுங்கத் தோன்றும் விழைவுஞ்—செறுநரின்
வெவ்வுரை நோனு வெகுள்வு மிவைமூன்று
நல்வினை நீக்கும் படை.

(இ-ள்.) அறிவு அழுங்க - நல்லறிவு கெடும்படி, தின்னும் - வருத்துகின்ற, பசிநோயும் - பசியாகிய நோயும், மாந்தர் - நல்லோர், செறிவு அழுங்க - நெருங்குதல் கெடும்படி, தோன்றும் விழைவும் -

உண்டாகும் விருப்பமும், செறுநரின் - பகைவரிடத்துண்டாகும், வெவ்வுரை - கொடிய மொழிகளை, நோஒ - பொறுக்காத, வெகுளியும் - கோபமும், இவை மூன்றும் - ஆகிய இந்த மூன்றும், நல்வினை - நல்ல வினையை, தீர்க்கும்-நீக்குகின்ற, படை - படைக் கருவிகளாம்; (எ-று.)

(க-ரை.) கொடும்பசியாலும், பெருவிருப்பாலும், கொடு மொழி பொறுக்காத கோபத்தாலும் அறமுறை கெடும் என்பது.

செறிவு - தொழிற்பெயர். செறுநர் - வினையாலணையும்பெயர். நோஒ - நோன்—பகுதி. வெவ்வுரை-வெம்மை + உரை. பசிநோய் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. (கரு)

கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் றவசி கொடிதொரீஇ
நல்லவை செய்வா னரச னிவர்மூவர்
பெய்யெனப் பெய்யு மழை.

(இ-ள்.) கொண்டான் - கொண்ட கணவனுடைய, குறிப்பு அறிவாள் - குறிப்பறிந்து நடக்கின்றவள், பெண்டாட்டி - மனைவி யாவாள், கொண்டன - தான் மேற்கொண்ட விரதங்களை, செய் வகை - செய்யும் முறைப்படி, செய்வான் - செய்பவன், தவசி - தவசி யாவான், கொடிது - தீங்கினை, ஒரீஇ - நீக்கி, நல்லவை - (குடி களுக்கு) நன்மையானவற்றை, செய்வான் - செய்பவன், அரசன் - அரசனாவான், இ மூவர் - ஆகிய இவர் மூவரும், பெய் என - (மழையைப்) பெய் என்று சொல்ல, மழை பெய்யும் - மழை பொழி யும்; (எ-று.)

(க-ரை.) குறிப்பறிந்து நடக்கும் பெண்டாட்டியும், நோன்பு களை முறைப்படி நடத்துகிற தவசியும், குடிகளுக்குத் தீமையை விலக்கி நன்மையைச் செய்கின்ற அரசனும் உள்ள இடத்தில் மழை தவறாது பெய்யும் என்பது.

பெண்டு ஆட்டி - பெண்டு ஆந்தன்மையை ஆளுபவள். தவசி செய்வகையாவன, மனம் பொறிவழியிற் போகாமல் நிற்றற் பொருட்டு நோன்புகளால் உண்டி சுருங்குதல், மழை பனி நீர்நிலை வெயில் இவற்றில் நிற்றல் முதலியவைகளை மேற்கொண்டு அவற்றால் தமக்கு வரும் துன்பங்களைப் பொறுத்தல். (கசு)

ஐங்குரவ ராணை மறுத்தலு மார்வுற்ற
வெஞ்சாத நட்பினுட் பொய்வழக்கு—நெஞ்சமர்ந்த
கற்புடை யாளைத் துறத்தலு மிம்மூன்று
நற்புடையி லாளர் தொழில்.

(இ-ள்) ஐங்குரவர் - ஐந்து பெரியோர்களுடைய, ஆணை - கட்டளையை, மறுத்தலும் - மறுத்து நடத்தலும், ஆர்வு உற்ற - விரும்பிய, எஞ்சாத - குறையாமல் வளர்கின்ற, நட்பினுள் - நட்புச்செய்வாரிடத்து, பொய் வழக்கு - பொய் பேசுதலும், நெஞ்சு அமர்ந்த - (தன்னை) மனத்தால் விரும்பிய, கற்பு உடையாளை - கற்புடைய மனைவியை, துறத்தலும் - விடுதலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நல்புடை - அறத்தினது, இல் ஆளர் - இன்மையை ஆளுதலுடையாரது, தொழில் - தொழில்களாம்; (எ-று.)

(க-ரை.) ஐங்குரவர் ஆணைப்படி நடவாமையும், நண்பனிடத்துப் பொய் சொல்லுதலும், கற்புடை மனைவியைத் துறத்தலும், பாவச் செய்கைகள் என்பது.

ஐங்குரவர் - அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தம்முன். நெஞ்சு - இடவாகுபெயர். வழக்கு - முதனிலை திரிந்த தொழிற் பெயர். துறத்தல் - முற்றிலும் நீக்கிவிடுதல். (கஎ)

செந்தீ முதல்வ ரறநினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவு மிம்மூன்றுந்
திங்கண்மும் மாரிக்கு வித்து.

(இ-ள்.) செந்தீ - வேள்விச் செந்தீயை, முதல்வர் - வளர்க்கின்ற அந்தணர்கள், அறம் - தமக்குரிய அறத்தை, நினைந்து வாழ்தலும் - மறவாது வாழ்தலும், வெம் சின வேந்தன் - கொடுமையாகிய கோபத்தைக் காட்டுகின்ற அரசன், முறை நெறியில் - முறையாக ஆளும் வழியில், சேர்தலும் - சேர்ந்து நடத்தலும், பெண்பால் - பெண்ணுக்கு உரிய குணம் அமைந்தவள், கொழுநன் வழி - தன் கணவனுடைய குறிப்பின் வழியில், செலவும்-நடத்தலும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், திங்கள் - மாதந்தோறும் பெய்ய வேண்டிய, மும்மாரிக்கு - மூன்று மழைக்கும், வித்து - காரணங்களாம்; (எ-று.)

(க-ரை.) அந்தணர் மறைவழி நடத்தலாலும், அரசன் செங்கோல் நெறி பிறழாததாலும், மனைவி கணவனுக்கு இசைந்து நடப்பதாலும், திங்கள் மும்மாரி பொழிந்து நாடு செழிக்கும் என்பது.

தீக்களில் வேள்வித்தீ சிறந்ததாதலால் வேள்வித் தீயைச் செந்தீ என்றார். செலவு - தொழிற்பெயர். முறை - தானியாகு பெயர். (கஅ)

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலுங் காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையு—முட்டின்றி
யல்லவை செய்யு மலவலையு மிம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர்.

(இ-ள்.) கற்றாரை - கற்றறிவுடையாரை, கைவிட்டு - முற்றும் விட்டு நீங்கி, வாழ்தலும் - வாழ்பவனும், காமுற்ற - தான் விரும்பியவற்றை, பெட்டாங்கு - விரும்பினாற்போல, செய்து ஒழுகும் - செய்து நடக்கும், பேதையும் - அறிவில்லாதவனும், முட்டு இன்றி - தடையில்லாமல், அல்லவை செய்யும் - தீங்குகளைச் செய்யும், அலவலையும் - பேச்சுக்காரனும், இ மூவர் - ஆகிய இம்மூவரும், நல் உலகம் - நல்ல உலகங்களை, சேராதவர் - சேராதவராவார்; (எ-று.)

(க-ரை.) கற்றவரைக் கைவிட்டிருப்பதும், வேண்டியவற்றை ஆராயாமல் செய்யத் துணிதலும், தீங்குகளைச் செய்து அவற்றைப் பற்றிப் பேசுதலும் நல்ல உலகம் சேரக் காரணமாகமாட்டா என்பது.

வாழ்தல் என்பது வாழ்வானுடைய தற்கிழமையாகி நிற்றலால் சேராதவர் என்ற குறிப்பால் அவ்வாழ்வோனை உணர்த்தியது. பெட்டாங்கு - பெட்ட ஆங்கு. (கக)

பத்திமை சான்ற படையும் பலர்தொகினு
மெத்துணையு மஞ்சா வெயிலரணும்—வைத்தமைந்த
வெண்ணி னுலவா விழுநிதியு மிம்மூன்று
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு.

(இ-ள்.) பத்திமைசான்ற - (தம்மேல்) அன்பு நிறைந்த, படையும் - சேனையும், பலர் தொகினும் - பகைவர் பலர்கூடி எதிர்ப்பினும், எத்துணையும் - எவ்வளவும், அஞ்சா - பயப்படவேண்டாத எயில் அரணும் - மதிலரணும், வைத்து-வைக்கப்பட்டு, அமைந்து - நிறைந்துள்ள, எண்ணின் - எண்ணப்புகின், உலவா - முற்றுப் பெறாத, விழு நிதியும் - சிறப்பாகிய பொருள் வைப்பும், இ மூன்றும் - ஆகிய இம்மூன்றும், மண் ஆளும் - பூமியை ஆளுகின்ற, வேந்தர்க்கு - அரசர்க்கு, உறுப்பு - உறுப்புகளாம்; (எ-று.)

(க-ரை.) படையும் மதிலரணும், மிக்க செல்வமும் நன்கமையப்பெற்றுள்ள அரசனே சிறந்தவன் என்பது.

படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆகிய ஆறும் அரசர்க்கு உறுப்பென்று வள்ளுவர் கூறியிருக்கவும் இவர் படை அரண் செல்வம் ஆகிய மூன்றைமட்டும் குறித்தது அமைச்சையும் நட்பையும் படையுள்ளும், நாட்டை அரணுள்ளும் அடக்கியதனுலென்க. எயிலரண் என்றது மற்றை மலை நீர் காடு அரண்களையும் கருதியதாம். உறுப்பு - தொழிலாகுபெயர். மண் - கருவியாகுபெயர்.

# திரிகடுகம்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

[எண்-பக்கவெண்]

# திரிகடுகம்

## அருஞ்சொற் பொருள் அகராதி

[எண்-செய்யுளெண்]

அகறல் - நீங்குதல் கூ
அரில் - குற்றம் க
அருக்கும் - குறைக்கின்ற ருO
அலந்தார்க்கு - துன்பப்பட்டவர்க்கு சக
அலவலை - கவலைகொள்ளுதலை ௬எ
அல்குல் - நிதம்பம் உரு
அல்பொருள் - பாவம் எஉ
அவாத்தேர் - ஆசையாகிய தேர் உஉ
அவையுள் - சபையில் அ
அழுக்காறு - பொறாமை ௬O
அழுங்க - கெடும்படி கூரு
அளறு - நரகம் உச
ஆய் - ஆராய்ந்தெடுத்த உரு
ஆர்க்கும் - கட்டுகின்ற உ௬
ஆர்த்த - நிறைத்த அ
ஆற்றும்பகடும் - செய்யவல்ல கடாவும் சாகூ
இகந்து - கடந்து எO
இடும்பை - துன்பம் சாO
இயங்கல் ஆறு - செல்லும் வகை அஅ
இரந்து - கெஞ்சி சாஅ
இருதலையும் - இரண்டிடத்தும் கஅ
இருளுலகம் - நரகம் கூக
இருள் தீர - மயக்கம் நீங்க ருசா
இல்லம் - வீடு ௬
இழிந்து - இறங்கி ரு
இழுக்கல் - வழுவுதல் கச
இழை - அணி சச
இறந்துரை - முறைதப்பிச் சொல்லும் சொல் கூஉ
ஈர்ந்த - பிளக்கப்பட்ட ருக
ஈர்வளை - குளிர்ந்த வளையலணிந்தவள் சா௬
உரு - உடம்பு கஅ
உள்ளல் - உள்ளான் என்னும் சிறு பறவை எ
ஊராண்மை - பிறர்மேற் செல்லுகின்ற ஆண்மையாகிய செருக்கு சா
ஊழ் - முறை கரு
ஊறிய - ஊறும்படி சஅ
ஊன் - மாமிசம் ௬சா
எச்சம் - மக்கள் சாஉ
எண்ணின் உலவா - எண்ணிக்கையில் அகப்படாத ௱
எயில் - மதில் ௱
எள்ள - இகழ உO
ஏலா - தகாத ௬உ
ஏற்றார்க்கு - இரந்தவர்க்கு சரு

திருந்திய - குற்றமற்ற ௧
திரை - அலை ௩௯
துச்சு - ஒதுக்குக்குடி ௫௭
துஞ்சு - தூங்குகின்ற ௭
துப்பிச்சை - சோற்றுப் பிச்சை ௫௭
துப்புரவு - அனுபவிக்கப்படும் செல்வம் ௪௩
துவ்வான் - நுகராது ௮௯
துளங்கினும் - தளர்ந்தாலும் ௪௯
தூஉயம் - குற்றமற்றவர்களா யிருக்கின்றோம் ௧௯
தூக்கா - அளந்தறியாத ௬௨
தூரா - தூர்க்காத ௫௬
தூற்றின்கண் - புதரினிடத்து ௮௦
தெற்றென - தெளிவாக ௨௨
தொக்கு - கூடி ௮
தொட்டான் - தோண்டினவன் ௧௬
தொழும்பு - ஏவலாள் ௫௫
தோய்தல் - கூடுதல் ௩௯
நகுவான் - இகழ்வான் ௭௪
நச்சி - விரும்பி ௩௦
நசை - விருப்பம் ௯௪
நட்டான் - நிலைநிறுத்தினவன் ௧௬
நயவர் - நீதியுடையவர் ௭௭
நல்குரவு - வறுமை ௭௧
நற்புடை - அறம் ௯௭
நன்மை - துறவறம் ௧௭
நாடுங்கால் - ஆராயுமிடத்து ௧௯
நிரப்பு - வறுமை ௬௦
நிறை - உறுதிப்பாடு ௮௦
நெறிப்பாடு - வழியிற் பொருந்தல் ௬௮
நொந்தார் - வருந்தினோர் ௬௭
நோக்கு - கருத்து ௨௯
நோனா - பொறாத ௯௫
நோன்பிலியும் - தவமில்லாதவனும் ௨௮
படியின் - படிந்தால் ௮௩
பயவா - பயன்படுதலில்லாத ௫௪
பள்ளி - கல்விச்சாலை ௪௬
பாசத்தளை - கயிற்றுவிலங்கு ௨௨
பாத்து - பகுத்து ௩௧
பால் - பக்கம் ௩௧
பிணக்கு - மாறுபாடு ௭
பிரமாணம் - அளவு ௩௭
பிளிற்றல் - இரைதல் ௫௭
புணை - தோணி ௧௭
புரிந்து - விரும்பி ௭௬
புலம் - அறிவு ௬௦
புலை - இழிதன்மை ௩௯
புல்லுங்கால் - தழுவும்போது ௭௪
புறஞ்செய்தல் - காத்தல் ௬௪
பூண்ட - மேற்கொண்ட ௩௨
பூப்பு - மகளிர் சூதகம் ௧௭
பூவை - காயாம் பூ —
பெட்டாங்கு - விரும்பினாற் போல ௯௯
பெறுதிக்கண் - பெற்ற இடத்து ௯௧
பெற்றம் - மாடு ௪
பேணுங்கால்-விரும்புமிடத்து ௬
பைங்கூழ் - பசிய பயிர் ௫௯
பைத்து - படத்தைப்போன்றது ௨௫
பொச்சாந்து - மறந்து ௧௯
பொதிந்த - மறைத்துவைக்கப்பட்ட ௨௪
பொத்து - பொந்து ௭௫

மடி - சோம்பல் ௨௦
மதியாமை - எண்ணாமை ௨௯
மயக்கம் - கலத்தல் ௩௯
மயல் - மனக்கலக்கம் ௩௫
மறம் - கொடுமை ௧௯
மறுமை - மறுபிறப்பு ௫௨
மறுவந்து - நோயடைந்து ௯௧
மன்று - அறநிலையம் ௯௨
மாசு - குற்றம் ௧௬
மாட்சி - பெருமை ௨௧
மாறு - பகைமை ௬௧
மாற்றம் - சொல் ௭௬
மானத்தார் - பழிக்குநாணுதலுடையவர் ௨௩
முட்டாது - குறைவுபடாது ௩௧
முந்தை - இளம்பருவம் ௫௬
முந்நீர் - கடல் ௩௫
முழுமக்கள் - மூடர்கள் ௮௭
முனிந்து - வெறுத்து ௩௯
மேதை - அறிவுடையவன் ௩௫
மைநீர்மை - குற்றத்தன்மை ௩௫
யாண்டானும் - எங்காயினும் ௫௫
யாப்பு - கட்டு ௮௯
வடு - குற்றம் ௧௩
வல்லே - விரைந்து ௫௦
வள்ளன்மை - வரையாது கொடுத்தல் ௭௫
வற்றது - வல்லது ௧௪
வனப்பு - அழகு ௭௮
வாசி - வட்டம் ௮௧
வான் புகழ் - பெரிய புகழ் ௧௬
வித்து - முளை ௨௨
வியந்து - நன்கு மதித்து ௩௮
விருந்து - புதுமை ௨௬
விழுநிதியம் - சிறப்பாகிய பொருள் ௪௭
விழைவு - விருப்பம் ௩
விறல் - வலிமை ௪௦
வீடும் - அழியும் ௨௨
வெஃகும் - விரும்புகின்ற ௩௮
வெகுளி - சினம் ௪௦
வெண்மொழி - பயனிலாச் சொல் ௩௨
வெருவும் - அச்சமும் ௬௦
வேள்வி - யாகம் ௩௬
வைகலும் - நாடோறும் ௬௧

கழக வெளியீடு—௧௭௦

விளம்பி நாகனார்

இயற்றிய

# நான்மணிக்கடிகை



மறைமலையடிகள் மாணவரும்

கழகத் தமிழ்ப்புலவராயிருந்தவருமாகிய

திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்

எழுதிய

உரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி & சென்னை.

பவ—மார்கழி

# முகவுரை

நான்மணிக்கடிகை என்பது கடைச்சங்கப் புலவர்களால் இயற்றப்பட்ட கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டனுள் ஒன்றாகும்.

கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டாவன:—நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை யைம்பது, திணைமொழி யைம்பது, ஐந்திணை யெழுபது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்பன.

இனி, நான்மணிக்கடிகை என்னும் இந்நூலை யியற்றினார் விளம்பி நாகனார் எனப்படும் நல்லிசைப் புலவராவர். நாகனார் என்னும் பெயருடைய இவர் விளம்பி என்னும் ஊரிலே பிறந்தமையாலோ, இருந்தமையாலோ விளம்பி நாகனார் என்று வழங்கப்பட்டாரெனக் கொள்ளல்வேண்டும். இவர் கடைச்சங்கப் புலவர் எனக் கொள்ளப்படுதலின் இவரது காலம் கி. பி. 200-க்கு முற்பட்டதாகக் கருதலாம்.

இவர் இயற்றிய இந்நூலின் காப்புச்செய்யுளால் இவரது சமயம் வைணவம் என்பது தோற்றம்.

நான்மணிக்கடிகை என்னும் இந்நூற்பெயர் நான்கு நீதிகளையுடைய உவமைமணிகளாற் கோக்கப்பட்ட ஒருவகை அணிகலன் என விரியும். கடவுள் வாழ்த்து

உட்பட நூற்றுநான்கு வெண்பாக்களால் இந்நூல் யாக்கப்பெற்றுள்ளது. இது கடைச்சங்க நூலாகலின் இதன் நடைச்சிறப்பினைப்பற்றிக் கூறல்வேண்டா.

இந்நூற்குப் பழைய உரை ஒன்றுளதேனும், அது குறிப்புரையாயிருக்கின்றமையின், மாணவர்க்கும், இளந் தமிழர்க்கும் தெளிவான முறையிற் பயன்படுமாறு திருவாளர் தி. சு. பாலசுந்தரம் பிள்ளை யவர்களால் எழுதப்பட்ட பதவுரை கருத்துரை விளக்க வுரைகளோ டும் இந்நூலை வெளியிட்டுள்ளோம்.

மாணவர்தம் பருவத்துக்கேற்ற நீதிகளும், உண் மைகளும் இந்நூலின்கண் மிளிர்வதால் இது பள் ளிக்கூடங்களிலும் பாடமாக வைக்கப்படுகின்றது. தமி ழுகம் இதனை ஆதரிப்பதாக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



# நான்மணிக்கடிகை

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

க. மதிமன்னு மாயவன் வாண்முக மொக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும் பூவைப்
புதுமல ரொக்கு நிறம்.

(இ-ள்) மதி - திங்கள், மன்னும் மாயவன் - அழிதலில்லாத திருமாலினது, வாள்முகம் ஒக்கும் - ஒளியையுடைய திருமுகத்தை ஒத்திருக்கும்; கதிர்சேர்ந்த ஞாயிறு - ஒளி சிறந்த ஞாயிறு, சக்கரம் ஒக்கும் - அவனது சக்கரப்படையை ஒத்திருக்கும்; முதுநீர்ப் பழனத்து - வற்றாத நீரையுடைய கழனிகளில் முளைத்த, தாமரைத்தாளின் — செந்தாமரைத் தண்டினின்றும், எதிர்மலர் — தோன்றுஞ் செந்தாமரைப் பூவை, அவன் கண் ஒக்கும் - அவனது கண்கள் ஒத்திருக்கும்; பூவைப் புதுமலர் - காயாமரத்தின் புதுப்பூ, நிறம் ஒக்கும் — அவனது திருமேனியின் நிறத்தை ஒக்கும்.

மன்னுதல்-நிலைபெறுதல். மாயவன்-வியக்கத்தக்க ஆற்றலுடையவன்; திருமால். ஒக்கும் — செய்யுமென்னு முற்று. என்றும் உள்ள நீரென்பார், 'முதுநீ' ரென்றார். முதுமை-பழமை; என்றுந் தொன்று தொட்டு வற்றாது வந்த நீரென்பது பொருள். எதிர்தல் - தோன்றல்; 'எதிர்பூஞ் செவ்வி' என்னுஞ் சிலப்பதிகாரத்திலும் (வேனிற்காதை, சஅ) இப்பொருளுண்மை காண்க. எதிர்மலர் — செவ்வி மலர் எனினுமாம். 'மதி முகமொக்கு' மென்று கூறிய உவமையை 'முகம் மதி யொக்கு' மென்னும் கருத்திற் கொள்க; பிறவும் அன்ன.

இதனை 'மாறியவுவமை' யென ஓரணியாகக் கொள்ளுப. 'நான்மணிக் கடிகை' யென்னு நூல் ஒவ்வொரு பாட்டிலும் நந்நான்கு பொருள் வைத்துக் கூறலின், அக்குறிப்பினை இக் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் நான்கு பொருளே கூறிக் குறிப்பதாயிற்று. இக்குறிப்பினை மேற்பாட்டினுங் காண்க. இது பஃறொடை வெண்பா.

௨. படியை மடியகத் திட்டா னடியினால்
முக்காற் கடந்தான் முழுநில-மக்காலத்
தாப்பனித் தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்.

(இ-ள்) படியை—உலகத்தை, மடியகத்து இட்டான்—வயிற்றில் வைத்தான்; முழு நிலம்—உலகங்கள் முழுமையும், முக்கால் கடந்தான்—மூன்று முறைகளில் தாவியளந்தான்; அக்காலத்து—இந்திரன் மழை பெய்வித்த போது, ஆ பனி - ஆனிரைகளின் குளிர் நடுக்கத்தை, தாங்கிய—தாங்குதற்கு, குன்று எடுத்தான்—'கோவர்த்தன' மென்னும் மலையைக் குடையாகத் தூக்கினான்; சோவின் அருமை—பாணாசுரனது நெருப்பு மதிலின் பெருமையை, அழித்த மகன்—அழித்த பெருமான்.

யசோதைக்குக் கண்ணன் எல்லா உலகங்களையுந் தன் வயிற்றகத்திற் காட்டினனாதலின், 'படியை மடியகத்திட்டா' னென்றார். மடியகத்து, உருபின் மேற் சாரியை நின்றது. மடி-வயிறு, 'மடியகத் திட்டான் மகவை' (கனாத், உஉ) என்னுஞ் சிலப்பதிகாரவடிக்கு அடியார்க்குநல்லாருரைக்கும் உரையைக் காண்க. 'முக்கா' லென்றது, ஒருகால் நிலவுலகத்தையும் மற்றொருகால் விண்ணுலகத்தையுங் கடந்து பின்னொருகால் மாபலியின் தலைமேல் வைத்துக் கீழுலகத்தையும் அளந்தனனென்றற்கு. தாங்கிய- செய்திய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; தாங்குதல் துயர் கெடுத்தல். ஆயர்பாடியினர் தேவேந்திரனுக்குத் தைப்பொங்கலி லிட்ட பொங்கலுணவைத் தானேற்றுக்கொண்டமையால், இந்திரன் சினந்து மழை பெய்வித்த போது, பசுக்கள் குளிரால் நடுங்குதல் கண்டு கண்ணன் 'கோவர்த்தன' மலையைக் குடையாகத் தூக்கிப்பிடித்து அவற்றைப் பாதுகாத்தமையையே ஈண்டுக்

"குன்றெடுத்தா" னென்றார். 'உஷா'விடத்திருந்த 'அநிருத்த'னை மீட்டற்குச் சென்ற போது ஆங்கெதிர்த்துப் பொருத பாணாசுரனை அவன் மதிற் கோட்டையோடு அழித்தமையே சோ அழித்த வரலாறு. அம்மதில் நெருப்பினா னியன்றதாகலின், 'அருமையழித்த' வென்றார். மகன் - பெரியோன்.

## நூல்

௧. எள்ளற்க வென்று மெளியாரென் றென்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கைம் மேலவா - உள்சுடினும்
சீறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

(இ-ள்) என்றும் - எக்காலத்திலும், எளியார் என்று - பொருள்வலிகளாற் குறைந்தவ ரென்று, எள்ளற்க - பிறரை இகழா தொழிக; என் பெறினும் - மிகச் சிறந்த தொன்றைப் பெறுவதானாலும், கொள்ளார் கை - கொள்ளத் தகாதவருடைய கைகள், மேல ஆ - தன்கைகளுக்கு மேற்பட்டன ஆகும்படி, கொள்ளற்க - அவர்பால் ஒன்றும் ஏற்றுக்கொள்ளா தொழிக; சிறு இல் பிறந்தாரை - வறுமை மிக்க குடியிற் பிறந்தவர்களை, உள் சுடினும் - அவர் செய்கை தன துள்ளத்தை வருத்துவதாயினும், சீறற்க - சினவாதொழிக; கூறு அல்லவற்றை - சொல்லத்தகாத சொற்களை, விரைந்து - பதைத்து, கூறற்க-சொல்லா தொழிக.

(க-து) எவரையும் எளியாரென்று இகழாதே; சிறந்த பொருளாயினுந் தகாதவர் கொடுக்க வாங்காதே; தகாதன செய்தாலும் ஏழை மக்களைச் சீறாதே; தகாத சொற்களைப் பதைத்துச் சொல்லி விடாதே.

தன்னிடத்தில் ஒன்றை நச்சி நட்பாய் வரும் காலத்திலும், அல்லது தனக்கு ஆக்கம் வந்த காலத்திலும் பிறரை 'எள்ளற்க' வென்பார், 'என்றும்' என்றார். என்பெறினும் - உம்மை உயர்வு சிறப்பு. மேல - பலவின் பால் முற்று. ஆ - ஈறு தொகுத்தல். சுடினும் - உம்மை எதிர்மறை. சிற்றில் என் புழி, சிறுமை வறுமை மேனின்றது. கூறல்லவற்றை என் பதில், அல் எதிர்மறை விகுதி. கூறு அல் அ அற்று ஐ என்று சொற் பிரிவு கொள்க, அ - பெயர் விகுதி.

உ. பறைபட வாழா வசுணமா வுள்ளம்
குறைபட வாழா* ருரவோர் - நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாந் தனக்கொவ்வாச்
சொற்பட வாழாதாஞ் சால்பு.

(இ-ள்) அசுணமா - கேகயப் பறவைகள், பறைபட வாழா - பறையின் ஓசை தஞ்செவியிற்பட்டால் உயிர்வாழ மாட்டா; உரவோர் - அறிவுடையோர், உள்ளம் குறைபட வாழார் - தமது பெருநிலை குறைபட்டால் உயிர்தாங்கமாட்டார்; நிறைவனத்து - மரங்கள் நிறைந்த காட்டில், வெதிர் - மூங்கில்கள், நெல்பட்டகண்ணே - நெல்லுண்டானபோதே, சாம் - பட்டுப்போகும்; சால்பு - நிறைவுடைய சான்றோர், சொல்பட வாழாது - தமது நிறைவுக்குக் குறைவான இழிவுரைகள் உண்டானால் உயிர்வாழமாட்டார்.

(க-து) சான்றோர்கள் நமக்கு மானக்கேடு உண்டாகும்படி உயிர்வாழமாட்டார்.

பறை - ஒருமுகக் கருவி. அசுணமா பறையோசை கேட்கின் இறந்துபடு மென்பதனை 'மறையிற்றன யாழ்கேட்ட மானை யருளா, தறை கொன்று மற்றதனாருயி ரெஞ்சப், பறையறைந் தாங்கு' என்னும் நெய்தற் கலியா (உசு) னுணர்க. 'உள்ள' மென்றது ஈண்டு ஊக்கத்தை. 'உள்ளத் தனைய துயர்வு' (திருக்குறள், ஊக்கமுடைமை. ரு) என்பதுங் காண்க. தமது ஊக்கங் குறையும்படி ஏதேனும் அவர்மொழி ஏற்படுமானால், உரவோர் உயிர் தாங்காரென்பது கருத்து. நெற்பட்டக்கண் - கண் வினையெச்ச விகுதி; ஈண்டு விகாரத்து இயல்பு. சாம் - ஈற்று மிசையுகரம் மெய்யொடுங் கெட்டது. பெரியோர் செயல் அவரியல்பின்மேலேற்றிச் 'சால்பு வாழாது' எனப்பட்டது. இச்செய்யுளிற் கூறப்பட்ட கருத்துண்மைகள் நான்கும் ஒன்றேயாயினும், நான்முறைபற்றி நாற்பொருளாய்க் கூறி விளக்கினார்; மேல்வருவனவற்றையும் இங்ஙனமே கொள்க.

ந. மண்ணி யறிப மணிநலம் பண்ணமைத்துத்
தேறிய பின்னறிப மாநலம் மாசறச்-

* பெரியோர்—எனவும் பாடம்.

சுட்டறிப பொன்னி னலங்காண்பார் கெட்டறிப
கேளிரா னாய பயன்.

(இ-ள்) மணி நலம் - மாணிக்கம் முதலான மணிகளின் நல்லியல்பை, மண்ணி அறிப - கழுவியறிவார்கள்; மா நலம் - குதிரையின் நல்லியல்பை, பண் அமைத்து - அதன்மேற் சேணமமைத்து, ஏறியபின் அறிப - ஏறியபின் அறிவார்கள்; பொன்னின் நலம் காண்பர் - பொன்னின் மாற்றையறிவார், மாசு அற - குற்றறக்கெட, சுட்டு அறிப - அதனை உருக்கியறிவார்கள்; கேளிரான் ஆய பயன் - உறவினரா லுண்டாகும் பயனை, கெட்டு அறிப - தம் செல்வமெல்லாங் கெட அறிவார்கள்.

(க-து) உறவினர்கட்குப் பொருள் கொடுத்து உதவி செய்பவரே செல்வங்கெட்டு வறுமையுறும்போது தமது உறவினராலுண்டாகும் பயனை நன்கறிவர்.

மண்ணல் - கழுவல். பண் - சேணத்தை யுணர்த்துதலைப் 'பண்ணென்ப பரிமாவின் கலனையும் பேர்' (கக : ௯கா, கக) என்னுஞ் சூடாமணி நிகண்டிறாற் காண்க. பொன்னின் நலமென்பது, வெள்ளி முதலியன கலவாமை. காண்பார், இதனை மற்றவற்றிற்குங் கூட்டியுரைக்க. கெட்டு - கெடவென்பதன் றிரிபு. கேளிர்- 'கேண்மை' யென்னும் பண் படியாகப் பிறந்த பல்லோர் படர்க்கைப் பெயர். செல்வமிக்கா னொருவன் தான் வறுமையுற்ற காலத்துக் கேளிரின் நன்றியறிவை நன்கறிவா னாதலின், 'கெட்டறிப......பயன்' என்றார்.

ச. கள்ளி வயிற்றி னகில்பிறக்கு மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கு மறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி.

(இ-ள்) அகில் - அகிற்கட்டை, கள்ளிவயிற்றின் பிறக்கும் - கள்ளிமரத்தின் நடுவே யுண்டாகும்; ஒள் அரிதாரம் - ஒளியுள்ள அரிதாரம், மான் வயிற்றின் பிறக்கும் - மான்வயிற்றிலுண்டாகும்; பல் விலைய முத்தம் - மிக்க விலையுள்ள முத்துக்கள், பெரும் கடலுள் பிறக்கும் - பெரிய கடலிற் பிறக்கும்;

நல் ஆள் - நல்ல மக்கள், பிறக்கும் குடி - பிறக்குங் குடியை, அறிவார் யார் - முன் அறியவல்லவர் யாவர்? (எவருமிலர்).

(க-து) எக்குடியினும் நன்மக்கள் தோன்றுவர்.

கள்ளி - சதுரக்கள்ளி; அகின்மரம் வேறே யிருப்பினும், இக்கள்ளியினுள் உண்டாகும் ஊள்ளீடு அகில்போல் மண முடைமையின், இதனையும் 'அகி'லெனக் கொள்வர். விலைய - குறிப்புப் பெயரெச்சம். பல்விலைய என்பதிற் பன்மை மிகுதி மேற்று. ஆள்-நல்லியல்புகளை ஆளும் நன்மக்கட்குப் பெயராய் வந்தமையின் தொழிலாகுபெயராம். எக்குடியினும் நல்லார் பிறத்தலைப் பண்டும் இன்றுங் காண்கின்றமையின், அவர் பிறக்குங்குடி இதுதானென்று துணிந்தறிதற் கூடாமையான் 'அறிவார் யார்' என்றார்.

ரு. கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மதம் - மெல்லென்
றருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.

(இ - ள்) கதிர்மணி - ஒளியுள்ள மணிகள், கல்லில் பிறக்கும் - மலையிலுண்டாகும்; உயர் மதம் - மிக்க களிப்பு, காதலி சொல்லில் பிறக்கும் - காதலியினது இன்சொல்லில் தோன்றும்; அறநெறி - அறவழிகள், மெல் என்ற அருளில் பிறக்கும் - மென்மை பொருந்திய அருளினிடம் உண்டாகும்; எல்லாம் - அவ்வறத்தோடு ஏனைய இன்பம் முதலியவெல்லாமும், பொருளில் பிறந்துவிடும் - செல்வப் பொருளி லுண்டாய் விடும்.

(க-து) மணிகள் மலையிலும், இன்பம் காதலியின் சொல்லிலும், அறநெறி அருளிலும், அவ்வறமும் இன்பமும் முதலான ஏனைய எல்லாப் பேறுகளுஞ் செல்வத்திலும் உண்டாகுமென்பது.

கல் - கருவியாகு பெயராய் மலையை யுணர்த்தும். கற்புடை மனைவியின் சொல்லில் இன்பம் பயக்குமென்பார் 'காதலி .....மதம்' என்றார். மெல்லென்ற அருள் - அறக் கருணை; அகரம் தொக்கது. அறநெறிக்கு அருளொன்றுமே ஏது வெனற்கு 'அருளிற் பிறக்கு மறநெறி' யெனப்பட்டது.

'அறனு மருளுடையான் கண்ணதே யாகும்' என்பது சிறு. பஞ்சமூலம். அறமும் இன்பமுமெல்லாம் பொருளிற் பிறந்து விடுதலைப் 'பொருளானு மெல்லாம் (௱௯:௨) என்னுந் திருக் குறளாற் றெளிக.

௯. திருவொக்குந் தீதி லொழுக்கம் பெரிய
அறனொக்கு மாற்றி னொழுகல்-பிறனைக்
கொலையொக்குங் கொண்டுகண் மாறல் புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.

(இ-ள்) தீது இல் ஒழுக்கம் - தீமை கலவாத நல் லொழுக்கம், திரு ஒக்கும் - செல்வத்தை யொக்கும்; ஆற்றின் ஒழுகல் - வழிப்படி ஒழுகுதல், பெரிய அறன் ஒக்கும் - சிறந்த அறச் செய்கையோடு ஒக்கும்; பிறனைக் கொண்டு - பிறனொரு வனை நட்பாகக் கொண்டு, கண்மாறல் - பின்பு அவனுக்கு மாறாக அந்நட்பு மாறிப் புறங்கூறல், கொலை ஒக்கும் - அவனைக் கொலை செய்தல் போன்றதாகும்; போற்றாதார் முன்னர் - தம்மை மதியாதாரிடத்தில், செலவு - சென்று ஒன்றை நயத்தல், புலை ஒக்கும் - இழிதகைமையை ஒப்ப தாகும்.

(க-து) நல்லொழுக்கம் செல்வம் போன்றது; முறை யான இல்லற வொழுக்கம் துறவறத்தைப் போன்றது; பிறரைப் புறங்கூறல் அவரைக் கொலை செய்தமை போல்வ தாம்; தம்மை மதியாரைத் தாம் மதித்தல் இழிதகைமையாகும்.

நல்லொழுக்க முடையார் செல்வரைப் போல் நன்மதிப் பும், வாழ்க்கையில் இடுக்கணின்மையும், உயர்வும், புகழுமான இம்மை நலங்களையும் பெற்றிடுதல் திண்ணமாதலின், 'திரு வொக்கு' மென்றார். முறையான உலக வாழ்க்கை துறவற வாழ்க்கையை யொத்தலின், 'பெரிய அறன் ஒக்கு' மெனப் பட்டது. பெரிய அறன் - துறவறம். ஆற்றின் - இல்லற ஆறு;

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவ தெவன்." (இல்வாழ்க்கை, ௯). என்பதும் காண்க. கண்மாறல் - ஒரு சொன்னீர்மைத்து. கருத்து மாற லென்பது பொருள். புலை - தன்மையின் மேலது. முன்னர் - எழாவதன் இடப்பொருளது.

எ. கள்வமென் பார்க்குந் துயிலில்லை காதலிமாட்
டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை யொண்பொருள்
செய்வமென் பார்க்குந் துயிலில்லை யப்பொருள்
காப்பார்க்கு மில்லை துயில்.

(இ-ள்) கள்வம் என்பார்க்கும் - திருடுவே மென்று சோர்வுநேரம் பார்ப்பார்க்கும், காதலிமாட்டு - காதலியினிடத்தில், உள்ளம் வைப்பார்க்கும் - விருப்பம் வைத்திருப்பார்க்கும், ஒண் பொருள் - சிறந்த செல்வப் பொருளை, செய்வம் என்பார்க்கும் - பெருக்குவ மென்று கருதி யுழைப்பார்க்கும், அப்பொருள் - தேடிய அப்பொருளை, காப்பார்க்கும் - களவாலும் பிறவாற்றாலுங் கெடாதபடி பாதுகாப்பவர்கட்கும், துயில் இல்லை - தூக்கம் பிடிப்பதில்லை.

(க-து) திருடர்க்கும், தலைவிமாட்டு விருப்புற்ற தலைமகனுக்கும், பொருள் தேடுவார்க்கும், அப்பொருளைப் பாதுகாப்பார்க்கும் தூக்கம் பிடியாது.

கள்வம், செய்வம் - தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்றுகள். என்பார், வைப்பார், காப்பார் - வினையாலணையும் பெயர்கள். உம்மை - எச்சவும்மைகள். உள்ளம் - விருப்பத்தின் மேலது. பொருள் - தன்னையுடையார்க்கு ஏனையோரிடையில் விளக்கந்தரலின், அஃது ஒண்பொருளெனப்பட்டது. துயில்- முதனிலைத் தொழிற் பெயர்.

அ. கற்றார்முற் றோன்றா கழிவிரக்கங் காதலித்தொன்
றுற்றார்முற் றோன்று முறுமுதல் - தெற்றென
அல்ல புரிந்தார்க் கறந்தோன்றா வெல்லாம்
வெகுண்டார்முற் றோன்றா கெடும்.

(இ-ள்) கழிவு இரக்கம் - இழந்த பொருள்களுக்கு இரங்குதல், கற்றார்முன் தோன்றா - கற்றறிந்த பெரியார்பால் தோன்றாது; காதலித்து - ஊக்கங் கொண்டு, ஒன்று உற்றார் முன் - ஒரு நன்முயற்சியைத் தொடங்கி ஆற்றுவார்பால், உறுமுதல் - விரைவிற் கிட்டாமையாலாகிய முயற்சித் துன்பம், தோன்றா - தோன்றாது; தெற்றென - தெளிவாய், அல்ல புரிந்தார்க்கு - தீயவை செய்வார்க்கு, அறம் தோன்றா - நல்லவை தோன்றமாட்டா ; எல்லாம் - எல்லா நன்மைகளும்,

வெகுண்டார் முன் - சினந்து கொள்வாரிடத்தில், தோன்றா கெடும் - தோன்றாதனவாய்க் கெட்டுப்போம்.

(க-து) கழிந்துவிட்ட பொருள்களைப் பற்றிய துன்பம் கற்றுத்தெளிந்தார் மாட்டும், முயற்சித்துன்பம் ஊக்க முடையார் பாலும், அறத்தின் உண்மைகள் தீயவை செய்வார் பாலும், எல்லா நன்மைகளுஞ் சினந்தார்பாலுந் தோன்றாவாம்.

அவரவர் உள்ளப்போக்குக்கு அவ்வவை எதிர்மாறாய்நிற்றலின், 'தோன்றா' வெனப்பட்டது. கழிவு, முதல் - ஆகுபெயர்கள். முதல் மூன்றிடங்களிலுந் 'தோன்றா' வென்பது துவ்வீறு தொக்க ஒன்றன் படர்க்கை எதிர்மறை வினைமுற்று. ஈற்றிலுள்ளது 'தோன்றாக் கெடு' மென ஒற்றுமிகாமையின், முற்றெச்ச மென்க. 'முதல்' ஒரு செயலைமுடித்தற்கு ஏதுவாய் முதலில் நிகழும் முயற்சிப்பெருமையை யுணர்த்திற்று. அல்ல - குறிப்பு வினைப்பெயர். 'தெற்றென' வென்றது, அறிந்துந் தீயவை புரிந்தாரென்றற்கு.

கூ. நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்புங்
குளத்துக் கணியென்ப தாமரை பெண்மை
நலத்துக் கணியென்ப நாணந் தனக்கணியாம்
தான்செல் லுலகத் தறம்.

(இ-ள்) நெல்லும் கரும்பும் - நெற்பயிருங் கரும்பின் பயிரும், நிலத்துக்கு அணி என்ப - வயலுக்கு அழகென்று சொல்வர்; தாமரை - செந்தாமரைக் காடுகள், குளத்துக்கு அணி என்ப - குளங்களுக்கு அழகு என்று சொல்லுவர்; நாணம் - நாணப்படு மியல்பு, பெண்மை நலத்துக்கு - (பெண்தன்மைக்குரிய) கற்பாகிய நன்மைக்கு, அழகு என்ப - அழகென்று சொல்லுவார்; தான் செல்லும் உலகத்து அறம் - தான் செல்லும் மறுமை யுலகத்துக்குத் துணையாகச் செய்யப்பட்ட அறங்கள், தனக்கு அணி ஆம் - ஒருவனுக்கு அழகாகும்.

(க-து) நெல்லுங் கரும்புங் கழனிக்கு அழகு; தாமரை குளத்துக்கு அழகு; நாணம் பெண்மைக்கு அழகு; அறங்கள் ஆண்மைக்கு அழகாம்.

நெல்லையுங் கரும்பையு நோக்கி நிலம் மருதநிலமாகிய வயலெனப்பட்டது. என்ப - பகர மென்னும் பல்லோர்

படர்க்கை விகுதி பெற்ற எதிர்கால வினைமுற்று. பெண்மை நலம் - இரு பெயரொட்டு; பெண்மை-பெண்டிரின் றன்மை; பெண்மை நலம் - கற்பு.

கO. கந்திற் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர
மந்திரத் தாற்பிணிப்பர் மாநாகம் - கொந்தி
இரும்பிற் பிணிப்பர் கயத்தைச்சான் றோரை
நயத்திற் பிணித்து விடல்.

(இ-ள்) களிற்றை - யானையை, கந்தின் பிணிப்பர் - கட்டுத்தறியினால் வயப்படுத்துவர் (பாகர்); மா நாகம் - நல்ல பாம்பை, கதம் தவிர - அதன் சீற்றந் தவிரும்படி, மந்திரத்தால் பிணிப்பர் - மந்திரத்தினால் வயப்படுத்துவர் (மாந்திரிகர்); கயத்தை - கீழ்மகனை, கொந்தி - உடம்பை ஒறுத்து, இரும்பின் பிணிப்பர் - விலங்கினால் வயப்படுத்துவர் (அரசர்); சான்றோரை - பெரியவர்களை, நயத்தின் - இன்சொல் முதலிய வற்றால், பிணித்து விடல் - வயப்படுத்தி விடுக; (அறிவுடையோர்).

(க-து) யானையைத் தறியாலும், பாம்பை மந்திர மொழியாலும், கீழ்மக்களை விலங்காலும் மக்கள் வயப்படுத்துவார்; ஆனால், சான்றோரை இன்சொற்களால் வயப்படுத்த வேண்டும்.

மா வென்னும் அடைமொழி ஒருசாதியை யுணர்த்திற்று. 'கொந்தி' யென்றது, இயகுந் துன்புறுத்தலை யுணர்த்தும்; "கொல்லச், சுரப்பதாங் கீழ்" (ஈயாமை, கூ) என்னும் நாலடியாரை நினைவு கூர்க. இரும்பு - கருவியாகு பெயர். கயம் - கயவர்; கீழ்மக்கள். 'நய'மென்றது, நினைவினிமை. சொல்லினிமை, செயலினிமையாகிய எல்லா இனிமைகளையு மெண்க. பிணித்துவிடல் - வியங்கோள்; அல் - விகுதி.

கக. கன்றாமை வேண்டுங் கடிய பிறர்செய்த
நன்றியை *நன்றாக் கொளல்வேண்டு-மென்றும்
விடல்வேண்டுந் தங்கண் வெகுளி யடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை.

---

* கொல்லாக் - எனவும் பாடம்

(இ-ள்) கடிய- பிறர் செய்யும் அஞ்சத்தக்க கடுஞ் செயல்களை, கன்றாமை வேண்டும் - நினைந்து நினைந்து கறுவாமை வேண்டும்; பிறர் செய்த நன்றியை - பிறர் செய்யும் நன்மைகளை, நன்றா - பெரிதும்; கொளல் வேண்டும் - நினைவிலிருத்தல் வேண்டும்; தங்கண் வெகுளி - தம்பால் உண்டாகும் பெருஞ் சினத்தை, விடல் வேண்டும் - நீக்குதல் வேண்டும்; ஆக்கம் - முற்போக்கை, சிதைக்கும் வினை - கெடுக்குந் தொழிலை, அடல் வேண்டும் - ஒழித்தல் வேண்டும்.

(க-து) பிறர் செய்த தீமைகட்காக அவரைக் கறுவாமை வேண்டும்; ஆனால் அவர் செய்த நன்மைகளை மறவாமை வேண்டும்; சினத்தை விடல் வேண்டும்; முற்போக்கைத் தடுக்குந் தீய தொழில்களைக் கெடுத்தல் வேண்டும்.

கன்றல் - ஒன்றையே நினைத்து நினைத்துப் புழுங்குதல்: இங்குப் புழுங்கிச் செய்தவன் மேற் வயிரங் கொள்ளாமை வேண்டு மென்னுங் கருத்துப்பட வந்தது. 'கன்றிக் கறுத்தெழுந்து' (அவை யறிதல், ரு) என்னும் நாலடியார் திருமொழியை உற்றுக் காண்க. கடிய - பலவின்பாற் படர்க்கைப் பெயர். வெகுளி-தொழிற் பெயர். ஆக்க மென்பது ஆதல் என்னும் பொருளது; செல்வம், கல்வி, நல்லொழுக்கம், புகழ். இம்மை மறுமைப் பயன்களாகிய இவை யெல்லாவற்றிலும் மேலாதலே ஈண்டு 'ஆக்க'மெனவும், அதற்குத் தடையாய்ச் சோம்பல், ஒழுங்கின்மை முதலியவற்றால் விளையுந் தீய செயல்களே 'சிதைக்கும் வினை' யெனவுங் கூறப்பட்டன. கொல்லா - என்னும் பாடத்துக்கு, ஒருவன் செய்த நன்றியை மறந்து அவனுக்கே தீங்கு செய்யாமல் என்க.

கஉ. பல்லினா னோய்செய்யும் பாம்பெலாங்-*கொல்லேறு
கோட்டாலே னோய்செய்யுங் குறித்தாரை யூடி
முகத்தானே நோய்செய்வர் மகளிர் முனிவர்
தவத்தாற் †றருகுவர் நோய்.

(இ-ள்) பாம்பு எலாம் - எல்லாப் பாம்புகளும், பல்லினால் நோய் செய்யும் - பிறர்க்குப் பல்லினால் துன்பந்தரும்; கொல் ஏறு - கொலை பயிலுங் காளை மாடு, குறித்தாரை - தன்

* கொல்களிறு; † தருக்குவர் - எனவும் பாடங்கள்.

றாற் குறித்துக் கொள்ளப்பட்டவர்க்கு, கோட்டால் - கொம்பு களால், நோய் செய்யும் - துன்பந்தரும் ; மகளிர் - பெண் மக் கள், ஊடி - பிணங்கி, முகத்தால் - தம் முகக்குறிப்பினால், நோய் செய்வர் - துன்பந்தருவர் ; முனிவர் - தவமுடையார், தவத்தால் - தமது தவவலிமையால், நோய் தருகுவர் - துன்பந் தருவர்.

(க-து) பாம்பு பல்லாலும், ஏறு கொம்பாலும், மகளிர் முகத்தாலும் பிறர்க்குத் துன்பஞ் செய்வர் ; முனிவர் தவத் தாற் றுன்பந் தருவர்.

நோய்செயல்— ஒரு சொற்றன்மைத்து; நோய் - துன்பம்; இதற்கு நோ - பகுதி; இனி, கொல்களிறு கோட்டால் 'நோய் செய்யு' மென்னும் பாடம், களிறுக்குக் கோட்டானோய் செய்தலேயன்றிப் பிறவாறு முண்மையின் சிறவாமை காண்க.

' தருக்குவர் ' பாடமாயின் ' மிகுவிப்பர் ' என்பது பொருள். முனிவர் எல்லா உயிர்களையும் தம்மோடொக்க நோக்குபவராதலால் ' தருகுவர் ' என்றார். ' பையவே சென்று பாண்டியற்காகவே ' எனச் சம்பந்தப் பெருமான் வாக்கை நோக்குக. தருகுவர் - குச்சாரியை பெற்றது.

௧௩. பறைநன்று பண்ணமையா யாழின் - நிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரின் - பண்ணழிந்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரின்
தீர்தலிற் றீப்புகுத னன்று.

(இ-ள்) பண் அமையா - பண்ணிசை யமையாத, யாழின் - 'யா'ழென்னும் இசைக் கருவியினும், பறைநன்று - ' பறை ' யென்னும் பேரோசைக் கருவி நன்றாம் ; பீடு இலா - பெருந்தன்மைகள் அமையாத, மாந்தரின் - ஆண் மக்களினும், நிறை நின்ற - கற்பில் நின்று அடக்கமுடைய, பெண் நன்று - பெண் மக்கள் நல்லர் ; பண் அழிந்து - பதங் கெட்டு, ஆர்த லின் - உண்டலினும், பசித்தல் நன்று - பசியுடன் வருந்து தல் நன்று ; பசைந்தாரின் - தம்மை விரும்பினாரினின்றும், தீர்தலின் - நீங்கி உயிர்வாழ்தலைவிட, தீப்புகுதல் நன்று - எரியில் வீழ்ந்து உயிர் விடுதல் நல்லது.

(க-து.) பறையும் இசையமையா யாழும் ஒன்று; கற்பமைந்த பெண்டிரும் வினைத்திறனறியா ஆடவரும் ஒன்று, பசித்தலும் பண்டங்களைப் பதங்கெட உண்ணலும் ஒன்று; தீப்புகலும், விரும்பினரை நீங்கி வாழலும் ஒன்றென்க.

எனவே 'யாழ் இசையமைதல் வேண்டும்' என்பது முதலாக இந்நான்கிற்கும் உடம்பாட்டிற் பொருளுணர்ந்து கொள்க. பண் - இசைவான ஒலிக்குறிப்பு. நிறை - தொழிற் பெயர். நினைவையுஞ் சொல்லையுஞ் செயலையும் ஒருவழி நிறுத்துதலென்பது பொருள். நிறை நின்று - ஏழனுருபுதொகை. பெண் நன்று என்புழி. நன் றென்பதை உயர்திணையாய்க் கொள்க. நன்று நான்குங் குறிப்பு வினைமுற்று. பீடு - ஆள் வினைத்திறத்தின்மேலும். மாந்தர் - ஆடவர் மேலுங் குறிப்பா னின்றன. ஆள் வினைத்திறத்திற் பெண்மக்கள் ஆடவரினும் ஆற்றல் குறைந்தவராதலின். அத்திறமமையா ஆடவரினும் பெண்டிர் நல்லரென்றார். மற்று அவ்விருதிறத்தாரினும் உயர்வு தாழ்வு கற்பித்தல் கருதி யன்றென்க. பண் அழிவு இங்குப் பண்டங்களின் பதனழிவை யுணர்த்திற்று. 'அழிந்த ஆர்தலி' னென்றுரைப்பினுமாம் பசைதல்-நெஞ்சு நெகிழ்ந்து அன்பு கொள்ளல், 'பசைதல் பரியாதா மேல்' (துறவு, க0) என்னும் நாலடியாரிலும் இஃது இப்பொருட்டாயது காண்க. 'இன்' னென்னும் ஐந்தனுருபுகள் எல்லைப் பொருளன.

கச. வளப்பாத்தி யுள்வளரும் வண்மை - கிளைக்குழாம்
இன்சொற் குழியு ளினிதெழூஉம் - வன்சொல்
கரவெழூஉங் கண்ணில் குழியு - ளிரவெழூஉம்
இன்மைக் குழியுள் விரைந்து.

(இ-ள்) வண்மை - 'ஈகை' யென்னும் பயிர், வளப்பாத்தியுள் வளரும் - செல்வமென்னும் பாத்தியுள் விளையும்; கிளைக்குழாம் - உறவினர் கூட்டம். இன்சொல் குழியுள் - 'இன்சொ' லென்னும் பாத்தியுள். இனிது எழூஉம் - செழுமையாய் வளரும்; வன்சொல் கரவு - வன்சொல்லோடு கூடிய வஞ்சனை யென்னும் பயிர், கண் இல் குழியுள் - கண்ணோட்டமின்மை யென்னும் பாத்தியுள், எழூஉம் - வளரா நிற்கும்; இரவு - 'இரத்த' லென்னும் பயிர். இன்மைக் குழி

யுள் - 'வறுமை'யாகிய பாத்தியுள், விரைந்து எழூஉம் - உடனே வளரும்.

(க-து) ஈகை செல்வத்தாலுண்டாகும்; உறவினர்க்கு மகிழ்ச்சி இன்சொல்லாலுண்டாகும்; வன்சொல்லும் வஞ்சனையுங் கண்ணோடாமையாலுண்டாகும்; இரத்தல் வறுமை யாலுண்டாகும்.

பாத்தியென்றுங் குழியென்றுங் கூறினமை யெல்லாம் உருவகம். வளம் - செல்வத்தை யுணர்த்து மாற்றை 'வையை சூழ்ந்த வளம் கெழுவைப்பு' (எக) என்னும் புறநானூற் றுரையிற் காண்க. கிளை - உவமையாகு பெயர். கண் - காரண வாகு பெயர். அளபெடைகள் மூன்றும் இன்னிசை நிறைப் பன. இரவை விரைந்தெழூஉ மென்றார், உணவு இன்றிச் சின்னேரந்தானும் வறியார் தம்மைக் காத்துக்கோடல் ஏலாமையின்.

கரு. இன்னாமை வேண்டி னிரவெழுக - விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக - தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க - வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

(இ-ள்) இன்னாமை வேண்டின் - இழிவை ஒருவன் விரும்பினால், இரவு எழுக - இரத்தலை மேற்கொள்க; இந் நிலத்து - இவ்வுலகத்தில், மன்னுதல் வேண்டின் - என்று ஞான்றும் நிலைபெறுதலை விரும்பினால், இசை நடுக - இங்குப் புகழ் நிறுத்துக; தன்னொடு - தன்னுடன், செல்வது வேண் டின் - துணையாய்ச் செல்வதொன்றினை விரும்பினால், அறம் செய்க - அறங்களைச் செய்க; வெல்வது வேண்டின், பிறரை வெல்லல் வேண்டினால், வெகுளி விடல் - சினத்தை விடுக.

(க-து) இழிவை விரும்பினால் இரக்க; அழியாமை வேண்டினால் புகழ்புரிக; உறு துணையை வேண்டினால் அறஞ் செய்க; வெல்லல் விரும்பினால் வெகுளியை விடுக.

இன்னாமை - துன்பம். இங்கு இழிவு என்னுந் துன் பத்தை யுணர்த்திற்று. மன்னுதல் - இடைச்சொலடி; புகழ் செய்தாரே உலகில் இறவாது நிற்பர் என்பதனை, 'மன்னு

வுலகத்து மன்னுதல் குறித்தோர் தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனர்' என்னும் புறநானூற்றா லறிக. நடுக வென்றது, 'நிறுத்துக' வென்றற்கு. செல்வது - வினையாலணையும் பெயர். வெல்வது - தொழிற் பெயர். விடல் - வியங்கோள்வினை, 'அல்' விகுதி.

கசா. கடற்குட்டம் போழ்வர் கலவர் - படைக்குட்டம்
பாய்மா வுடையா னுடைக்கிற்குந் - தோமில்
தவக்குட்டந் தன்னுடையா னீந்து - மவைக்குட்டங்
கற்றான் கடந்து விடும்.

(இ-ள்) கலவர் - மரக்கல முடையார், கடல்குட்டம் - கடலின் ஆழமான நீரை, போழ்வர் - பிளந்து செல்வர்; பாய்மா உடையான் - விரைந்த செலவைப்பொருந்திய படைக்குதிரையை யுடையான், படைக்குட்டம் - பகைவரது படையென்னும் ஆழ்கடலின் கரையை, உடைக்கிற்கும் - பொருது உடைத்துவிடுவான்; தன் உடையான் - தன் மனத்தைத் தன் வயப்படுத்தினவன், தோம் இல் - குற்ற மில்லாத, தவக்குட்டம் - தவமென்னுங் கடலை, நீந்தும் - நீந்திக் கரையேறுவான்; கற்றான் - தெளியக்கற்றவன், அவைக் குட்டம் - கற்றறிவுடையார் நிரம்பிய அவைக்கடலை, கடந்து விடும் - தாண்டிவிடுவான்.

(க-து) மாலுமிகள் நீர்க்கடலையும், மறவர் படைக் கடலையும், தற்காப்புடையான் தவக்கடலையும், கற்றான் அவைக் கடலையும் கடத்தல் எளிது.

குட்டமென்னும் பண்பு, ஒருகால் நீர்க்கும் மற்றொருகால் அந்நீரையுடைய இடத்துக்குமாக வந்தமையின் ஆகுபெயர். தன்னுடையான்-தன்னைத் தன் வயத்திலுடையானென்பது. நினைவுஞ் சொல்லுஞ் செயலு நல்லவை விழையுந் தன்வழி நிற்குமாறு அடக்கும் ஆள்வினை யுடையானென்று கொள்க. 'போழ்வர்' முதலாயின உருவக வினைகள். உடைக்கிற்கும், கடந்துவிடுமென்பவற்றில் கில் ஆற்றற்பொருண்மை விகுதி யெனவும், விடு துணிவுப்பொருண்மை விகுதியெனவுங் கொள்க. அவைக்குட்டங் கடத்தலாவது, ஐயந்திரிபுகளில் லாக் கல்வியறிவுடன் நின்று செவிக்கினிமையும் பயனும்

உண்டாமாறு சுருங்கச்சொல்லி விளங்கவைத்து அவையினரை மகிழ்வித்தலென்க.

கஎ. பொய்த்த லிறுவாய நட்புக்கண் - மெய்த்தாக
மூத்த லிறுவாய்த் திளைநலந் - தூக்கில்
மிகுதி யிறுவாய செல்வங்க டத்தம்
தகுதி யிறுவாய்த் துயிர்.

(இ-ள்) தூக்கில் - ஆராய்ந்து பார்த்தால், நட்பு - நேசம், பொய்த்தல் இறுவாய - பொய்யொழுக்கமாகிய இறுதியை யுடையது; இளைநலம் - இளமையின் அழகு, கண் மெய்த்தாக - கண்ணுக்கு நேராக, மூத்தல் இறுவாய்த்து - மூப்பாகிய இறுதியை யுடையது; செல்வங்கள்-செல்வாக்குகள், மிகுதி இறுவாய - மிகையான செயல்களை இறுதியாக உடையன; உயிர் - மக்கள் உயிர், தத்தம் தகுதி இறுவாய்த்து - தத்தமது வாழ்நாளெல்லையை யிறுதியாயுடையது.

(க-து) நண்பர் தமக்குட் பொய்யொழுக்கம் நேர்ந்தாயின், அவர் நட்புக்கெடும்; மூப்புத் தோன்றியதும் இளமை நலங்கெடும்; அளவு மீறிய செயல்கள் தொடங்கியதுஞ் செல்வங் கெடும்; வாழ்நாள் எல்லைகண்டதும் உயிர்சாம்.

இறுவாய-இரண்டனுள் முன்னது ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று ஈறு தொக்கது; பின்னது பலவின்பாற்படர்க்கை. இளமை—ஈறுகெட்டுப் பகுதிப்பொருள் விகுதியுடன் ஐகாரஞ் சேர்ந்து இளையென நின்றது. மிகுதி-மிகையானசெயல்களையும், தகுதி-அளவாய வாழ்நாளையுங் குறிப்பாலுணர்த்தின. 'மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு' (திருக்குறள், நட்பு, ச) என்பதனுரையில் ஆசிரியர் பரிமேலழகர் 'பழியும் பாவமுந் தருஞ்செய்கை வேண்டப்படுவதன்மையின் அஃதை மிகுதியென்' என்றார்.

கஅ. மனைக்காக்கம் மாண்ட மகளிர் ஒருவன்
வினைக்காக்கஞ் செவ்விய னாதல் - சினச்செவ்வேல்
நாட்டாக்க நல்லனிவ் வேந்தென்றல் - கேட்டாக்கம்
கேளி ரொரீஇ விடல்.

(இ-ள்.) மாண்ட மகளிர் - நல்லியல்பு நற்செயல்களில் மாட்சிமைப்பட்ட பெண்மக்களிருத்தல், மனைக்கு ஆக்கம் - மனைவாழ்க்கைக்கு உயர்வைத்தரும்; ஒருவன் - வீரனொருவன், சினச்செவ்வேல் - சினக்குறிப்புடைய சிவந்த படைப் பயிற்சிக்கண், செவ்வியனாதல் - தேர்ச்சியுடையனா யிருத்தல், வினைக்கு ஆக்கம் - போர்வினை முதலான ஆள்வினைகட்கு உயர்வாம்; இவ்வேந்தன் - இவ்வரசன், நல்லன் என்றல் - நல்லவனென்றுகுடிமக்களாற் பாராட்டப்படுதல், நாடு ஆக்கம் - நாட்டுக்கு உயர்வாம்; கேளிர் - சுற்றத்தாரை, ஒரீஇ விடல் - நீக்கிவிடுதல், கேடுஆக்கம் - கேட்டுக்குப் பெருக்கந்தரும்.

(க-து.) நன்மகளிர் மனைவாழ்க்கையையும், படைப் பயிற்சி யுடையான் போர்வினை வெற்றியையும், செங்கோலரசன் நாட்டினையும் உயர்வாக்கும்; உறவினரை யொதுக்குதல் கேட்டினைப் பெருக்கும்.

'சினவேல்' உடையான்றொழில் உடைமைமே லேற்றப் பட்டது. வேலுக்குச் செம்மையாவது, பகைவருடம்பிற் புகுந்து குருதிக் கறைபடிந்து செந்நிறமாதல். என்றல்- செயப்பாட்டு வினைப்பெயர். கேடு - முதனீண்ட முதனிலைத் தொழிற்பெயர். நாட்டாக்கம், கேட்டாக்கம் - நான்கன் றொகை. நாட்டாக்கமாவது, குடிகள் செல்வம் கல்வி முதலியவற்றில் மேலோங்கி இன்பவாழ்வில் வைகுதல். ஒரீஇ யென்னும் அளபெடை செய்யுளோசை நிறைக்கவந்தது. சினச்செவ்வேல் - என்பதனை வேந்தனுக்கு அடையாக்குவாரு முளர்.

கக. பெற்றா னதிர்ப்பிற் பிணையன்னா டானதிர்க்கும்
கற்றா னதிர்ப்பிற் பொருளதிர்க்கும்-*பற்றிய
மண்ணதிர்ப்பின் மன்னவன் கோலதிர்க்கும் - பண்ணதிர்ப்பின்
பாட லதிர்ந்து விடும். [திர்ப்பின்

(இ-ள்.) பெற்றான் - கணவன், அதிர்ப்பின் - ஒழுக்கத்திற் கலங்குவானாயின், பிணை அன்னாள் - மான்போலும் மருண்ட பார்வையையுடைய அவன் மனைவியும், தான் அதிர்க்கும் - தானுந் தன்கடமையிற் கலங்குவாள்; கற்றான்

* பாரிய-எனவும் பாடம்.

2

அதிர்ப்பின் - புலவன் அறிவு கலங்கினால், பொருள் அதிர்க்கும் - அவன் கற்ற கருத்துக்களும் உடன் கலங்கும்; பற்றிய - தான் கைப்பற்றிய, மண் - உலகத்திலுள்ள குடிமக்கள், அதிர்ப்பின் - நிலைகலங்குவாரானால், மன்னவன் - அரசனது, கோல் அதிர்க்கும் - ஆட்சியுங் கலங்கும்; பண் அதிர்ப்பின் - யாழின் நரம்புக் கட்டுகள் அதிர்ந்துவிட்டால்.பாடல் அதிர்ந்துவிடும் - அதிற் பிறக்கும் பாட்டுக்களும் அதிர்ந்துபோம்.

(க-து.) கணவன் கலங்கினால் மனைவிகலங்குவாள்; கற்றான் கலங்கினாற் கருத்துகள் கலங்கும்; குடி நடுங்கினாற் கோன் நடுங்குவன்; பண்ணதிர்ந்தாற் பாடலதிர்ந்துவிடும்.

'பெற்றாற் பிழையாத பெண்டிரு' மென்பது பரிபாடல் (மாநிலந்தோன்றாமை). பெற்றான்-கொண்டவன், (கணவன்). பிணை - தொழிலுவமம். 'பொருளதிர்க்கு' மென்றது நற்கருத்துக்கள் அவன்மாட்டுப் பிறவா வென்றற்கு. பண்-இசையுமாம்; அற்றாயின் இசைகெட்டாற் செய்யுளுங் கெடுமென்றுரைக்க. மண், நாடு - இடவாகு பெயர்.

௨௦. மனைக்குப்பாழ் வாணுத லின்மைதான் செல்லுந்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை யிருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப்பாழ்
கற்றறி வில்லா வுடம்பு.

(இ-ள்.) மனைக்குப்பாழ் - மனைக்குப் பாழாவது, வாள்நுதல் இன்மை - மனையாளையில்லாமை; தான்செல்லும் - தான்போகும், திசைக்குப்பாழ் - ஊர்ப்புறங்கட்குப் பாழாவது, நட்டோரை இன்மை - அவ்விடங்களில் தாம் நேசித்த நண்பர்க ளில்லாமை; இருந்த அவைக்குப் பாழ் - பலரும் கூடியிருந்த அவைக்குப் பாழாவது, மூத்தோரை இன்மை - கல்வி கேள்வி முதலியவற்றாற் சிறந்த சான்றோரை இல்லாமை; தனக்குப்பாழ் - பிறவியெடுத்த தனக்குப் பாழாவது, கற்றறிவு இல்லாவுடம்பு - கல்வியறிவு பெறாத வெறும் புலாலுடம்புள்ளமையாம்.

(க-து.) மனைவியில்லா மனை பாழ்; நண்பரில்லாப்பக்கம் பாழ்; ஆன்றோரில்லா அவை பாழ்; கற்றறிவில்லா வுடம்பு பாழ்.

வாள்நுதல் - இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர் ; ஒளியைப் பொருந்திய நெற்றியையுடைய மனையாளென்பது பொருள். இன்மை - குறிப்புத் தொழிற்பெயர். மூத்தோர் - மூ பகுதி. உடம்பென்றது இங்குப் பிறவியை. கற்றறிவில்லாப் பிறப்புப் பாழென்பது கருத்து. 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே, (அப்பர், திருவாவடு, திருவேயென் செல்வமே, ம) என்பது தேவாரம். திசை - ஆகுபெயர்.

உக. மொய்சிதைக்கு மொற்றுமை யின்மை யொருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலு மேனியைப் - பெய்த
கலஞ்சிதைக்கும் பாலின் சுவையைக்-குலஞ்சிதைக்குங்
கூடார்கட் கூடி விடின்.

(இ-ள்.) ஒற்றுமை இன்மை - சுற்றாரோடு ஒற்றுமையில்லாமை, ஒருவனை மொய்சிதைக்கும் - ஒருவனது வலிமையை ஒழிக்கும்; பொய் - பொய்மையான ஒழுக்கம், பொன்போலும் மேனியை - பொன்னிறத்தைப் போன்ற அழகிய உடம்பை, சிதைக்கும் - வாடச்செய்யும்; பெய்த கலம் - நிரப்பி வைக்கப்பட்ட பாண்டம், பாலின் சுவையை - பாலின் இனிய சுவையை, சிதைக்கும் - கெடுக்கும்; கூடார்கண் - கூடத்தகாதாரிடத்தில், கூடிவிடின்-நட்புக்கொண்டு கூடி விட்டால், குலம் சிதைக்கும் - அச்செய்கை தன் குலத்தையழிக்கும்.

(க-து.) ஒற்றுமை யின்மை வலியையும், பொய்ம்மை உடம்பையும், பால்பெய்த பொருந்தாப்பாண்டம் அதன் இன்சுவையையும், தீ நட்பு குலத்தையுங் கெடுத்துவிடும்.

ஒற்றுமை - ஒன்றாந்தன்மை; அதாவது வேற்றுமை காணாமல் அளவளாவுந்தன்மை. மொய்-வலிமை ; செல்வாக்கு முதலிய வலிமைகளே மிகுந்தன்கண் அடங்கும். பொன்போலுமேனி-மிகுதியும் வெண்மைகலவாத மாநிறமான மேனி. 'பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச்சுடும்' என்பவாதலால், பொய்மையினாற் பின்பு துன்பந் தோன்றி உடம்பு நிறங்கெட்டு மெலிதலின் சிதைக்குமெனப்பட்டது. பெய்த-செயப்பாட்டு வினைப்பொருளது. கலம்-குறிப்பினாற் பொருந்தாக் கலமென்றுரைத்துக்கொள்க.

உஉ. புகழ்செய்யும் பொய்யா விளக்க-*மிகந்தொருவர்ப்
பேணாது செய்வது பேதைமை - காணாக்
குருடனாச் செய்வது மம்மர்-இருடீர்ந்த
கண்ணாராச் செய்வது கற்பு.

(இ-ள்.) பொய்யா விளக்கம் - பொய்யாமையாகிய ஒளி, புகழ் செய்யும் - எங்கும் புகழையுண்டாக்கும்; பேதைமை - அறியாமை, இகந்து - முறைகடந்து, ஒருவர்ப்பேணாது - ஒருவரையும் மதியாமல், செய்வது - தீயவை செய்வதாம்; மம்மர் - கற்றறிவில்லா மயக்கம், காணா - வழிகாணாத, குருடனாச் செய்வது - குருடனாகச் செய்வதாம்; கற்பு - கல்வியறிவு, இருள் தீர்ந்த - குருடு நீங்கிய, கண்ணராச் செய்வது - கண்ணொளியுடையராகச் செய்வதாம்.

(க-து.) பொய்யாமை புகழையும், அறியாமை தீயவை செய்தலையும், கல்லாமை அறியாமையையும், கல்வி அறிவையும் உண்டாக்கும்.

'பொய்யாவிளக்கம்'-பொய்கூறாமையாகிய விளக்கம்; இனி நினையாமையும் செய்யாமையும் அடக்கிக்கொள்க. பொய்யாத விளக்கமென்பது பெயரெச்சவீறு தொக்கது. 'விளக்க' மென்றார், அறியாமையிருளை விலக்கி அறிவு விளக்கந்தரலின். 'பொய்யா விளக்கே விளக்' கென்றார் திருவள்ளுவனாரும். (வாய்மை, ங). 'பொய்யாமை யன்ன புகழில்லை' - என்றார் பிறரும். ஒருவரென்பதற்கு முற்றும்மை விரித்துக்கொள்க. இகத்தல் - கடத்தல். கற்பு - காரணவாகுபெயர். பேணாமை ஈண்டு மதியாமைமேனின்றது; பேணுதல் - போற்றுதல். செய்வது - வினையாலணையும் பெயர். இருளென்றது இங்குக் குருட்டுத்தன்மையை. மம்மர் கல்லாமையால் வரும் மயக்கத்தை யுணர்த்தலின், அறியாமை யென்று கொள்க.

உந. மலைப்பினும் வாரணந் தாங்கு - மலைப்பினும்
அன்னையென் றோடுங் குழவி சிலைப்பினும்
நட்டார் நடுங்கும் வினைசெய்யா - ரொட்டார்
உடனுறையுங் காலமு மில்.

* இகழ்ந்தொருவன் பேணாமை — எனவும் பாடம்.

மன்றலங்கருமினை ...ந்த ... மலைவலமிபுடன்கூட
வென்றிவெள்ளியடைப்பாகர் மகிழ்ந்திடத் தந்நளிபமொழுதின்கண்
ஒன்றுசிந்தைநம்மரனையும்பாவைவாரணையினுடனேறிச
சென்றுகொண்டிங்குவாருமென்றயன்முதற்றேவர்கட்கருள்செய்
[தார். (௩௧)

வானநாடர்களரியயன்முதலினோர்வணங்கி முன்விடைகொண்டு
தூநலந்திகழ்சோதிவெள்ளானையுங்கொண்டுவன்றொண்டர்க்குத்
தேனலம்புதண்சோலைசூழ்மகோதையிற்றிருவஞ்சைக்களஞ்சே
கானிலங்கொள்வலங்கொண்டுமேவினாதிமதிற்றிருவாயில. [ரக்
(௩௨)

தேவாதங்குழாநெருங்கியவாய்தலிற்றிருநாவலூரார்தங்
காவனமன்னரும்புறப்படவெதிர்கொண்டுகயிலைவீற்றிருக்கின்ற
பூவலம்புதண்புனற்சடைமுடியவரருளப்பாடெனப்போற்றி
யேவலெல்லாம்பினசெயவெதானிலாதவர்பணிந்தெழுந்தேத்தே
றனா. (௩௩)

எற்றதொண்டனையண்டர்வெள்ளானையினெதிர்வலங்கொண்டேற்
நாற்றடங்கடன்முழக்கெனவைவைகைநாதமீதெழுந்தாப்பப் [ற
போற்றிவானவர்பூமழைபொழிந்திடப்போதுவாருயிரெல்லாஞ்
சாற்றுமாற்றங்களுணர்பெருந்துணைவனைமனத்தினிற்கொடுசார்ந்
தார். (௩௪)

சேரர்தம்பிரான்றோழர்தஞ்செயலறிந்தப்போதே [ளஞ்சார
சாரநின்றதோர்பரியினைமிசைக்கொண்டுதிருவஞ்சைக்க [க்கண்டு
வீரவெண்களிற்றுகைத்துவிண்மேற்செலுமெய்த்தொண்டர்தமை
பாரினின்றிலாசென்றதம்மனத்தொடுபரியுமனசெலவிட்டார் ()

விட்டவெம்பரிசெவியினிற்புவிமுதல்வேந்தர்தாம்விதியாலே
யிட்டமாஞ்சிவமந்திரம்மாதலினிதுவிசும்பெழப்பாய்ந்து [தை
மட்டலார்ந்தபைந்தெரியலவன்றொண்டர்மேல்கொண்டமாதங்கத்
முட்டவெய்தி முன்வலங்கொண்டுசென்றதுமற்றதன்முன்னாக. ()

உதியர்மன்னவன்றம்பெருஞ்சேனையினுடன்சென்றபடைவீரர்
கதிகொள்வாசியிற்செல்பவர்தம்மைத்தங்கட்புலப்படுமெல்லை
யெதிர்விசும்பினிற்கண்டுபின்கண்டிலராதலினெல்லாரு
முதிருமன்பினினுருவியசுரிகையான்முறைமுறையுடல்வீழ்த்தார்

வீரயாக்கையைமேல்கொண்டுசென்றுபோய்வில்லவர்பெருமானைச்
சாரமுன்சென்றுசேவகமேற்றனர்தனித்தொண்டர்மேல்கொண்
வாருமும்மதத்தருவிவெள்ளானைக்குவயப்பரிமுன்வைத்துச [ட
சேரர்வீரருஞ்சென்றனர்மன்றவர்திருமலைத்திசைநோக்கி. (௩௮)

(இ-ள்.) நகை நலம் - முகமலர்ச்சியின் நன்மை, நட்டார் கண் - நட்புச் செய்தார்பால், நந்தும் - சிறக்கும்; சிறந்த - மேலான, அவை நலம் - அவையின் நன்மை, அன்பின் விளங்கும் - அன்பினாற் சிறக்கும்; விசைமாண்ட - வேகம்மிகுந்த, தேர் நலம் - தேரின் நன்மை, பாகனால் - ஓட்டுபவனால், பாடு எய்தும் - பெருமையடையும்; ஊர்நலம் - குடிமக்களின் நன்மை, உள்ளானால் - அவ்வூரிலுள்ள அரசனால், உள்ளப்படும் - மதிக்கப்படும்.

(க-து.) முகமலர்ச்சியின் நன்மை நண்பர்கள்பாற் சிறந்து தோன்றும்; அவைகளின் நன்மை அன்பினால் விளங்கும்; விரைந்த செலவையுடைய தேரின் நன்மை பாகனாற் பெருமை பெறும்; ஊரின் நன்மை அரசனாற் கருதப்படும்.

நகைநலமாவது, நேசரைக் கண்டவிடத்தே தம்முகத்திற் றோன்றும் புன்னகையுங் குளிர்ந்த பார்வையுங்கூடிய முகமலர்ச்சி. இஃது உள்ளங் கலந்த உண்மை நண்பர்மாட்டன்றி மற்றவர்பால் வேறுபட்டுப் பொலிவுகுன்றும். சிறந்தவென்பதை நலத்துக்குக் கூட்டுக. 'அவைநல', மென்பது கற்றவர்கள் மற்றவர்கள்மேல் வைத்த அன்பினால் அரிய கருத்துக்களை எளியவாம்படி உளங்கொளக் கூறியறிவித்தல். மாண்ட-மிகுதி மேனின்றது. 'ஊர்நலம்' என்பதை 'நாட்டாக்க' மென்புழிக் (நான்மணிக்கடிகை, க௮) கூறினமைகொண்டறிக. உள்ளான்-குறிப்பால் அரசனுக்காயிற்று. உள்ளல் - நன்குமதித்தல்; அறிவுடையோரால் என்க. நகைநலம் - என்னும் பாடத்துக்கு, விருப்பத்தின் நன்மை நண்பர்பாற் சிறக்குமென்க; அவர்களே அதனை நிறைவேற்றுபவராதலால்.

உடு. அஞ்சாமை யஞ்சுதி யொன்றிற் றனக்கொத்த
எஞ்சாமை யெஞ்ச லளவெல்லா - நெஞ்சறியக்
கோடாமை கோடி பொருள்பெறினு - நாடாகு
நட்டார்கண் விட்ட வினை.

(இ - ள்) அஞ்சாமை - அஞ்சுதற்குரிய செயல்களில் அஞ்சாமலிருக்கும் ஒழுக்கத்தை, அஞ்சுதி - நீ அஞ்சுவாய்; ஒன்றில் - ஒருசெயலில், தனக்கு ஒத்த - தனக்குக் கூடுமான, அளவு எல்லாம் - செயலளவுகளிலெல்லாம், எஞ்சாமை - பிறர்க்கு உதவிசெய்தலிற் குறையாமையாகிய ஒழுக்கத்தை, எஞ்சல் -

குறையவிடாதே; நெஞ்சு அறிய - உள்ளமறிய, கோடாமை - ஒருபக்கங் கோணுமையாகிய ஒழுக்கத்தை, கோடி - கொள்ளு வாய்; பொருள் பெறினும் - பெரும்பொருள் பெறுவதானாலும், நட்டார்கண் - நண்பரது பொறுப்பில், விட்ட வினை - செய்ய விட்ட தொழிலை, நாடாதி - ஆராயாதே.

(க - து) அஞ்சுவது அஞ்சுக; இயன்றவளவு உதவிசெய் வதைக் குறையாதே; ஒரு பக்கங் கோணுதே; நண்பர்கள்பால் விட்டதொழிலை ஆராயாதே.

அஞ்சாமை - பழிபாவங்கட்கு அஞ்சாமை; இவ்வியல்பு ஓராண்மையாகாமையின், இன்னோரன்னவற்றில் அஞ்சுதலே வேண்டற்பாலது. 'தனக்கொத்த அளவெல்லா' மென்று கூட்டுக. எஞ்சல் - ஏவலொருமை எதிர்மறை வினைமுற்று; நாடாதி'யென்பதுமது; 'கோடி' உடம்பாட்டேவல். கோடாமை யென்றது ஈண்டு நடுவு பிறழாமை. நட்டார் கண் விட்டவினையை நாடின், அவர்வினையை நெகிழவிடுவார்; விடவே இடருண்டாம். 'தேர்ந்தபிற் றேறுக தேறும் பொருள்,' 'தெளிந்தான்கணையுறவுந் தீரா விடும்பை தரும்' (திருக்குறள், தெரிந்துதெளிதல், கூ, க0) கோடி - கொள் + த் + இ, எழுத்துப்பேறாக வந்த தகரம் டகரமாயது.

உசா. அலைப்பான் பிறவுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.

(இ-ள்.) அலைப்பான் - வருத்துவதற்காக, பிற உயிரை - பிற உயிர்களை, ஆக்கலும் குற்றம் - வளர்த்தலும் பிழையாகும்; விலைப்பாலின் - விலையின் உரிமையினால், ஊன் கொண்டு - ஊனைப்பெற்று, மிசைதலும் குற்றம் - உண்ணலும் பிழையாகும்; சொலற்பால அல்லாத - சொல்லும் வகையின வல்லாதனவாகிய சொற்களை. சொல்லுதலும் குற்றம் - சொல்லி விடுதலும் பிழையாகும்; கொலைப்பாலும் - கொலைவகைகளும், குற்றமே ஆம் - பிழையேயாகும்.

(க-து.) பிறவுயிர்களைப் பிடித்து வருத்துதற்காக வளர்த்தலுங் குற்றம்; அங்ஙனங் கொல்லாமல் அவற்றின்

ஊனை விலைக்கு வாங்கி உண்ணலுங் குற்றம்; சொல்லத்தகாத வற்றைச் சொல்லலுங் குற்றம்; கொல்லலுங் குற்றமேயாம்.

அலைத்தல் - ஈண்டுக் கொலைமேனின்றது. பான் வினையெச்ச விகுதி. பால் - வகை; சொலற்பால வல்லாத - தீயனவுந் தகுதியற்றனவுமான சொற்கூறுகள். பால, அல்லாத - குறிப்பு வினையாலணையும் பெயர்கள். கொலைக்கு நிகரான ஏனைச் செயல்களையுமடக்குதற்கு. முதன்மூன்றும்மைகளும் எண்ணுப் பொருளன. இறுதியிலுள்ளது அவ்வெண்ணுப் பொருளோடு இறந்தது தழீஇய எச்சப்பொருளதுமாம். இச் செய்யுள் அடிமறி மாற்றுப் பொருள்கோளின் பாற்பட்டது.

உஎ. கோனோக்கி வாழுங் குடியெல்லாந் தாய்முலைப்
பானோக்கி வாழுங் குழவிகள் - வானத்
துளிநோக்கி வாழு முலக முலகின்
விளிநோக்கி யின்புறூஉங் கூற்று.

(இ-ள்.) குடி எல்லாம் - குடி மக்களெல்லாரும், கோல் நோக்கி - அரசனது ஆட்சியை நோக்கி, வாழும் - உயிர் வாழ்வர்; குழவிகள் - குழந்தைகளெல்லாரும், தாய் முலைப்பால் நோக்கி - தாயின் முலைப்பாலை நோக்கி, வாழும் - உயிர் பிழைக்கும்; உலகம் - உலகத்துயிர்கள், வானத்துளி நோக்கி - வானத்தினின்றும் விழும் மழைத்துளியை நோக்கி, வாழும் - உயிர் வாழும்; கூற்று - நமன், உலகின்விளி நோக்கி - உயிர்களின் சாவை நோக்கி, இன்புறூஉம் - மகிழ்வான்.

(க-து.) குடிகள் அரசனது ஆட்சியால் உயிர் வாழும்; குழந்தைகள் தாயினது முலைப்பாலால் உயிர்வாழும்; உயிர்கள் மழைத்துளியால் உயிர்வாழும்; கூற்றுவன் உயிர்களின் சாக்காட்டை எதிர்நோக்கியிருப்பன்.

கோல் - ஆட்சிக்கு வந்தது; அடைமொழி புணராமையின், அது செங்கோலரசையே குறிப்பதாயிற்று. 'இயல்' பென்றளவில் அது நல்லியல்பையே குறித்தல் போலவென்க; வாழுங்குடி - என்பதனாலும் அப்பொருள் காணலாம். வானத் துளி - அ, சாரியை. 'குடி' 'உலகம்' முதலியன அஃறிணைச் சொல்லால் வந்தமையின், அவை தமக்கேற்ற அஃறிணைவினை முடிபைக்கொண்டன. 'நோக்கி வாழ்த்த' லென்றது இன்றி

யமையாமை கருதி. துளி, விளி, முதனிலைத் தொழிற் பெயர். அளபெடை இன்னிசைநிறைக்க வந்தது.

உ௮. கற்பக் கழிமடம் அஃகு மடமஃகப்
புற்கந்*தீர்ந் திவ்வுலகின் கோளுணருங் கோளுணர்ந்தால்
தத்துவ மான நெறிபடரு மந்நெறி
இப்பா லுலகி னிசைநிறீஇ - யுப்பால்
உயர்ந்த வுலகம் புகும்.

(இ-ள்.) கற்ப - ஒருவன் அறிவு நூல்களைக் கற்பதனால், கழிமடம் - மிக்க அறியாமை, அஃகும் - குறையப்பெறுவான்; மடம் அஃக - அறியாமை குறைய, புற்கம் தீர்ந்து - புல்லறிவு நீங்கி, இவ்வுலகின் - இவ்வுலகத்தின், கோள் உணரும் - இயற்கையையறிவான்; கோள் உணர்ந்தால் - அவ்வியற்கையை யறிந்துகொண்டால், தத்துவமான - உண்மையான, நெறி படரும் - அருநெறியிற் செல்வான்; அந்நெறி - அந்நெறியினால், இப்பால் உலகின் - இவ்வுலகின் கண், இசை நிறீஇ - புகழ் நிறுத்தி, உப்பால் - மறுமையில், உயர்ந்த உலகம் புகும் - உயர்ந்த வீட்டு லக்கத்திற் புகுவான்.

(க-து.) ஒருவன் அறிவு நூல்களைக் கற்றால் அறியாமை குறைவான்; அறியாமை குறையப் புல்லறிவு நீங்கி உலக வியற்கையையறிவான்; அறிய மெய்ந்நெறியாகிய வீட்டு நெறி செல்வான்; செல்ல இவ்வுலகத்திற்புகழை நிறுத்தி மறுமையில் வீட்டுலகம் புகுவான்.

'கழிமட' மென்றது, 'அறியாமையின் பெரும்பகுதி' யென்றற்கு. கோள் - இங்குக் கொள்ளப்படுவதான உலக நிகழ்ச்சிகளின் கருத்து. 'இப்பாலுலகின்' என்பதை இம்மையில் இவ்வுலகத்திலென உரைப்பினுமாம். உப்பால், அகரஈசுட்டின் சேய்மைப் பொருளது; 'உப்பக்கங் காண்பார்' (திருக்குறள், ஆள்வினையுடைமை, ௧௦) என்புழிப்போல. உயர்ந்த உலகம் - வீடு. இச்செய்யுள் ஐந்தடியான் வந்த பஃறொடை வெண்பா; காரணமாலையணி.

உகூ. குழித்துழி நிற்பது நீர்தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாவம் - அழித்துச்-

* புற்பந்-எனவும் பாடம்.

செறிவுழி நிற்பது காமந் தனக்கொன்
றுறுவுழி நிற்ப தறிவு.

(இ-ள்.) நீர் குழித்துழி நிற்பது - தண்ணீர் குழிக்கப்பட்ட இடத்தில் நிற்குமியல்புடையது; பல்லோர் - சான்றோர் பலரும், பழித்துழி - பழித்தவிடத்தில், பாவம் - தீவினையென்பது, நிற்பது - நிற்குமியல்புடையது; அழித்து - தவநெறியைக் கெடுத்து, செறிவுழி - தீய நெறியில் வயப்பட்டவிடத்து, காமம் - காம வியல்பு, நிற்பது - நிற்பதாகும்; தனக்கு - அறிஞனுக்கு, ஒன்று உறுவுழி - ஓரிடர் உண்டான காலத்தில், அறிவு - அவனது கல்வி யறிவு, நிற்பது - துணையாய் நிற்குமியல்பினது.

(க-து.) பள்ளமுள்ள விடத்தில் நீர் நிற்கும்; பலரும் பழிக்குந்தீயோரிடத்திற் பாவம் நிற்கும்; தவவொழுக்கமில்லான்பாற் காமம் நிற்கும்; இடர்வந்த போழ்து கற்றறிவு நிற்கும்.

குழித்துழி - பள்ளம்; குழித்த உழியென்க. பழித்துழி - தீயோர். 'அழித்து' 'செறிவுழி' என்பன குறிப்பாற் றவக்கேட்டையும் மலசசெறிவையும் உணர்த்தின. முதன்மூன்றடிகளில் வந்த 'உழி' யென்னுமிடைச்சொல் இடப்பொருளையும், ஈற்றடியில் வந்தது காலத்தையும் குறித்தன. 'செறிவுழி' யென்பதில் வகரமெய் உடம்படு மெய்யன்று; ஏனையவற்றைப்போன்றதொரு சந்தியெழுத்து. இறைவன் றிருவருளியல்புகளிற் பழகாதார்க்கு மலத்தினியல்புகளே அடிக்கடி துன்புறுத்தாநிற்குமாகலின், 'அழித்துச் செறிவுழி நிற்பது காம' மெனப்பட்டது.

௧௦. திருவிற் றிறலுடைய தில்லை - யொருவற்குக்
கற்றலின் வாய்த்த பிறவில்லை - எற்றுள்ளும்
இன்மையி னின்னாத தில்லையில் லென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.*

(இ-ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு. திருவின் - செல்வத்தைப்போல், திறல் உடையது - வலிமையுடையது, இல்லை - பிறிதில்லை; கற்றலின் - கல்வி யறிவைப்போல், வாய்த்த -

---

*இலமென்னும். வன்மையின் வன்பாட்ட தில்—எனவும் பாடம்.

உற்ற நேரத்திற் பயனுவன, பிற இல்லை - வேறில்லை; எற்றுள்ளும் - எதனுள்ளும், இன்மையின் - வறுமையைப்போல், இன்னாதது - துன்பமுடையது, இல்லை - வேறு யாதுமில்லை; இல் என்னாத - இரப்பார்க்கு இல்லை யென்னாத, வன்மையின் - ஈகை வல்லமையைப்போல், வன்பாடது - வேறு வல்லமையானது, இல் - இல்லை.

(க-து.) செல்வத்தைப்போல் ஒருவனுக்கு வலிமையுடையது வேறில்லை; கல்வியைப்போல் துணையாவது பிறிதில்லை; வறுமையைப்போற் றுன்பமானது வேறில்லை; ஈகையைப்போல் வல்லமையானது வேறில்லை.

'இன்' உருபுகளை எல்லைப் பொருளில் உரைத்தலுமாம். வாய்த்த - பெயரெச்சப்பொருள் சிறவாமையின், பலவின்பால் படர்க்கை வினையாலணையும் பெயரென்க. எற்று - குறிப்பு வினைப்பெயர். வறுமையுடையான் இம்மை மறுமை நலங்களிற் சிறிதும் நன்மையுடையனுகாமையின், 'இன்மையினின்னாத தில்லை' யெனப்பட்டது. 'இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி னின்மையே யின்னாதது' (நல்குரவு, க) என்று திருவள்ளுவனாருங் கருதுகின்றமை காண்க. வன்மை-ஈண்டு வல்லமையென்க. வன்பாடது - வன்மையானது; கோட்பாடு இலம்பாடு என்பவற்றைப்போல வன்பாடென்பதும் பாடென்னுந் தொழிற்பெயர் விகுதிபெற்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். ஈண்டுக் குறிப்புவினைப்பெயரா யுரைத்தற்குப் பொருளியையாமையின்; து-பகுதிப்பொருள் விகுதியென்றும், அ-சாரியையென்றுங்கொள்க. எக்காலத்திலும் இல்லையென்னமை, அரியவற்றுள் அரிதானமையின் அதனையொப்பதொருவன்மை பிறிதில்லை யென்றார். ஒப்பாவன வின்மை கூறப்பட்டமையின், மிக்க வின்மைகூறவேண்டாவாயிற்று.

ருக. புகைவித்தாப் பொங்கழ றோன்றுஞ் சிறந்த
நகைவித்தாத் தோன்று முவகை - பகையொருவன்
முன்னம்வித் தாக முளைக்கும் முளைத்தபின்
இன்னுவித் தாகி விடும்.

(இ-ள்.) புகைவித்தா - புகைச்சல் ஏதுவாக, பொங்கு அழல் - எரிகின்ற நெருப்பினது இருப்பு, தோன்றும் - காண்பவர்கட்கு விளங்கும்; சிறந்த நகைவித்தா - மேலான முக

மலர்ச்சி ஏதுவாக, உவகை தோன்றும் - மனமகிழ்ச்சி விளங்கும்; பகை - உள்ளத்தின் பகைமை, ஒருவன் - ஒருவனது, முன்னம் வித்தாக - குறிப்புச்செயல்கள் ஏதுவாக, முளைக்கும் - வெளியே தெரியும்; முளைத்தபின் - தெரிந்தபின், இன்னா - துன்பங்கட்கு, வித்து ஆகிவிடும் - அப்பகைமை ஏதுவாய்விடும்.

(க-து.) புகையின் ஏதுவாக நெருப்புணரப்படும்; முக மலர்ச்சியின் ஏதுவாக மனமகிழ்ச்சி யுணரப்படும்; குறிப்புச் சொற்களின் வாயிலாக உட்பகை தெரியும்; தெரிந்தபின் அப்பகைமை ஏதுவாகத் துன்பங்களுண்டாகும்.

'வித்து'- ஏதுவுக்கு வந்தது. ஒருவன் என்பதைப் பிறவற்றிற்குக் கூட்டலுமாம். முன்னம் - குறிப்பு; முன்னம் முகத்தி னுணர்ந்தவர், (௩) என்னும் புறநானூற்றிலும் இப்பொருண்மை காண்க. 'முன்னம் முகம்போல முன்னுரைப்பதில்', என்று இஃதிப் பொருளில் மேலும் வரும். 'முளைக்கு' மென்னுஞ் சொற்கொடுத்துக் கூறினார், மறைவு வெளிப்படலின். இன்னாவித்து - நான்காவது விரிக்க. உவகை - அகமகிழ்ச்சி; நகை - முகமலர்ச்சி.

௩௨. பிணியன்னர் பின்னோக்காப் பெண்டி ருலகிற்
அணியன்ன ரன்புடை மாக்கள் - *பிணிபயிரின்
புல்லன்னர் புல்லறிவி னாடவர்-கல்லன்னார்
வல்லென்ற நெஞ்சத் தவர்.

(இ-ள்.) பின் - மேல் வருவதை, நோக்காப் பெண்டிர் - கருதிப்பாராத மகளிர், பிணி அன்னர் - கொண்டானுக்கு ஒரு நோயை யொப்பர்; அன்பு உடை மாக்கள் - எல்லா உயிர்களிடத்திலும் அன்புடைய நன்மக்கள், உலகிற்கு - உலகத்திற்கு, அணி அன்னர் - ஓர் ஆபரணத்தை யொப்பர்; புல் அறிவின் - சிற்றறிவையுடைய, ஆடவர் - ஆண்மக்கள், பயிரின் - வளரும் பயிரினைச் சூழ்ந்த, பிணிபுல் அன்னர் - வளர்ச்சியைத் தடுக்கும் களைப்புல்லோடு ஒப்பாவார்; வல் என்ற - வன்மையான, நெஞ்சத்தவர் - நெஞ்சத்தை யுடையவர், கல் அன்னர் - கல்லுக்கு ஒப்பாவார்.

---

* பிணிபயிலும், பிணிபேணும் - எனவும் பாடங்கள்.

(க-து.) வருவதறியாத பெண்டிர் நோய்க்கு ஒப்பாவார்; அன்புடைய மக்கள் அணிகலத்துக்கு நிகராவார்; புல்லறிவையுடைய ஆடவர்கள் புல்லுக்கு நேராவார்; வன்னெஞ்ச முடையவர் கல்லுக்கு இணையாவார்.

'பின்னோக்கா' வென்றது, கணவனது வரவுக்குமேல் முதலிற் செலவுசெய்து பின்வரும் வறுமை கருதாமையை. 'பயி'ரென்றதைப் புல்லாற் பிணிக்கப்படும் பயிரென்று கொள்க. புல்-களை. பிணித்தல் - வளர்ச்சியைக் கட்டுப்படுத்தல். ஆடவர் தமது புல்லறிவினாற் றம்மைச் சூழ்ந்த சுற்றங்களையுங் கெடுத்தலின், இங்ஙனங் கூறினார். அன்னர்--குறிப்பு வினைமுற்று.

௩௩. அந்தணரி னல்ல பிறப்பில்லை யென்செயினும்
தாயிற் சிறந்த தமரில்லை - யாதும்
வளமையோ டொக்கும் வனப்பில்லை யெண்ணின்
இளமையோ டொப்பதூஉ மில்.

(இ-ள்.) அந்தணரின் - அந்தண்மையுடையார் பிறவியைப் போல, நல்ல பிறப்பு இல்லை - உயர்ந்த பிறவி வேறில்லை; என் செயினும் - தனக்கு என்ன தீமையைச் செய்தாலும், தாயின் - தாயைப்போல, சிறந்த தமர் இல்லை - மேலான உறவினர் எவருமிலர்; வளமையோடு - செல்வவாழ்க்கையோடு, ஒக்கும் வனப்பு - ஒப்பான அழகு, யாதும் இல்லை - மற்றெதுவு மில்லை; எண்ணின் - ஆராய்ந்துபார்த்தால், இளமையோடு ஒப்பதும் - இளமைப் பருவத்தோடு ஒப்பாவதும், இல் - பிறிதொன்றில்லை.

(க-து.) அந்தணர் பிறப்பே உயர் பிறப்பு; தாயே சிறந்த தமர்; செல்வமே அழகு; இளமையே இன்பம்.

'அந்தணர்' இனிய அருளெண்ணமுடையார்; அவ்வியல்புடையராய்ப் பிறக்கும் பிறவியே உயர் பிறவி யென்க. எனவே இது காரணப் பெயர்; மற்றிதனைக் காரணவிடுகுறியென கூறிப் பிறப்பை வகுப்பு மேலேற்றியுரைப்பாரு முளர். தாயே, மக்கள்பால் அணுக்கமும், எஞ்ஞான்றும் இனிய உள்ளெண்ண முடையவளாதலின், 'தாயிற் சிறந்த தமரில்லை' யென்றார். என்செயினும் - உம்மை உயர்வு சிறப்பினோடு

எதிர்மறைக்கண் வந்தது. உயர்வு சிறப்பொன்றே கொண்டு, தமர்மேலேற்றி 'என்ன நன்மைசெய்தாலும்' எனவும் உரைக்கலாம். ஏனையழகுகள் குறைபட்டாலும் வளமை அவற்றை நிறைவுசெய் துயர்த்து மாகலின், 'வளமையோடொக்கும் வனப்பில்லை' யெனவும், இளமை எல்லாவின்பங்களையும் நுகர்தற்கும், கல்வி முதலியவற்றைப் பெறுதற்கும், உடல் வலியுடைமைக்கும், நன்மைகளைச் செய்தற்கும் உரியதாகலின் 'இளமையோடொப்பதூஉமில்' லெனவுங் கூறப்பட்டன. 'வளமை' செல்வமென்னும் பொருடரலை 'வளப்பாத்தியுள்' (௧௪) எனமுன் வந்ததனுள்ளுங் காண்க. அளபெடை இன்னிசை நிறைப்பது. ஓடு - இரண்டும் ஒப்புப் பொருளன.

௩௪. இரும்பி னிரும்பிடை போழ்ப - பெருஞ்சிறப்பின்
நீருண்டார் நீரான்வாய் பூசுப - தேரின்
அரிய வரியவற்றாற் கொள்ப - பெரிய
பெரியரா னெய்தப் படும்.

(இ-ள்.) இரும்பின் - இரும்பாற் செய்யப்பட்ட கருவிகளால், இரும்பு - இரும்பை, இடைபோழ்ப - குறுக்கே வெட்டுவர்; பெருஞ்சிறப்பின் - மிக்க சிறப்புடைய, நீர் உண்டார் - பாயசம் முதலிய நீருணவுகளை யுண்டவர்கள், நீரால் - நீர் கொண்டே, வாய்பூசுப - வாய் கழுவுவார்; தேரின் - ஆராய்ந்தால், அரிய - அரிய செயல்கள், அரியவற்றான் - அருமையான முயற்சிகளால், கொள்ப - முடித்துக்கொள்வார்; பெரிய - பெரிய பேறுகள், பெரியரான் - கல்வி கேள்வி யுடைய தவப் பெரியோரால், எய்தப்படும் - அடையப்படும்.

(க-து.) இருப்புக்கருவிகளால் இரும்பை வெட்டுவார்; சிறந்த நீருணவுகளை யுண்டார் நீரினால் வாய் கழுவுவார்; அரிய செயல்களை அரியமுயற்சிகளாற் கொள்வார்; பெரிய பேறுகளைப் பெரியோரே எய்துவார்.

முதல் வந்த இரும்பு கருவியாகு பெயர். நீரென்றது, நீருடன் கூடிய சிறந்த உணவை யுணர்த்துகின்றமையின், 'பெருஞ்சிறப்பி'னென்று அடைமொழி புணர்த்தார். அவ்வுணவு மிகுதிபற்றி நீரெனவே கூறப்பட்டது. பெருஞ்சிறப்பின் நீர் என்பது பாற் சோறுமாம். 'வாய் பூசுப' இன்றேனன்னவற்றை

'இடக்கரடக்க' லென்ப. அரிய அரியவற்றானும் எய்தப்படு முண்மையை நிகழ்ச்சியிற் கண்டு தெளிக. அரிய, பெரிய - பண் படியாகப் பிறந்த பலவின்பால் படர்க்கைப்பெயர்கள்.

௬௫. மறக்களி மன்னர்முற் றோன்றுஞ் - சிறந்த
அறக்களி யில்லாதார்க் கீயுமுற் றோன்றும்
வியக்களி நல்கூர்ந்தார் மேற்றாங் - கயக்களி
ஊரிற் பிளிற்றி விடும்.

(இ-ள்.) மறக்களி - வீரக்களிப்பு, மன்னர்முன் - அரசர்கட்குமுன்னால், தோன்றும் - வீரர்கட்கு உண்டாகும்; சிறந்த அறக்களி - மிக்க ஈகைக்களிப்பு, இல்லாதார்க்கு - வறியவர்கட்கு, ஈயும் முன் - ஒன்று கொடுக்குமிடத்து, தோன்றும் - கொடுப்பார்க்கு உண்டாகும்; வியக்களி - யாதானும் ஒன்றைப் பெற்றுவியக்குங் களிப்பு, நல்கூர்ந்தார் மேற்றாம் - வறிஞர்கள் பாலுண்டாகும்; கயக்களி-கீழ்மையியல் பாலுண்டாகுங்களிப்பு, ஊரில் - இருக்கும் ஊரில், பிளிற்றிவிடும் - பலரும் அறிய ஆரவாரித்தலாலுண்டாகும்,

(க-து.) அரசனுக்கு முன்னாற் பொரும் போழ்து வீரர்கட்கு வீரக்களிப்புண்டாகும்; வறியார்க் கொன்றீவதே செல்வர்கட்கு உண்மையான ஈகைக்களிப்பாம்; ஒன்றைப் பெற்று வியக்குங் களிப்பு ஏழைகட்குண்டு; கீழ்மகனது கீழ்மையாலான களிப்பு ஊரெல்லாந் தெரிவித்து ஆரவாரஞ்செய்தலேயாகும்.

களி - முதனிலைத்தொழிற்பெயர்; அறம். உயர்வினால் ஈகை மேனின்றது. ஈயுமுன் - முன் ஏழாவதன் இடப்பொருளது. விய - முதனிலை எச்சப்பொருளில் வந்தது. 'நல்கூர்ந்தார் மேற்று' மேல்,ஏழனுருபு. கயவு-இங்குக்கீழ்மை. பிளிற்றிவிடும்-இரைச்சலிட்டுவிடும்; கீழ்மகன் தனது புன்செயலைப் பெரியதாய்க் கருதி ஊரெங்கும் சொல்லிச் சொல்லி மகிழ்தலே, கீழ்மைக் களிப்பெனப்பட்டது.

௬௬. மையாற் றளிர்க்கு மலர்க்கண்கண் மாவிருள்
நெய்யாற் றளிர்க்கு நிமிர்சுடர்-*பெய்யல்
முழங்கத் தளிர்க்குங் குருகிலை நட்டார்
வழங்கத் தளிர்க்குமா மேல்.

* பெய்ய - எனவும் பாடம்.

(இ-ள்.) மலர்க் கண்கள் - குவளை மலரைப் போன்ற கண்கள், மையால் - மையினால், தளிர்க்கும் - எடுத்துக்காட்டும்; மால் இருள் - மிக்க இருட்டில், நிமிர்சுடர் - நிமிர்ந்தெரியு நெருப்பு, நெய்யால் - விளக்கெண்ணெயால், தளிர்க்கும் - விளங்கி யெரியும்; பெய்யல் - மேகம், முழங்க - பெய்தற்குக் குமுற, குருகு - குருந்தத்திமரம், இலை தளிர்க்கும் - இலைகள் துளிர்விடும்; மேல் - மேலோர்கள், நட்டார் வழங்க - உறவாயினார்க்குக் கொடுக்க, தளிர்க்கும் - பொருளிற் பெருகுவர்.

(க-து.) கண்கள் மையிடுதலால் விளங்கும்; விளக்கு நெய்யாலெரியும்; குருக்கத்தி மழைமுழக்கத்தால் இலைதளிர்க்கும்; அடுத்தார்க்கு வழங்கவே ஆன்றோர் பொருள் சேர்ப்பர்.

நிமிர்சுடர்-கொழுந்தோடியெரியுந் தீச்சுடர். பெய்யல்-மேகத்துக் கானமையின் தொழிலாகுபெயர். ஈற்றடிக்கு, நண்பராயினார் பொருளுதவி செய்தலாற் கல்வி கேள்விகளிற் சான்றோர் தமது தொண்டிற் சிறப்பரென உரைப்பினுமாம். மேல்-பண்பாகுபெயர். முழங்க - காரணப்பொருள் குறித்தலால் இறந்த காலத்திலும், வழங்க - காரியப் பொருள்குறித்தலால் எதிர்காலத்திலும் வந்த செயவென் வினையெச்சங்கள். ஆம் - அசைநிலை.

௯௭. நகையினிது நட்டார் நடுவட் பொருளின்
தொகையினிது தொட்டு வழங்கின்-*வகையுடைப்
பெண்ணினிது பேணி வழிபடிற் - பண்ணினிது
பாட லுணர்வா ரகத்து.

(இ-ள்.) நகை-மகிழ்ச்சி, நட்டார் நடுவண்-நண்பரிடையில், இனிது - இன்பமானது; பொருளின் தொகை - செல்வக் குவியல், தொட்டு வழங்கின்-எடுத்து ஏழைகட்கு வழங்கப்பட்டால், இனிது - இன்பம் தருவதாம்; வகை உடைப்பெண் - வகையான பெண், பேணி வழிபடின் - கணவனைப்போற்றி அவன் வழி நின்றால், இனிது - இன்பந்தருபவளாவள்; பண் - இசை, பாடல் உணர்வார் அகத்து - பாட்டை யுணர வல்லாரிடத்து, இனிது - இனிதாம்.

(க-து.) நண்பரிடத்தில் முகமலர்ச்சி தோன்றும்; வறிஞர்களுக்கு வழங்குமிடத்துப் பொருட்டிரள் இன்பந்

* தகையுடைய-எனவும் பாடம்.

தரும்; கணவனைப்போற்றி அவன்வழியினிற்றலாற் பெண்டிர் இனியராவர்; பாடலுணர்வாரிடத்துப் பண் இனிமைதரும்.

'நகை'யுந் 'தொகை'யுந் தொழிற்பெயர். பொருளின் தொகை, பொருட் கூட்டு. 'வகை'யென்றது, நினைவு சொற் செயல்களின் நல்வகையை, அதாவது *சிறப்பை யுணர்த்திற்று; அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என நாற் குணமுமாம். பேணுதல், உண்டி முதலிய வேண்டுவ கொடுத்துக்காத்தல்; வழிபடல் கணவன் கருத்துவழி நிற்றல். பாடல் - தொழிற்பெயராதலின், ஈண்டுப் பாடுதற்றொழி லென்று கொள்க. இனிது, குறிப்பு வினைமுற்று. 'பொருளின் தொகை யினிது தொட்டு வழங்கின்' என்பதனை 'உப்புக் குவட்டின் மிசையிருந்து உண்ணினும் இட்டுண்ணுக்காலது கூறுதாம்' - என்னும் உவமானத்தாற் கண்டு தெளிக.

௬அ. கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்தலெஞ் ஞான்றும்
இரப்பவர்க்குச்* செல்சாரொன் றீவார்-பரப்பமைந்த
தானைக்குச் செல்சார் தறுகண்மை யூனுண்டல்
செய்யாமை †செல்சா ருயிர்க்கு.

(இ-ள்.) கரப்பவர்க்கு - ஏதும் இல்லையென்று ஒளிப் பவர்களுக்கு, செல்சார் - அவர் மேற்கொள்ளுஞ் சார்பு, கவிழ்தல்-இரந்து வருவாரைக் கண்டவிடத்து முகங்கவிழ்ந்து நிற்றலாம்; எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், இரப்பவர்க்கு - இல்லையென்று இரக்கின்றவர்களுக்கு, செல்சார் - செல்லு தற்குரிய பற்றுக்கோடு, ஒன்று ஈவார் - தாம் வேண்டுவ தொன்றை ஈந்துவக்குஞ் செல்வராவர்; பரப்பு அமைந்த - போரிற் சுருசுருப்புள்ள, தானைக்கு - சேனைகளுக்கு, செல்சார்- பற்றுக்கோடு, தறுகண்மை - வீரமாம்; உயிர்க்கு - ஒருவனது உயிர்க்கு, செல்சார் - செல்லுதற்குரிய பற்றுக்கோடு, ஊன் உண்டல் செய்யாமை - பிறவுயிர்களின் ஊனுண்ணலைச் செய் யாதிருத்தலாம்.

(க-து.) இல்லையென்று பொருள்களை ஒளிப்பவர்கள் இரப்பாரைக் கண்டக்கால் முகங்கவிழ்தலே அவர் செயலா

* செல்சார் வொன் றீவோர் என்றும், † செல்சார் வுயிர்க்கு என்றும் பாடங்கள்.

யிருக்கின்றது; இரப்பவர்கட்கு ஈகையறமுடைய செல்வரே பற்றுக்கோடாவர்; பரபரப்புள்ள சேனைகட்கு வீரமே ஒரு பற்றுக்கோடு; உயிர்கட்கு ஊனுணவு கொள்ளாமல் அருளொழுக்க முடையவாயிருத்தலே ஒரு பற்றுக்கோடான நிலையாம்.

சார் - முதனிலைத் தொழிற்பெயர்; 'சார்பு' என்பது பொருள்; ஆவது சார்ந்து நிற்றற்குரியநிலை அல்லது பற்றுக்கோடென்க. 'செல்' என்பதைக் கருத்து நோக்கிப் பொருளுரைத்துக் கொள்க. கரப்பவர் செல்லுதலாவது மேற்கொள்ளுதல்; இரப்பவர் செல்லல் அடுத்தல்; தானைக்குச் செல்லல் - இடந்தரல்; உயிர்க்குச் செல்லலென்பதும் மேற்கோடலாம். தறுகண்மை இரங்காமைக்கு ஏதுவான மறம். செல்சார் - வினைத்தொகை.

௲௫. கண்டதே செய்பவாங் கம்மிய - ருண்டெனக்
கேட்டதே செய்ப புலனுள்வார் - வேட்ட
இனியவே செய்ப வமைந்தார் முனியாதார்
முன்னிய செய்யுந் திரு.

(இ-ள்.) கம்மியர் - கம்மாளர், கண்டதே செய்ப - தாங்கண்ட பொருள்போன்றவற்றையே செய்வர்; புலன் ஆள்வார் - அறிவை ஆளும் பேரறிஞர், உண்டு எனக்கேட்டதே - பயனுண்டு எனக் கேள்வியாற் றெளிந்தவற்றையே, செய்ப - செய்வர்; அமைந்தார் - நல்லியல்புகளமைந்த சான்றோர், வேட்ட - தாம் விரும்பியவற்றுள், இனியவே செய்ப - எல்லார்க்கும் இனிமையாயினவற்றையே செய்வர்; திரு - திருமகள், முனியாதார் - எளியாரையுஞ் சினவாத பெரியோர்கள், முன்னிய செய்யும் - எண்ணியவற்றையே முடித்துவைக்கும்.

(க-து.) கம்மாளர் தாங் கண்ணுற் கண்ட பொருள் போன்றவற்றையே செய்வர்; அறிஞர் பயனுள்ளவையெனக் கல்வி கேள்விகளாற் றெளிந்தவற்றையே செய்வர்; சான்றோர் தாம் விரும்பியவற்றுள் எல்லார்க்கும் இனிமையாயினவற்றையே செய்வர்; திருமகள் எவரையுஞ் சினவாத பெரியோர்கள் கருதியவற்றையே செய்யாநிற்பள்.

கண்டது கேட்டது முதலியவை செயப்பாட்டு வினைப் பொருண்மை வினையாலணையும் பெயர்கள். ஆம் – அசை. கம்மியர் – தொழில் செய்வோர்; அவர் கன்னார், கொல்லர், சிற்பர், தச்சர், தட்டார் எனப் பலவகைப் படுவார். புலன் – ஈண்டு அறிவு. 'முன்னிய' வென்பதற்குந் தேற்றேகாரங் கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க.

சு௰. திருவுந் திணைவகையா னில்லா – பெருவலிக்
கூற்றமுங் கூறுவ செய்துண்ணு – தாற்ற
மறைக்க மறையாதாங் காம – முறையும்
இறைவகையா னின்று விடும்.

(இ-ள்.) திருவும்-செல்வமும், திணைவகையால் – குடிப் பிறப்பு வகையால், நில்லா – பொருந்தி நில்லாவாம்; பெரு வலி – மிக்க வலிமையுடைய, கூற்றமும் – நமனும், கூறுவ – தானுண்ணப் படுகின்றவன் சொல்வனவற்றை, செய்து உண்ணாது – செய்து உண்ணான்; ஆற்ற – மிகவும், மறைக்க – மறைவாக்க, காமம் – காம வியல்பு, மறையாது – மறைபடாது; முறையும் – செங்கோலரசும், இறைவகையான் – அரசனது நற்செயல்களின் திறத்தால், நின்றுவிடும் – நிலைக்கும்.

(க-து.) குடிவகைக் கேற்பச் செல்வம் நில்லா. கூற்று வன் தன்னா லுண்ணப்படுகின்றவன் சொல்வனவற்றைக் கேளா துண்பான்; காமம் எவ்வளவு மறைத்தாலும் மறையாது; செங்கோலரசு அரசனது நன்மையால் நாட்டில் நிலைக்கும்.

திணை – ஈண்டுக்குடி; 'வசையில் விழுத்திணைப் பிறந்த' (புறம், ௨௭) என்புழிப்போல; குடியின் உயர்வு தாழ்வுக் கேற்பச் செல்வமும் மிகுந்துங் குறைந்தும் நில்லா வென்றற்குத் 'திணைவகையானில்லா' வெனப்பட்டது. செல்வம் – செல்வாக்கு, செல்வநுகர்ச்சி யெனத் திரு பலவாகலின் நில்லா வெனப் பன்மையிற் கூறினர். எவர் வலிமையுங் கூற்றுவன் முன் செல்லாமையின், அவனுக்குப் பெருவலிமை யுரைக்கப்பட்டது. கூற்றம், பொருளாலுயர்திணைப் பெயர். 'கூறுவ' வென்றது, 'துன்பஞ் செய்யாது கொடுபோ; இன்று திரும்பிப் பின்னொருகால்வா' வென்பவற்றிற்கு.

இறைக்கு வகையாவது நல்லியல்புவகை; 'காம' மென்பதற்கும் எண்ணும்மை கூட்டுக. ஆம் - அசைநிலை.

சக. பிறக்குங்காற் பேரெனவும் பேரா -விறக்குங்கால்
நில்லெனவு நில்லா வுயிரெனைத்து - நல்லாள்
உடம்படிற் றானே பெருகுங் - கெடும்பொழுதில்
கண்டனவுங் காணா கெடும்.

(இ-ள்.) உயிர் எனைத்தும் - உயிரெல்லாம், பிறக்குங்கால் - பிறக்கும்போது, பேர் எனவும் பேரா - உடலைவிட்டு நீங்கென்றாலும் நீங்கா; இறக்குங்கால் - அவை இறக்கும் போது, நில் எனவும் நில்லா - இவ்வுடலிலேயே நில்லென்றாலும் நில்லா; நல்லாள் - திருமகள், உடம்படின் - கூடின், தானே பெருகும் - செல்வந் தானே பெருகும்; கெடும் பொழுதில் - அவள் நீங்கிப்போங்காலத்தில், கண்டனவும் - முன்பு காணப்பட்ட பொருள்கள்கூட, காணா - காணப்படாவாய் கெடும் - அழிந்துபோம்.

(க-து.) உயிர்கள் பிறக்கும்போது நீங்கென நீங்கா. இறக்கும்போது நில்லென நில்லா; திருமகள் கூடினாற் செல்வமுங் கூடும்; அவள் நீங்கினாற் செல்வமும் நீங்கும்.

'எனவு' மென வந்த இரண்டும்மைகளும் உயர்வு சிறப்பு; 'கண்டனவு' மென்றது எச்சம்; என்னை? மேன் மேற் பெருகுதல் கெடுதலேயன்றி, முன்னாற் பெருகிக் கண்டனவுங் கெடு மென்றலின். 'எனைத்து' மென்பது முற்றும்மை; முழுமையுமென்னும் பொருளுணர்த்திற்று. உடம்படின்-உடம்பட்டுச் சேரினென்க. காணா, முற்றெச்சம். எனை-எத்தனை என்பதன் மரூஉ.

சஉ. *போரின்றி வாடும் பொருநர்சீர் கீழ்வீழ்ந்த
வேரின்றி வாடு மரமெல்லா - நீர்பாய்
மடையின்றி நீணெய்தல் வாடும் - படையின்றி
மன்னர்சீர் வாடி விடும்.

---

*இன்றி எனவரும் பாடங்கள் 'அறின்' எனவும் வரும்.

(இ-ள்.) பொருநர்சீர் - போர்வீரரின் சிறப்பு, போர் இன்றி - போரில்லாவிடின், வாடும் - குன்றும்; மரம்எல்லாம் - எல்லாமரங்களும், கீழ் வீழ்ந்த - நிலத்துள் இறங்கிய, வேர் இன்றி - வேர் அறுந்துவிடின், வாடும் - பட்டுப்போம்; நீள் நெய்தல் - நீண்டநெய்தன்மலர்கள், நீர்பாய்மடை - நீர் பாயும் மடையில், இன்றி - நீர் அற்றுவிட்டால், வாடும் - உலரும்; மன்னர்சீர் - அரசரது செல்வம், படையின்றி - படையில்லாவிடின், வாடிவிடும் - அழிந்துபோம்.

(க-து.) போரில்லாவிடின் வீரரின் சிறப்புக் கெடும்; வேரற்றுவிடின் மரங்கள் படும்; நீரற்றுவிடின் நெய்தல் உலரும்; படையில்லாவிடின் வேந்தனது சீர்மை அழியும்.

மடை - தொழிலடியாகப் பிறந்த பெயர். மடு - பகுதி, ஐ - வினைமுதற் பொருண்மைவிகுதி, நீரைக்கொண்டு செல்வது என்று பொருள். மடையின்றி - மடைக்கண் நீரின்றியென விரிக்க. மன்னர்க்குச் சீரென்றது அவரது அரசாட்சிச்செல்வத்தை யென்க. பொருநர்சீர் என்பதையும் அவர்க்குரிய வீரச்சிறப்பென்றே யுரைத்துக் கொள்க. மடை-வாய்க்கால்; குளமுமாம்.

௪௩. ஏதிலா ரென்பா ரியல்பில்லார் யார்யார்க்கும்
காதலா ரென்பார் தகவுடையார் - மேதக்க
தந்தை யெனப்படுவான் றன்னுவாத்தி தாயென்பாள்
முந்துதான் செய்த வினை.

(இ-ள்.) ஏதிலார் என்பார் - ஒருவனுக்கு அயலாரென்று சொல்லப்படுபவர்கள், இயல்பு இல்லார் - நல்லியல் பில்லாதவர்கள்; யார்யார்க்கும் - யாவர்க்கும், காதலார்என்பார் - அன்பரெனப்படுவார், தகவு உடையார் - நல்லியல்புடையவர்கள்; மேதக்க - மேன்மையான, தந்தையெனப்படுவான் - தந்தையென்று சொல்லப்படுபவன், தன் உவாத்தி - தன் ஆசிரியனவான்; தாய்என்பாள் - மேன்மையான தாயென்று சொல்லப்படுபவள், முந்து-முற்பிறப்பில், தான் செய்தவினை - தான் செய்த நல்வினையாகும்.

(க-து.) ஒருவனுக்கு நல்லியல்பில்லாதவர் அயலார்; யார்க்கும் நல்லியல் புடையவரே அன்பர்; மேலான தந்தை

யெனப் படுபவன் ஆசிரியன் ; தாயெனப்படுபவள் முன் செய்த நல்வினையாகும்.

எதிலார் - ஒற்றுமைப்படுதற்குரிய ஏது இல்லாதவர் ; அவர் பகைவருமல்லர், நண்பருமல்லர் ; அயலாரென்க. உடம்பை வளர்க்குந் தந்தையைப்போலவே அறிவென்னு முடம்பை ஆசிரியன் வளர்த்தலின் அவனுந் தந்தையெனப் பட்டான் ; அழிந்துபோம் ஊனுடம்பை வளர்ப்பானைவிட அழியாத அறிவுடம்பை வளர்க்கும் ஆசிரியன் மேலானவனாகலின், அவன் மேதக்க தந்தையெனப்பட்டான் ; தாய்க்கும் இதனைக் கூட்டிக் கூறுக. முன் செய்த நல்வினை இப்பிறப்பில் இன்பங்களைச் சிறிதளவுந் தவறாமல் விடாதிருந்து ஊட்டலின் அது தாயெனப்பட்டது. தாயென்னுங் குறிப்பால் வினை நல்வினைக் காயிற்றென்க. மேதக்க - மேன்மைதகு என்பதன் மரூஉவாகிய 'மேதகு' பகுதி, ஒற்றிரட்டிக்காலங்காட்டி விகுதி பெற்றது ; உகரக்கேடு சந்தி.

௪௪. பொறிகெடு நாணற்ற போழ்தே - நெறிபட்ட
ஐவராற் றானே வினைகெடும் பொய்யா
நலங்கெடு நீரற்ற பைங்கூழ் - நலமாறின்
நண்பினார் நண்பு கெடும்.

(இ-ள்.) நாண் அற்ற போழ்தே - ஒருவனுக்கு நாணமென்பது நீங்கினபோதே, பொறிகெடும் - செல்வம் அழியும் ; நெறிபட்ட - தன்வழிப்பட்ட, ஐவரால் - ஐம்பொறிகளால், வினை தானே கெடும் - தீவினைகள் தாமாகவே ஒழியும் ; நீர் அற்ற - நீரைப்பெறாத, பைங்கூழ் - பசும்பயிர்கள், பொய்யா - பொய்க்காத, நலம்கெடும் - விளைவின் நன்மை கெட்டொழியும் ; நலம்மாறின் - நண்பின் நலமாறினால், நண்பினார் நண்பு - நண்பரின் நட்பியல்பு, கெடும் - கெட்டுப்போம்.

(க-து.) நாணம் நீங்கினாற் செல்வங் கெடும் ; ஐம்பொறிகள் தன்வழிப்பட்டால் வினைகெடும்; நீரற்றாற் பசும்பயிர்களின் விளைவி னலங் கெடும் ; நன்மை மாறினால் நட்புக் கெடும்.

'பொறி கெடும் நாணற்ற போழ்தே' வென்பதைக் கயிறற்ற போதே பாவை கெடுமென் றுரைப்பாரு முளர். நெறிபட்ட வைவராலென்பதை ஐவர் நெறிப்பட்டா லென மாறுக.

நெறிபடல்-தன் வழிப்படல். வினை ஈண்டுப்பிறவிக்கு ஏதுவான தீவினை. தானே என்பதனால் முயற்சியின்றியே கெடுமென்க. பயிர்க்குப் பொய்யா நலமென்பது, நீர் பாய்ச்சி முறையாய்ப் பயிரிட்டால் அது சிறிதுந் தவறுமற் றருங் கதிர் முதலிய விளைபொருட் பயன்க ளென்க. நண்பர்க்கு நலமாவது, உற்றுழியுதவலாம்; "உடுக்கை இழந்தவன் கைபோல வாங்கே, யிடுக்கண் களைவதா நட்பு" (நட்பு, அ) என்னுந் திருக்குறட் டிருமொழியை நினைவுகூர்க. போழ்து - பொழுது என்பதன் மரூஉ; போது எனவும் வரும்.

சரு. நன்றிசா நன்றறியா தார்முன்னர்ச் - சென்ற
விருந்தும் விருப்பிலார் முற்சா - மரும்புணர்ப்பிற்
பாடல்சாம் பண்ணறியா தார்முன்ன - ரூடல்சாம்
ஊட லுணரா ரகத்து.

(இ-ள்.) நன்று அறியாதார் முன்னர் - பிறர் செய்யும் நன்மைகளை நன்மையெனத் தெரிந்து கொள்ளாதவர்பால், நன்றிசாம் - செய்ந்நன்றி கெடும்; விருப்பு இலார் முன் - அன்பில்லாதவரிடத்தில், சென்ற விருந்தும் - போன விருந்தினரும், சாம் - வாடுவர்; பண் அறியாதார் முன்னர் - பண்ணிசையை யறியாதா ரிடத்தில், அரும்புணர்ப்பின்-அரிய இசைப்பொருத்தம்பொருந்திய, பாடல்சாம் - பாட்டுக்கள் கெடும்; ஊடல் உணரா ரகத்து-ஊடுதலினினிமையைத்தெரிதலில்லாத கணவன்மாரிடத்தில், ஊடல்சாம் - ஊடுதல் கெடும்.

(க-து.) நன்மையறியார்மாட்டுச் செய்ந்நன்றிகெடும்; அன்பில்லார்மாட்டுச் செல்லும் விருந்தினர் வாடுவர்; இசையறியார்மாட்டு அரிய இசை பொருத்திப் பாடும் பாட்டுப் பயனின்றும்; புலவியுணரார் மாட்டுப் புலத்தல் கெடும்.

'முன்' னும் 'அகமு' மென்பன ஏழாவதன் இடப்பொருளன. சாகும் - என்பதில் குவ்வுயிர்மெய்கெட்டது. சாவும் - எனக் கொள்ளினும் இஃதே இலக்கணமாம். அரும்புணர்ப்பென்றது மிடற்றொலியும், யாழ்முதலிய இசைக்கருவிகளினொலியும், பாடற்பண்ணும் ஒத்திசைக்கும் பொருத்தமாம்; இவ்வியல்பினைக், 'கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங், குழல்வழி நின்றது யாழே, யாழ்வழித் தண்ணுமை நின்றது தகவே, தண்ணுமைப் பின்வழி நின்றது முழவே, முழவொடு கூடிநின்

றிசைத்த தாமந் திரிகை' யெனவருஞ் சிலப்பதிகாரத்து அரங்கேற்றுகாதையடிகளானும், (கரு௮-கசஉ) அவற்றினுரைகளானுங் கண்டு கொள்க. 'பாடல் சாம் பண்ணறியாதார்முன்னர்' என்று ஈண்டுக் கூறியவாறுபோலவே, 'பண்ணினிது பாடலுணர்வாரகத்து' என உடம்பாட்டால் முன்னுங் (௩எ) கூறினார். நன்றிக்குச் சாமென்றது மறப்பை. ஊடலுணர்தல் - ஊடுதலை அளவறிந்து நீங்குதல். ஊடல் - கலவியிற் பிணங்கல்; கூடாக்கூட்டம்.

சசு. நாற்ற முரைக்கு மலருண்மை கூறிய
மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கு முன்னம்
முகம்போல முன்னுரைப்ப தில்.

(இ-ள்.) மலர் உண்மை - மலரின் இருப்பை, நாற்றம் உரைக்கும் - அதன் மணமே அறிவிக்கும்; வினை நலம் - ஒருவனது செய்கைத் திறத்தை, கூறிய மாற்றம் உரைக்கும் - அவன் சொன்ன சொல்லே அறிவிக்கும்; தூக்கின் - ஆராய்ந்தால், அகம் பொதிந்த தீமை - நெஞ்சிற்செறிந்த தீமைகளை, மனம் உரைக்கும் - அவனது நெஞ்சமே அவனுக்கு அறிவிக்கும்; முன்னம் - ஒருவன் உள்ளக்குறிப்பை, முகம்போல - அவன் முகத்தைப்போல, முன் உரைப்பது இல் - முற்படத் தெரிவிப்பது வேறில்லை.

(க-து.) மலரின்உண்மையை அதன் மணமும், ஒருவன் செயற்றிறனை அவன் சொல்லும், நெஞ்சிற் செறிந்த தீமையை அவன் நெஞ்சமும், உள்ளக்குறிப்பை முகமும் அறிவித்திடும்.

எல்லாவற்றிற்கும் பிரிநிலையேகாரம் விரித்துரைத்துக் கொள்க. உண்மை - குறிப்புத் தொழிற்பெயர். அகம் பொதிந்த வென்பது பொருட்பெருக்குடையது. மன முரைக்கு மென்றார், 'தன்னெஞ்சே தன்னைச்சுடலின்;' 'நெஞ்சத்திற் குறுகிய கரியில்லையாகலி' னென்பது கலித்தொகை (நெய்தல், அ). 'முன்னுரைப்ப' தென்றார், நெஞ்சுற்றதைப் பிறர்க்கறிவிப்பதில் அஃதொன்றே முற்படவறிவித்தலினென்பது; நாயனாருந் 'தான் முந்துறு' மென்றிதனையே சுட்டினார் (திருக்குறள், எக; எ). இல் - 'இல்லை' யென்பதில் ஐ தொகுத்து நின்றது.

சஎ. மழையின்றி மாநிலத்தார்க் கில்லை - மழையும்
தவமிலா ரில்வழி யில்லை - தவமும்
அரச னிலாவழி யில்லை - யரசனும்
இல்வாழ்வா ரில்வழி யில்.

(இ-ள்.) மழையின்றி - மழையில்லாமல், மாநிலத்தார்க்கு - இப்பேருலகத்தின் மக்கட்கு, இல்லை - நலமில்லை; மழையும் - அம்மழைதானும், தவம் இலார் - தவஞ்செய்தலில்லாதவர்கள், இல்வழி - இருப்பிடங்களுள், இல்லை - பெய்தலில்லை; தவமும் - அவ்வியல்பினதான தவஞ்செய்தலும், அரசன் இலாவழி - செங்கோலரசன் இல்லாதவிடத்து, இல்லை - நிகழ்தலில்லை; அரசனும் - அச்செங்கோலரசனும் இல்வாழ்வார் - குடிமக்கள், இல்வழி - இல்லாதவிடத்து, இல் - இலனுவான்.

(க-து.) மழையில்லாவிட்டால் உலகத்துமக்கட்கு நலமில்லை; அம்மழையுந் தவமுடையாரில்லாத விடத்துப் பெய்தலில்லை; அத்தவஞ் செய்தலும் முறையான அரசனில்லாத நாட்டில் நிகழ்தலில்லை; அவ்வரசனுங் குடிகளில்லாத விடத்தில் இருப்பதில்லை.

'தவமிலா' ரென்பதைத் தவமுடையாரென் றுரைப்பாருமுளர். 'தவமிலா ரில்வழி' யென்பதில், இல், இருப்பிடத்தை யுணர்த்திற்று; 'இல்வழிப்படூஉம் காக்கை' (அகம் - ௯௧௫) என்புழிப்போல. உலகத்திலுள்ள எல்லா நலங்களுங் குடிமக்களான இல்வாழ்வாரால் விளைதலின், ஏனைய மூன்று கருத்துகட்கும் அவரை ஏதுவாக உரைத்தார். தவமிலார் என்பதில் 'இல்' சாரியை எனக் கொள்ளுதலும் ஒன்று; அவ்வாறு கொள்ளின் 'இல்வழி' என்பதற்கு, இல்லாதவிடத்து எனப் பொருள்கொள்க.

சஅ. பூவினு னந்தும் புனைதண்டார் மற்றதன்
தாதினு னந்துஞ் சுரும்பெல்லாந் - தீதில்
வினையினு னந்துவர் மக்களுந் தத்தம்
நனையினு னந்து நறு.

(இ-ள்.) புனை தண்தார் - தொடுக்கப்படுங் குளிர்ந்த மாலை, பூவினால் - பூக்களால், நந்தும் - மிக்கு விளங்கும்; சுரும்புஎல்லாம் - வண்டுகளெல்லாம், அதன் தாதினால் - அப்பூக்களின் தேனால், நந்தும் - மிக்குப் பொலியும்; மக்களும் - உலகத்து மக்களும், தீது இல் வினையினால் - குற்றமில்லாத நற்செய்கைகளால், நந்துவர் - உயர்வடைவார்; நறா - தேன் வகைகள், தத்தம் - தாந்தா மிருக்கும், நனையினால் - பூவரும்பின் வகையினால், நந்தும் - பெருகி நல்லனவாம்.

(க-து.) மாலை பூவினால் விளங்கும்; வண்டுகள் அப் பூவிலுள்ள தேனாற் பொலியும்; மக்கள் நற்செய்கைகளால் உயர்வர்; தேன் தாந்தாமிருக்கும் மலர் வகைக் கேற்பப் பெருகி இனியவாம்.

நந்துதல் உயர்தலையும் விளங்குதலையும் உணர்த்தின. இதற்கு இவ்விரு பொருளுண்மைகளையு முறையே 'கானம் நந்திய செந்நிலப் பெருவழி' (கள) என்னும் முல்லைப்பாட்டினாலும், - 'பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்த' (நடகசு) என்னும் ஐங்குறுநூற்றினாலு மறிந்துகொள்க. தாது, தேன் பொருட்டாதலை, 'ஓங்குவரை மருங்கின் நுண்தாது உறைக்குங் காந்தள்' (கஙஉ) என்னும் பட்டினப்பாலையிற் காண்க. தாது - மகரந்தமுமாம். வினை ஈண்டுச் செயல்; தத்தம் 'நனையி'னா லென்றது, தேன்தானிருக்கும் பூவின் செழுமைக்கும் வகைக்கும் ஏற்பப் பெருகி இனிதாதலின்.

சகூ. சிறந்தார்க் கரிய செறுதலெஞ் ஞான்றும்
பிறந்தார்க் கரிய துணைதுறந்து வாழ்தல்
வரைந்தார்க் கரிய வகுத்தூ - ணிரந்தார்க்கொன்
றில்லென்றல் யார்க்கு மரிது.

(இ-ள்.) சிறந்தார்க்கு - நட்பிற் சிறந்தவர்களுக்கு, செறுதல் - தம் நண்பரைப் பிழைசெய்த வழியுஞ் சினந்து நீக்குஞ் செயல்கள், அரிய - இலவாம்; பிறந்தார்க்கு - உயர்குடியிற் பிறந்த மேலோர்க்கு, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், துணைதுறந்து வாழ்தல் - தமக்குத் துணையான சுற்றங்களை நீங்கி இன்ப வாழ்வில் வைகும் வகைகள், அரிய - இல; வரைந்தார்க்கு - தம் உணவின் பொருட் செலவை அளவு

செய்து வாழ்கின்றவர்களுக்கு, வகுத்து ஊண் - பிறர்க்கும் பகுத்தளித்து உண்ணு நிகழ்ச்சிகள், அரிய - இல; யார்க்கும் - ஈரநெஞ்ச முடையாரெல்லார்க்கும், இரந்தார்க்கு - தம்பால் வந்து இரந்து கேட்டவர்கட்கு, ஒன்று - ஒரு பொருள், இல் என்றல் - இல்லையென்று மறுத்துக் கூறுதல், அரிது - இல்லை.

(க-து.) சிறந்த நண்பர்கள் தம்முளொருவரை யொருவர் சினந்து கொள்ளார்; உயர்குடிப் பிறப்பினர் தம் இனத்தாரை நீங்கி வாழார்; அளவோடு செலவு செய்கின்றவர்கள் பிறர்க்குப் பகுத்துண்டல் செய்வாரல்லர்; அருளுடையவரெல்லாரும் இரந்தார்க்கு இல்லையென்று சொல்லார்.

'அரிய' வென்பது பலவின் முற்றுனமையின், 'செறுதல், வாழ்தல், உண்டல்' என்பவற்றிற்குப் பன்மைப் பொருள்களுரைத்துக்கொள்க. 'எஞ்ஞான்று' மென்பதை ஏனையவற்றிற்குங் கூட்டிப் பிழைசெய்த காலத்தும், இடுக்கான காலத்தும், செல்வம் மிக்க காலத்தும், வறுமையுற்ற காலத்து மெனக் கருத்துரைத்துக் கொள்ளல் சிறப்பாகும். ஊண், முதனீண்ட முதனிலைத் தொழிற் பெயர். அருமை, ஈண்டு இன்மைமேல. ஞான்று - காலப் பொருளதாகிய இடைச்சொல்.

௫௰. இரைசுடு மின்புறு யாக்கையுட் பட்டால்
உரைசுடு மொண்மை யிலாரை - வரைகொள்ளா
முன்னை யொருவன் வினைசுடும் வேந்தனையுந்
தன்னடைந்த சேனை சுடும்.

(இ-ள்.) இரை - உணவு, இன்பு உறு - பிணியினாற் றுன்பமுறும், யாக்கையுள் பட்டால் - வயிற்றிற் சேர்ந்தால், சுடும் - வருத்தும; ஒண்மை இலாரை - அறிவுவிளக்கம் இல்லாதவர்களை, உரைசுடும் - அவர் வாய்மொழியே அவரைத் துன்புறுத்தும்; ஒருவன் - ஒருவனது, வரைகொள்ளா - அறத்தின் எல்லையிற்படாத, முன்னைவினை - முன்செய்த தீவினை, சுடும் - இப்பிறப்பில் வந்து வருத்தும்; வரைகொள்ளா - அறத்தின் எல்லையிற்படாத, வேந்தனையும் -

அரசனையும், தன் அடைந்த - தன்னைச் சேர்ந்த, சேனை - படைகள், சுடும் - கொல்லும்.

(க-து.) பிணியுள்ளஉடம்புட்படுமுணவு செரியாமையாற் றுன்புறுத்தும்; அறிவிலாரை அவர் வாய்ச்சொல்லே வருத்தும்; முன்செய்த தீவினைகள் இம்மையில் வந்து துன்புறுத்தும்; அளவுக்கு மேற்பட்ட சேனைகள் அரசனையே கொல்லும்.

அறிவென்பது விளக்கமுடைமையின் 'ஒண்மை' யெனப்பட்டது. 'ஒண்மை யுடையம்யா மென்னுஞ் செருக்கு' (புல்லறி.சு) என்பது திருக்குறள். வரைகொள்ளாவென்னுங் குறிப்பால் வினை தீவினைக்காயிற்று. வரைகொள்ளா வென்பதைச் சேனைக்குங் கூட்டுக. நீதிமுறை வழியில் நடத்தப்படாத சேனை அரசற்குத் தீங்கிழைக்கு மென்க. உம்மை, இறந்தது தழீஇய எச்சம். யாக்கை - 'யா' பகுதி, 'க்' சந்தி, 'கு' சாரியை, 'ஐ' செயப்படு பொருண்மை விகுதி; கட்டப்பட்டது என்பது பொருள்.

ருக. எள்ளற் பொருள திகழ்தலொருவனை
யுள்ளற் பொருள துறுதிச்சொ - லுள்ளறிந்து
சேர்தற் பொருள தறநெறி பன்னூலுந்
தேர்தற் பொருள பொருள்.

(இ-ள்.) ஒருவனை - பிறனொருவனை, இகழ்தல் - இகழுஞ் செயல், எள்ளற் பொருளது - பிறரால் இகழற்பாலது; உறுதிச்சொல் - ஒருவன் கூறும் உறுதிச்சொல், உள்ளற் பொருளது - அவனை நண்பனெனக் கருதுதற்குரியது; அறநெறி - அறவழி, உள் அறிந்து - ஒருவன் உள்ளத்தில் தெளிந்து, சேர்தற் பொருளது - அடைதற்குரியது; பொருள் - மெய்ப்பொருள்கள், பல நூலும் - அமைவுடைய பல நூல்களையும், தேர்தற் பொருள - ஆராய்ந்து தெளிதற்குரியன.

(க-து.) ஒருவனுக்கு இகழ்தற் குரியது அவன் பிறனை இகழுஞ் செயல்; ஒருவனை நண்பனென்று தேர்தற்குரியது அவனது உறுதிச் சொல்; உண்மையறிந்து தெளிந்து கடைப்பிடித்தற் குரியது அறவழி; பலநூல்களையும் ஆராய்ந்து தேர்தற்குரிய பொருள்கள் மெய்ப்பொருள்களாம்.

உள் - உள்ளம். நூலும் இரண்டாவது விரிக்க; உம்மை முற்று. உறுதிச்சொல் - அடையப்படும் நன்மையைத் தருஞ் சொல். உறு - பகுதி, த் - எழுத்துப்பேறு, இ - செயப்படு பொருண்மைவிகுதி.

ருஉ. யாறு ளடங்குங் குளமுள - வீறுசால்
மன்னர் விழையுங் குடியுள - தொன்மரபின்
வேத முறுவன பாட்டுள வேளாண்மை
வேள்வியோ டொப்ப வுள.

(இ-ள்.) யாறு - ஆற்றுவெள்ளம், உள் அடங்கும் - தம்முட்புகுந்து அடங்கத்தக்க, குளம் உள - குளங்களும் நாட்டில் உள்ளன; வீறு சால் - சிறப்பு அமைந்த, மன்னர் விழையும் - அரசர்களான் விரும்பப்படும், குடி உள - குடிகளும் உள்ளன; தொல்மரபின் - பழையமுறைமையினை யுடைய, வேதம் உறுவன - வேதக்கருத்துக்களைப் பொருந்துவவாகிய. பாட்டுஉள - சிலதனிப்பாட்டுகளும் உள்ளன; வேள்வியோடு ஒப்ப - வேள்விகளுக்கு நிகராவனவாகிய, வேளாண்மை உள - ஈகைகள் உள்ளன.

(க-து.) ஆறுகள் தம்முள் அடங்கத்தக்க குளங்களும் உள்ளன; அரசர்களால் விரும்பப்படும் குடிகளும் உள்ளன; வேதக்கருத்துக்களையுடைய பழைய தனிப்பாட்டுகளும் உள்ளன; வேள்விக்கு நிகரான ஈகைகளும் உள்ளன.

'யாறுளடங்குங் குள' மென்றது, ஆற்றுவெள்ளங்களும் புகுந்தடங்கத்தக்க அவ்வளவு அகலமும் ஆழமுங்கரைவலிமையுமுடைய குளங்களாகு மென்றற்கு. மன்னர் விழையுங் குடியாதல் - திருவினும் உருவினும் பெருந்தகைமையினுமென்க. தொன்மரபினென்றது மேன்மையாகக் கருதப்பட்ட பழந்தமிழ் நான்மறைகளின் கருத்தமைந்த பழந்தமிழ்த்தனிப் பாட்டுகளும் இஞ்ஞான்றுள்ளன வென்பது. வேள் ஆண்மை இரப்போரது விருப்பத்தை ஆளுதலென்க; வேள் - விருப்பம். உறுவன - முற்றெச்சம். வேள்வியோடொத்த வேளாண்மை யாவது-கைம்மாறு செய்ய வலியில்லாத நல்லோர்க்கு ஒருவன் தேடிச்சென்று கொடுக்கும் ஈகை.

௫௩. எருதுடையான் வேளாள னேலாதான் பார்ப்பான்
ஒருதொடையான் வெல்வது கோழி - யுருவோ
டறிவுடையா ளில்வாழ்க்கைப் பெண்ணென்ப சேனை
செறிவுடையான் சேனா பதி.

(இ-ள்.) எருது உடையான்-உழவுமாடுகளையுடையவன், வேளாளன் - வேளாளனாவான்; ஒரு தொடையான் - ஒரு காலால், வெல்வது - பெடையை வயப்படுத்துவதான, கோழி-சேவற் கோழியைப்போல, ஏலாதான் - எவர் பகையையும் ஏற்றுக் கொள்ளலின்றி யாவரையும் வயப்படுத்தி ஒற்றுமையுடன் வாழ்பவன், பார்ப்பான்-பார்ப்பனனாவான்; உருவோடு-உருவழகோடு, அறிவுடையாள் - வாழ்க்கையை நடத்தும் நல்லறிவு உடையவள், இல்வாழ்க்கைப்பெண் - இல்வாழ்க்கைக்கு உரிய துணைவி; சேனை-தனது சேனையோடு, செறிவுடையான்-எஞ்ஞான்றும் ஒன்றுபட்டு உடனுறைதலுடையவன், சேனாபதி - சேனைத்தலைவனாவான்; என்ப - என்று பெரியோர் கூறுவர்.

(க-து.) உழவுமாடுடையவன் வேளாளன்; ஒருகாலால் பெடையை வயப்படுத்துவதான கோழியைப் போல எவரோடும் மாறுபடாது ஒற்றுமையுடன் வாழ்பவன் பார்ப்பனன்; அழகும் அறிவுமுடையவள் வாழ்க்கைத்துணை; சேனையோடு ஒன்றுபட்டு உடனுறைபவன் சேனாபதி.

வேளாளனுக்கு வித்தும் ஏரும் இன்றியமையாதனவாதலால் எருதுடையான் என்றார். கோழி ஒருகாலாற் பெடையை நணுகி வயப்படுத்துவதென்பது நயங்காட்டு மாறும்; அதையொப்பவே பார்ப்பானும் எவரோடும் பகையாமல் நயமாகவே தன் செய்கையை முடித்து வெற்றி பெறுவானென்க. சேனை செறிவுடையானென்றது, சேனையைவிட்டு விலகானென்றபடி; உடையான் முதலியன வினையாலணையும் பெயர்கள். உருவோடு, ஓடு உடனிகழ்ச்சிப் பொருளது. சேனைச்செறிவுடையான் என்ற பாடத்துக்கு ஒற்றுமையுடைய மிக்க பெரிய சேனை என்க. ஏலாதான் என்பதற்கு மிக்க பொருளாசையால் மானங்கெட ஏற்காதவன் எனவுரைப்பினுமாம்.

௫௪. யானை யுடையார் கதனுவப்பர் மன்னர்
கடும்பரிமாக் காதலித் தூர்வர் - கொடுங்குழை
நல்லாரை நல்லவர் நாணுவப்ப - ரல்லாரை
அல்லா ருவப்பது கேடு.

(இ-ள்.) யானைஉடையார் - யானையையுடையபோர்த் தலைவர், கதன் உவப்பர் - அதன் சினத்தை மகிழ்வார்; மன்னர் - அரசர், கடும் பரிமா - விரைந்த ஓட்டத்தினையுடைய குதிரையை, காதலித்து-விரும்பி, ஊர்வர்-அதன் மேலேறிச் செல்வர்; கொடுங் குழை - வளைவான காதணியை யணிந்த, நல்லாரை - மங்கையரின், நாண் - நாணத்தை, நல்லவர் - நல்லியல் புடையவர்கள், உவப்பர் - மகிழ்வார்கள்; அல்லாரை-நாணுடையரல்லாத மகளிர்பால், அல்லார் - தீயோர், விரும்புவது - விரும்புவது, கேடு - தீயஒழுக்கமேயாம்.

(க-து.) யானையை யுடையவர்கள் அதன் சினத்தை மகிழ்வார்கள்; அரசர்கள் விரைந்த செலவையுடைய குதிரையை விரும்புவார்கள்; நல்லியல்புடைய ஆடவர்கள் நன் மங்கையரின் நாணத்தை மகிழ்வார்கள்; தீய ஆடவர்கள் தீய பெண்டிர்பால் தீதையே விரும்புவர்.

கதன், ஈற்றுப் போலி. கடுமை, இங்கு விரைவின் மேலது. பரிமா, இருபெயரொட்டு. பெண்மக்களிடத்தில் உள்ள தீயவை புரியாத நாணத்தை நல்லவர்கள் விரும்புவார்கள்; ஆனால் தீயவர்கள் அந் நாணத்தை விரும்பாது தீயவைபுரியும் நாணங்கெட்ட தன்மையையே விரும்புவரென்க. 'செய்யத் தகாதனவற்றின்கண் உள்ளமொடுங்குத'லை நாணமென்பார் நச்சினார்க்கினியர். நல்லாரை, அல்லாரை - உருபு மயக்கம்.

௫௫. கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை - கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை யீன்றாளோ
டெண்ணக் கடவுளு மில்.

(இ-ள்.) கண்ணின் - கண்ணைப்போல், சிறந்த உறுப்பு - மேலான உறுப்பு, இல்லை-ஒருவனுக்கு வேறில்லை; கொண்டானின் - தன்னைத் திருமணஞ் செய்துகொண்ட கணவனைப்

போல, துன்னிய கேளிர் - நெருங்கிய உறவினர், பிறர் இல்லை- (குலமகளிர்க்கு) வேறொருவருமில்லை; மக்களின் - தம் மக்களைப்போல், ஒண்மையவாய் - ஒளியுடையவாய், சான்ற - அமைந்த, பொருள்-வேறுபொருள், இல்லை-பெற்றோர்க்கில்லை; ஈன்றாளோடு - தாய்க்கு நிகராக, எண்ணக் கடவுளும் இல் - (குழந்தைகட்கு) உயர்வாக மதிப்பதற்குரிய கடவுளும் வேறில்லை.

(க-து.) ஒருவனுக்கு கண்ணைப்போல மேலான உறுப்பு வேறில்லை ; குலமகளுக்குக் கணவனைப்போல நெருங்கிய உறவினர் வேறில்லை ; பெற்றோர்க்கு மக்களைப்போல ஒளியுள்ள பொருள்கள் வேறில்லை ; குழந்தைகட்குத் தாயைப்போல மேலான கடவுள் வேறெதுவுமில்லை.

இன்னும் ஓடும் ஒப்புப் பொருளன. கொண்டான், வினையாலணையும் பெயர். ' ஒண்மையவாய்ச் சான்ற பொரு ளென்றது எனை எல்லாப் பொருள்களினும் அறிவு ஒளி யுடைய பொருளாய்ப் பெற்றோர்க்கு இம்மை மறுமைப் பயன் களை விளைப்பதாய், பிறவிமுழுதும் உரியதாய் அமைந்து நிற் றலினென்பது ; ' தம்பொருளென்ப தம்மக்கள்' (மக்கட் பேறு, ௩) என்னும் வள்ளுவர் திருமொழியை இங்கு உற்று நோக்குக. கேளிர் - கேண்மை யென்னும் பண்படியாய்ப் பிறந்த பலர்பாற் படர்க்கைப்பெயர். உம்மை உயர்வு சிறப்பு. ' கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கல்வியின், நுண்ணிய வாய பொருளில்லை - கொண்டானின் துன்னிய கேளிர் பிறரில்லை யீன்றாளோ டென்ன கடவுளு மில்'-என்பது பாட வேறுபாடு.

௫சு. கற்றன்னர் கற்றாரைக் காதலர் கண்ணோடார்
செற்றன்னர் செற்றாரைச் சேர்ந்தவர் - தெற்றெனா
உற்ற துரையாதா ருள்கரந்து பாம்புறையும்
புற்றன்னர் புல்லறிவி னார்.

(இ-ள்.) கற்றாரை கல்வியறிவுடையவர்களை, காதலர் - அன்பால் விரும்புகின்றவர்கள், கற்றன்னர் - அக்கல்வியறிவு டையவர்களை ஒப்பர் ; கண் ஓடார் - பிறர்பாற் கண்ணோட்ட மில்லாதவர்கள், செற்றன்னர் - துன்பஞ் செய்தாரை ஒப்பர் ; தெற்றென - தெளிவாக, உற்றது - உண்மையை, உரை யாதார் - சொல்லாதவர்கள், செற்றாரைச் சேர்ந்தவர் - பகை

வரை ஒப்பர்; புல்லறிவினர் - கீழ்மையறிவுடையவர்கள், பாம்பு உள் கரந்து உறையும் - பாம்பு உள்ளே மறைந்து வாழும், புற்று அன்னர் - புற்றை ஒப்பர்.

(க-து.) கல்வியறிவுடையவர்களை விரும்பி உடனிருப்பவர்கள், அக் கல்வியறிவுடையவர்களுக்கு ஒப்பாவர்; கண்ணோட்ட மில்லாதவர்கள் இடர் செய்வாரை ஒப்பர்; உண்மையைத் தெளிவாகச் சொல்லாதவர்கள் பகைவருக்கு நிகராவார்கள்; சிற்றறிவுடையார் பாம்புப் புற்றுக்கு ஒப்பாவர்.

கற்றன்னர் - கற்றால் அன்னர்; கற்றால் என்பது ஈறு தொகுத்தலாய் நின்றது; செற்றன்ன ரென்பதும் அது. காதலர் - குறிப்பு வினைப்பெயர்; உற்றது - நெஞ்சத்துட் பட்டது. புல்லறிவினர்பால் உட்கிடக்குந் தீமைகள் பலவிருக்கு மாகலின், உள்கரந்து பாம் புறையும் புற்றன்னராயினர். 'கற்றன்னர் கற்றாரைக் காதல ரென்பதைக்' கற்றன்னர் கற்றாரைக் காதலவ' (எச) ரென்று மேலுங் கூறுவர்.

ருஎ. மாண்டவர் மாண்ட வினைபெறுப - வேண்டாதார்
வேண்டா வினையும் பெறுபவே - யாண்டும்
பிறப்பார் பிறப்பா ரறனின் புறுவர்
துறப்பார் துறக்கத் தவர்.

(இ-ள்.) மாண்டவர் - அறிவால் மாட்சிமைப்பட்டவர்கள், மாண்டவினை - மாட்சிமைப்பட்ட செயல்களை, பெறுப - செய்யப்பெறுவர்; வேண்டாதார் - அவ்வறிவு மாட்சிமையை வேண்டாதவர்கள், வேண்டா வினையும் - தம்மால் வேண்டப் படாத தீவினைகளையும், பெறுப - இம்மை மறுமைகளிற் பெறுவார்கள்; யாண்டும் - எப்பொழுதும், பிறப்பார் - மேற் பிறப்பிற் பிறப்பவர்கள், பிறப்பு ஆர் - அப் பிறப்பிற் பொருந்தும், அறன் - அறத்தையே, இன்புறுவர் - இருமையினும் விரும்பி யின்புறுவர்; துறப்பார் - யான் எனதென்னும் பற்றைத் துறப்பவர்கள், துறக்கத்தவர் - வீட்டுலகத்திற்குரியவ ராவார்கள்.

(க-து.) அறிவான் மாட்சிமைப்பட்டவர்கள் மாட்சிமைப் பட்ட செயல்களையே செய்வார்கள்; அவ்வறிவு மாட்சிமையை வேண்டாதவர்கள் தீவினைச் செயல்களையும் பெறுவார்கள்; உயர்ந்த பிறப்பிற் பிறப்பவர்கள் அப்பிறப்பின் அறத்தை

விரும்பி இருமையும் இன்புறுவர்; பற்றைத் துறப்பவர்கள் வீட்டின்பத்துக் குரியராவார்கள்.

மாண்டவர் - வினையாலணையும் பெயர். பெறுப, பல்லோர் படர்க்கை எதிர்கால வினைமுற்று. யாண்டும் - இடைநிலை விளக்காதலின் மற்றவற்றோடும் ஒட்டிப் பொருளுரைத்துக் கொள்க. துறக்கத்தவரென்றே உரிமைப்படக் கூறினார், அது திண்ணமாதலின்.

௫அ. என்று முளவாகு நாளு மிருசுடரும்
என்றும் பிணியுந் தொழிலொக்கு - மென்றும்
கொடுப்பாருங் கொள்வாரு மன்னர் பிறப்பாருஞ்
சாவாரு மென்று முளர்.

(இ-ள்.) என்றும் - எக்காலத்தும், நாளும் - விண்மீன்களும், இருசுடரும் - திங்களுஞ்சூரியனும், உளவாகும் - உள்ளனவாகும்; என்றும் - எக்காலத்திலும், பிணியும் - தொழில் செயலுக்கு இடையூறான நோயும், தொழில் - உழவு முதலிய தொழில்களும், ஒக்கும் - உள்ளன ஆகும்; என்றும் - எக்காலத்திலும், கொடுப்பாரும் - இல்லையென்னாமல் ஈவாரும், கொள்வாரும் - ஏற்பாரும், அன்னர் - உளராவர்; என்றும் - எக்காலத்திலும், பிறப்பாரும் - பிறப்பவர்களும், சாவாரும் - இறக்கின்றவர்களும், உளர் - உளராவர்.

(க-து.) விண் மீன்களுந் திங்களுஞ் சூரியனும் என்றும் உள்ளன; நோயும் உழுதொழில் முதலாயினவும் என்றும் உள்ளன; ஈவாரும் ஏற்பாரும் என்றும் உளர்; பிறப்பவர்களும் இறப்பவர்களும் என்றும் உளர்.

எனவே இச் செய்யுள் உலகத்தின் இடையறாமை குறித்தவாறாம். 'ஒக்கு' மென்பதை என்றும் உளவாத லொக்குமென்றும், அன்னரென்பதை என்றும் உளவாகும் நாண்மீன்முதலாயின போல்வரென்றுங் கருத்துக்கொள்க. தொழில் தலைமையால் உழுதொழில் முதலானவற்றைக் குறிக்கும். சுடர் - பண்பாகுபெயர். தொழில் என்பதன் ஈற்றில் எண்ணும்மை தொக்கது. பிணி - பிணித்தல் என்னுந் தொழிலடியாகப்பிறந்த பெயர்; முயற்சி செய்யவொட்டாமல் கட்டுப்படுத்துவது என்பது பொருள்.

ருக. இனிதுண்பா னென்பா னுயிர்கொல்லா துண்பான்
முனிதக்கா னென்பான் முகனொழிந்து வாழ்வான்
தனிய னெனப்படுவான் செய்தநன் றில்லான்
இனிய னெனப்படுவான் யார்யார்க்கே யானும்
*முனியா வொழுக்கத் தவன்.

(இ-ள்.) இனிது உண்பான் என்பான் - இனிதாக உண்பவன் என்று சொல்லப்படுபவன், உயிர் கொல்லாது - ஒருயிரையுங் கொல்லாது, உண்பான் - காய்கறியுணவுகளையே உண்பவனுவான்; முனிதக்கான் என்பான் - எல்லாரானும் வெறுக்கத்தக்கவனென்று சொல்லப்படுபவன், முகன் ஒழிந்து - முகமலர்ச்சியில்லாமல், வாழ்வான் - கடுகடுப்பாய் வாழ்பவனு வான்; தனியன் எனப்படுவான் - துணையில்லாதவனென்று சொல்லப்படுபவன், செய்த நன்று இல்லான் - தன்னுற் செய்யப்படும் நன்மையொன்று மில்லாதவனுவான்; இனியன் எனப் படுவான் - இனிமையானவனென்று சொல்லப்படுபவன், யார் யார்க்கேயானும் - எவரெவரிடத்திலாலும். முனியா ஒழுக் கத்தவன் - வெறுக்கப்படாத ஒழுக்கத்தையுடையவனுவான்.

(க-து.) ஒருயிரையுங் கொல்லாமற் காய்கறி யுணவுகளை யுண்பவனே இனிதாக உண்பவனுவான்; முகமலர்ச்சியில் லாமற் கடுகடுப்பாயுயிர்வாழ்பவன் எல்லாரானும் வெறுக்கப் படுவான்; யார்க்கும் உதவி செய்யாதவன் துணையில்லாதவனு வான்; எவரிடத்திலும் வெறுக்கத்தகாத ஒழுக்கத்தையுடை யவன் இனியவனென்று சொல்லப்படுவான்.

இனிது - குறிப்புமுற்றெச்சம். முனியத்தக்கான் என்பது முனிதக்கான் எனத் தொகுத்தது. செய்த நன்றில்லா னென் பது நன்மை செய்தலில்லா னென்னுங் கருத்தினதாகலின் மற்றதற் கேற்பச் சொற்பொருளுரைத்துக்கொள்க. அடுக்கு பன்மைப் பொருளது; குவ்வுருபு இடப்பொருளில் வந்தது. ஆன் - ஆயின் என்பதன் மரூஉ. இது பஃறொடை வெண்பா.

ருO. ஊன்றுண்பா னென்பா னிசைநடுவான் மற்றவன்
கைத்துண்பான் காங்கி யெனப்படுவான் றெற்ற

* முனியாத வுள்ளத்தவன் எனவும் பாடம்.

நகையாகு நண்ணார்முற் சேறல் - பகையாகும்
பாடறியா தானை யிரவு.

(இ-ள்.) ஈத்து உண்பான் என்பான் - பிறர்க்குக் கொடுத்துண்பவனெனப்படுவோன், இசை நடுவான் - உலகத்திற் புகழை நிறுத்துவான்; அவன் கைத்து உண்பான் - அங்ஙனங் கொடுத்துண்பானது கைப்பொருளையும் பறித்துண்பவன், காங்கி எனப்படுவான் - அவாவுடையவனெனப்படுவான்; நண்ணார்முன் - விரும்பாதவர்முன். சேறல் ஒன்றை விரும்பியடைவது, தெற்ற நகையாகும் - தெளிவாக இகழ்ச்சியுண்டாகும்; பாடுஅறியாதானை - தனது தகுதியறியாதவனை, இரவு - இரந்துசெல்லல், பகையாகும் - பகைமைக்கே இடமாகும்.

(க-து.) பிறர்க்குக் கொடுத்துண்பவன் புகழுடையவனாவான்; அங்ஙனங் கொடுத்துண்பவனது கைப்பொருளையே பறித்துண்பவன் அவாமிக்கவனாவான்; தன்னை விரும்பாதார் முன் தான் விரும்பிச் செல்லல் தெளிவான இகழ்ச்சிக்கு இடமாகும்; தகுதியறியாதவனை ஒன்று வேண்டிச்செல்லல் பகைக்கிடமாகும்.

ஈந்தென்பது ஈத்தென வலித்தது. மற்று பிறிதென்னும் பொருளது. கைத்து - கையிலுள்ள பொருளென்க. காங்கி, - 'காங்க்ஷி' யென்னும் வடமொழித்திரிபு; யாதொரு முயற்சியுமின்றிப் பிறர்பொருளை அவாவி உயிர்வாழ்பவனென்பது பொருள். நகை. - இங்கு இகழ்ச்சிப்பொருட்டு. பகை - தொழிற்பெயர்; பகு - பகுதி, ஐ - விகுதி, உகரக்கேடு சந்தி. பாடு - முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். அறியாதானை - உருபு மயக்கம்.

௬௧. நெய்விதிர்ப்ப நந்தும் நெருப்பழல் சேர்ந்து
வழுத்த வரங்கொடுப்பர் நாகர் - தொழுத்திறந்து
கன்றூட்ட நந்துங் கறவை கலம்பரப்பி
நன்றூட்ட நந்தும் விருந்து.

(இ-ள்.) நெருப்பு அழல் - வேள்வித் தீயின் சுடர். நெய் விதிர்ப்ப - நெய்யைச்சிந்த, நந்தும் - ஓங்கும்; நாகர் -

தேவர்கள், சேர்ந்து வழுத்த - தம்மைப்பிறர் அணுகி ஏத்தவே, வரம்கொடுப்பர் - வேண்டும் நன்மைகளை யளிப்பர்; கறவை - ஆக்கள், தொழுத் திறந்து - கொட்டிலைத் திறந்து, கன்று ஊட்ட - கன்றுகளை உண்பிக்க, நந்தும் - பால்பெருக் கெடுக்கும்; கலம் பரப்பி - இலையை விரித்து, நன்று ஊட்ட - இனிமையாக உண்பிக்க. விருந்து நந்தும் - விருந்தினர் மனங் களிப்பர்.

(க-து.) அழல் நெய்யைச் சொரிய வளர்ந்தெரியும்; தேவர் தம்மை வழுத்தினால் நன்மை தருவர்; கன்றை உண்பிக்க ஆன் பால் பெருக்கும்; இனிமையாய் விருந்தளிக்க விருந்தினர் மகிழ்வர்.

விதிர்ப்ப - சிந்த; இஃதிப்பொருட்டாதலை 'நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து' (கஅஅ) என்னும் புறநானூற் றடியிற் காண்க. நெய்யென்னுங் குறிப்பினால் நெருப்பு வேள்வித்தீயை யுணர்த்திற்று. நாகர், ஈண்டுத் தேவர் மேற்று. பரப்பியென்னுங் குறிப்பினாற் கலம் இலைக்கலத்துக்கா யிற்று. நந்தல் - மிகுதல்; இப்பொருள்கொண்டு தொடர்க் கேற்பக் கருத்துரைத்துக்கொள்க. அழல் - எழுவாயாதலால் லகரம் திரியாது நின்றது. விதிர்ப்ப முதலிய செயவெனெச் சங்கள் காரணப்பொருளனவாதலால் இறந்த காலத்துக்குரி யன. கறவை - கற - பகுதி, வ் சந்தி, ஐ, வினைமுதற் பொருண்மை விகுதி. விருந்து - பண்பாகுபெயர்; விருந்து புதுமை. நன்றூட்டலாவது - உபசரித்துண்பித்தல்.

௬௨. பழியின்மை மக்களாற் காண்க வொருவன்
*கெழியின்மை கேட்டா லறிக பொருளின்
நிகழ்ச்சியா னாக்க மறிக - புகழ்ச்சியாற்
போற்றாதார் போற்றப் படும்.

(இ-ள்.) பழி இன்மை - ஒருவன் தான் பழிக்கப் படுத லில்லாமையை, மக்களால் காண்க - தன் மக்கட்பேற்றாற் கண்டுகொள்க; ஒருவன் கெழி இன்மை - ஒருவன் தனக்கு நட்புரிமையில்லாமையை, கேட்டால் அறிக - தனக்குச் செல்வம் கெடுதலாற் கண்டுகொள்க; பொருளின் நிகழ்ச்சியால் -

* கெழுவின்மை - எனவும் பாடம்.

பொருள் வரவினால், ஆக்கம் அறிக - ஒருவன் தனது வளர்ச்சியைக்கண்டுகொள்க ; புகழ்ச்சியால்-தான் பலராலும் புகழப்படும் புகழ்ச்சியினால், போற்றாதார் - பகைவராலும், போற்றப்படும் - ஒருவன் வணங்கப்படுவான்.

(க-து.) ஒருவன் தனது நன்மக்கட் பேற்றினாற் பழிக்கப் படுதலில்லாதவனாவான் ; நட்பியல்புடையவனானால் அவனுக்குப் பொருட்கேடு உண்டாகாது. ஒருவனுக்குச் செல்வம் மென்மேலும் பெருகிக்கொண்டிருக்குமானால், அதனால் அவனது முற்போக்குண்மை அறியப்படும் ; பலரும் புகழும்படி ஒருவன் ஒழுகுவானானால் அப்பெரும் புகழ்ச்சியாற் பகைவரும் அவனை வணங்குவர்.

கெழி-பண்புப் பெயர் ; கெழு - பகுதி, இ பகுதிப்பொருள் விகுதி யென்க. இன்மை யிரண்டும் குறிப்புத் தொழிற் பெயர். 'பொருளின் நிகழ்ச்சி' யென்றது, பொருளின் வரவையும், வந்து நல் வினைகளிற் செலவாகும் அறச் செலவையுங் குறிக்கும். ஆக்கம் - எல்லா வகையிலும் மென் மேலும் உயர்வதால் நல்லூழ் எனினுமாம். போற்றாதாரு மென எச்சவும்மை விரித்துக்கொள்க. பழி - நடுவுநிலை யின்மை ; முதனிலைத் தொழிலாகு பெயர்.

அ௩. கண்ணுள்ளுங் காண்புழிக் காதற்றாம் - பெண்ணின்
உருவின்றி மாண்ட வுளவாம் - ஒருவழி
நாட்டுள்ளு நல்ல பதியுள - பாட்டுள்ளும்
பாடெய்தும் பாட லுள.

(இ-ள்) கண்ணுள்ளும் - மக்களின் கண்களுள்ளும், காண்புழி - ஆராயுமிடத்து, காதற்று ஆம் - விரும்பப்படுவதான கண்ணும் உண்டு ; பெண்ணின் - பெண் மக்களுள், உரு இன்றி - அழகில்லையாயினும், மாண்ட - மாட்சிமைப்பட்ட இயல்புகள், உள ஆம் - உள்ளன வாகும் ; நாட்டுள்ளும் - ஒரு நாட்டினுள்ளும், ஒரு வழி - எங்கேனும் ஓரிடத்தில், நல்ல பதி உள - வளமான ஊர்களுள்ளன ; பாட்டுள்ளும் - பாட்டுகளுள்ளும், பாடு எய்தும் - பெருமை மிக்க, பாடல் உள - பாட்டுகளிருக்கின்றன.

(க-து.) கண்களுள்ளும் விரும்பப்படும் கண்களுள்ளன; அழகில்லாத பெண்களுள்ளும் மாட்சிமைப்பட்ட நல்லியல்புகளுள்ளன; நாட்டினுள்ளும் ஒரு பாங்கர் வளமான ஊர்களுள்ளன. பாட்டுகளுள்ளுஞ் சிறப்பான பாட்டுகளுள்ளன.

விரும்பப்படும் கண்களாவன கண்ணோட்டமுடைய கண்கள். உம்மைகள் எச்சம். காண்புழி - காண் - பகுதி, ப் - எழுத்துப் பேறு, உழி - நிகழ்கால வினை யெச்ச விகுதி. பெண்ணென்னு மிடத்தும் உம்மை வருவித்துக்கொள்க. ஒருவழி யென்பதைச் சிறுபான்மையெனக் கொண்டு ஏனையவற்றோடு கூட்டியுரைப்பினுமாம். நல்லவென்றது ஈண்டு வளத்தின் மேற்று. பாட்டுக்குப் பாடென்றது, சொற் பொருளிசைகளிலென்க. இன்றி - என்பதினீற்றில் இழிவு சிறப்பும்மைதொக்கது. பாடல் - தொழிலாகு பெயர்.

௲௪. திரியழற் காணிற் றொழுப விறகின்
எரியழற் காணி னிகழ்ப - வொருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டு முலகு.

(இ - ள்.) திரி அழல் காணின் - திரியினெரியுஞ் சுடரைக் கண்டால் அது சிறிதாயிருப்பினும், தொழுப - உலகத்தார் கைகூப்பி வணங்குவர்; விறகின் - விறகிலே, எரி அழல் காணின் - எரியுஞ் சுடரைக் கண்டால் அது பெரிதாயிருப்பினும், இகழ்ப - உலகத்தார் மதியாதிகழ்வர், ஒரு குடியில் - ஓர் குடும்பத்தில், கல்லாது - படியாமல், மூத்தானை - ஆண்டு முதிர்ந்தவனை, கைவிட்டு - மதியாமல் விடுத்து, கற்றான் - படித்தவனது, இளமை - இளமைப் பருவத்தையே, உலகு பாராட்டும் - உலகத்தார் பாராட்டுவர்.

(க-து.) திரியிலெரியுஞ் சுடரைக் கண்டால் அது சிறிதாயிருப்பினும் உலகத்தார் தொழுவர்; விறகிலெரியுஞ் சுடரை அது பெரிதாயிருப்பினுந் தொழாது இகழ்வர்; ஒரு குடும்பத்திலேயே படியாதவன் மூத்தவனாயினும் மதியார்; படித்தவன் இளையவனாயினும் மதித்துப் பாராட்டுவர்.

திரி - தொழிலடியாகப் பிறந்த பெயர்; செயப்படு பொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது; திரிக்கப்பட்ட

தென்பது பொருள். கைவிட்டுப் பாராட்டுமென்பதைக் கை விடும் பாராட்டுமென இரண்டாகப் பிரித்துக்கொள்க, நான் மணிக்கடிகையானமையின். ஒரு பொருளின் உருவத்தைப் பாராமல் மற்று அதன் இயல்பைக்கண்டே மதித்தல் வேண்டு மென்பது இப்பாட்டின் கருத்து. உலகு - ஆகு பெயர்.

௬௫. கைத்துடையான் காமுற்ற துண்டாகும் வித்தின்
முளைக்குழா நீருண்டே லுண்டாந் திருக்குழாம்
ஒண்செய்யாள் பார்த்துறி னுண்டாகு மற்றவள்
துன்புறுவா ளாகிற் கெடும்.

(இ-ள்.) கைத்து உடையான் - கைப்பொருள் உள்ளவன், காமுற்றது - விரும்பிய பொருள், உண்டாகும், - கிடைக்கும்; நீர் உண்டேல் - நீர்ப்பாய்ச்சலுண்டானல், வித்தின் முளைக்குழாம் - விதைகளின் முளைக்கூட்டம், உண்டாகும் - தோன்றும்; ஒண் செய்யாள் - அழகிய திருமகள், பார்த்துறின் - அருள் செய்யின், திருக்குழாம் உண்டாகும் - பொருட்டிரள் பெருகும்; அவள் - அத்திருமகள், துன்புறுவாளாகின் - அருவருப்பாளானல், கெடும் - உள்ள செல்வமும் அழியும்.

(க-து.) செல்வமுடையானுக்கு விரும்பிய பொருள் கிடைக்கும்; நீருண்டானல் விதைகள் முளை கிளம்பும்; திருமகள் கூடினற் செல்வம் பெருகும்; அவள் நீங்கினற் செல்வம் அழியும்.

கைத்து - முதன்மைபற்றிச் செல்வத்தின் மேற்று. காமுற்றது - காமுறு - பகுதி, அ - சாரியை, து - ஒன்றன் படர்க்கை விகுதி, பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலம் காட்டிய வினைப்பெயர். செய்யாள் - செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். செம்மை - பகுதி, ஆள் என்னும் விகுதிப் புணர்ச்சியில் 'மை' விகுதிகெட்டு, மகரம் யகரமாகி, அது தனிக் குறின் முன்னொற்றுதலால் இரட்டி முடிந்தது; பொருள்: நடுவு நிலைமையுடையாள் என்பது. வித்தின் முளை - ஆறன்றற்கிழமை. பார்த்துறினென்றது உடையானது நல்லியல்பின் பொருட்டெனவும், துன்புறுவாளென்பது அவன்றன் றீமைக்கெனவுங் கொள்க. மற்று - வினைமாற்று.

௬௬. ஊனுண் டுழுவை நிறம்பெறூஉ நீர்நிலத்துப்
புல்லினு னின்புறூஉங் காலேயம் - நெல்லின்
அரிசியா னின்புறூஉங் கீழெல்லாந் தத்தம்
வரிசையா னின்புறூஉ மேல்.

(இ-ள்.) ஊன் உண்டு - ஊனுணவை யுட்கொண்டு. உழுவை - புலி, நிறம்பெறூஉம் - மேனி யமையும்; நீர் நிலத்து - ஈரம்பொருந்திய நிலத்திலுள்ள, புல்லினுன் - புல் லினைமேய்ந்து, காலேயம் - ஆனிரைகள், இன்புறூஉம் - இன் புறும்; நெல்லின் அரிசியான் - நெல்லரிசிச் சோற்றினுல். கீழ் எல்லாம் - கீழ்மக்களெல்லாரும். இன்புறூஉம் - இன்புறு வர்; மேல் - மேன்மக்கள், தத்தம் - தங்கள் தங்கள் தகுதிக் கேற்ற, வரிசையான் - மதிப்புச்செயல்களால், இன்புறூஉம் - இன்புறுவர்.

(க-து.) புலி ஊன் உண்டு இன்புறும்; ஆன் புல்லுண்டு இன்புறும்; கீழோர் சோறுண்டு இன்புறுவர்; மேலோர் மதிப் புணர்ந்து இன்புறுவர்.

'நிறம்பெறூஉ' மென்னுங் குறிப்புக் கீழோர் விலங்கோ டொத்து உடம்பையே வளர்ப்பரென்பதுணர்த்தும்; வாயு ணர்வின் மாக்கள் என்றூர் வள்ளுவரும். அரிசி, கீழ், மேல் ஆகுபெயர்கள். அளபெடைகள் - இன்னிசை நிறை விப்பன.

௬௭. பின்னவாம் பின்னதிர்க்குஞ் செய்வினை-யென்பெறினும்
முன்னவா முன்னறிந்தார்கட் - கென்னும்
அவாவா மடைந்தார்கட் குள்ளந் - தவாவாம்
அவாவிலார் செய்யும் வினை.

(இ-ள்.) பின் - தொடங்கிய பின்பு, அதிர்க்கும் - நடுங் கச்செய்யும். செய்வினை - செய்தொழில்கள், பின்ன ஆம் - முன் ஆராயாதார்க்குப் பின்றோன்று வனவாம்; என் பெறி னும் - எப்பயனைப் பெறுவதானுலும், முன்னம் - தொடங்கு தற்கு முன்னமேயே, அறிந்தார்கட்கு - பின்வருவனவற்றை ஆராய்வார்க்கு, முன்ன ஆம் - அவை முன்தோன்றுவனவாம்; அடைந்தார்க்கு - ஒருபொருளை விரும்பி அடைந்தவர்கட்கு,

உள்ளம் - அவர்கள் உள்ளம், என்னும் - எப்படியாயினும், அவாஆம் - மென்மேலும் அவாவுடையதாகும்; அவாஇலார் - எப்பொருளினும் பற்றில்லாத பெரியார்கள், செய்யும்வினை - செய்யும் அறச்செயல்கள், தவாஆம் - கெடாவாம்.

(க-து.) ஒரு செயலைச் செய்யத்தொடங்குமுன் ஆராயாதவர்களுக்கு அதன் துன்பங்கள் தொடங்கியபின் தெரியும்; ஆராய்கின்றவர்களுக்கு அவை தொடங்குமுன்னமேயே தெரியும்; ஒரு பொருளை விரும்பி அடைந்தவர்கட்கு அதன்கண் எப்படியாயினும் பற்றுண்டாகும்; எப்பொருளினும் பற்றிலாதவர் செய்யுஞ் செயல்கள் ஒருபோதுங் கெடமாட்டா.

எனவே பற்றுள்ளவர்கள் செய்யும் அறச்செயல்கள் பயன்படாவென்பதாயிற்று. பின்ன, முன்ன வென்பன குறிப்புவினை முற்றுக்கள். அவாவா மென்பதில் ஆம் செய்யுமென்னுமுற்று; ஏனைய அசைகள். 'என்னும்' என்பது எப்படியாயினுமென்றற்கு; 'போமினென வென்னுமுரையி யான்' (சுரமஞ்சரியா, உ0) என்றார் சிந்தாமணியினும். தவா-பலவின் படர்க்கை எதிர்மறை வினைமுற்று; தவ் + ஆ. உகரங் கெட்டது சந்தி. அவா - முதனிலைத் தொழிற்பெயர்.

சஅ. கைத்தில்லார் நல்லவர் *கைத்துண்டாய்க் காப்பாரின்
வைத்தாரி னல்லர் வறியவர் - பைத்தெழுந்து
வைதாரி னல்லர் பொறுப்பவர் - செய்தாரின்
நல்லர் சிதையா தவர்.

(இ-ள்.) கைத்து உண்டாய் - செல்வம் உள்ளவராய், காப்பாரின் - அச்செல்வத்தை நுகராமற் சேர்த்துப் பாதுகாப்பவரைவிட. கைத்து இல்லார் - அச்செல்வமில்லாத மாந்தர், நல்லவர் - மிகவும் நல்லவரேயாவர்; வைத்தாரின் - அப்பொருளை வைத்திழப்பாரைவிட. வறியவர் நல்லர் - வறுமையுடையவர்கள் நல்லராவர்; பைத்து எழுந்து - சினந்தெழுந்து. வைதாரின் - பிறரை வைதவர்களைவிட. பொறுப்பவர் - அவ்வைதலுரையைப் பொறுப்பவர்கள், நல்லர் - மிகவும் நல்லராவர்; செய்தாரின் - நன்மை செய்தவர்களைவிட.

---

* கைத்திழந்த மாக்களின் எனவும் பாடம்.

சிதையாதவர் - அந்நன்மையை மறவாதவர்கள், நல்லர் - மிகவும் நல்லராவார்கள்.

(க-து.) செல்வமிருந்தும் பயனடையாதவர்களைவிட அஃதில்லாதவர்கள் நல்லவர்; செல்வத்தைச் சேர்த்துவைத்து இழப்பாரினும் வறியவர் மிக நல்லவர்; சினந்தெழுந்து வைவாரினும் அதனைப் பொறுப்பவர் மிகவும் நல்லவர்; ஒரு நன்றிசெய்தாரினும் அச்செய்ந்நன்றியை மறவாதவர் மிக நல்லர்.

இன்னென்னும் ஐந்தனுருபுகள் எல்லைப்பொருளன. பைத்தல் சினத்தல். செல்வத்தைத் தேடுவதாலும் பாதுகாப்பதாலுமான உழைப்புங்கவலையு மில்லாமையின், கைத்திலாரும் வறியவரும் நல்லராயினர். சினத்தலாலும் வைதலாலுமான தீமைகள் நிகழாமையானும் பொறுமைப்பழக்கம் விஞ்சுதலானும் பொறுப்பவரும், நன்று செய்தாரினும் அந்நன்றியை மறவாதவர்க்கு அவ்வுணர்ச்சி என்றும் உளத்திடை நிகழ்ந்து எண்ணத்தைத் தூய்மைப் படுத்தலின் மறவாதவரும் நல்லராயினரென்க. பை - பாம்பின்படம்; பைத்தல் - படம் விரித்தல்; கோபித்தல். பாம்பு கோபத்தாற் படத்தைவிரிக்கும் என்க.

௬௯. மகனுரைக்குந் தந்தை நலத்தை யொருவன்
முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை - அகனீர்ப்
*புலத்தியல்பு புக்கா னுரைக்கும் - நிலத்தியல்பு
வானம் உரைத்து விடும்.

(இ-ள்.) மகன் - புதல்வன், தந்தை நலத்தை - தன் தந்தையின் நன்மையை, உரைக்கும் - தனது நல்லியல்பினாற் பிறர்க்கறிவிப்பான்; ஒருவன் முகம் - ஒருவனது முகம், உள் நின்ற வேட்கை - நெஞ்சினுள் உள்ள விருப்பத்தை உரைக்கும் - பிறர்க்குத் தனது குறிப்பாலறிவிக்கும்; அகல் - அகன்ற, நீர்ப்புலத்து இயல்பு - நீரால் விளையும் வயலின் இயல்பை, புக்கான் உரைக்கும் - அந்நிலத்துக் குடியான் அறிவிப்பான்; நிலத்து இயல்பு - உலகத்தாரியல்பை, வானம் உரைத்து விடும் - மழையின் நிலை அறிவித்துவிடும்.

---

* பிலத்தியல்பு - எனவும் பாடம்.

(க-து.) தந்தையின் நன்மையைப் புதல்வன் தனது இயல்பினால் அறிவிப்பான்; ஒருவனது நெஞ்சிலுள்ள விருப்பத்தை அவன் முகக் குறிப்பே அறிவித்துவிடும்; வயலின் தன்மையை நிலக்கிழவன் அறிவித்து விடுவான்; நிலத்து மக்களினியல்பை அந்நிலத்துப் பெய்யு மழையின் நிலை அறிவித்துவிடும்.

முகன் - போலி. நிலக்கிழவன் அதன்கண் நாடோறுஞ் சென்று பார்ப்பவனாதலால் 'புக்கான்' எனப்பட்டான். நிலத்தியல்பு - நிலத்து மக்களினியல்பு. முகனுரைக்கும், வானமுரைத்துவிடு மென்பன 'கேட்குந போலவு' மென்பதனான் முடிகக. 'பிலத்தியல்பு' என்ற பாடத்துக்குப் பெரிய ஆழமுள்ள மடுவென்க. நிலம், வானம் - ஆகு பெயர்கள். நிலத்தியல்பு - மக்கள் நல்லோர், தீயோர் என்பது. மகனுரைக்குந் தந்தை நலத்தை - பழியின்மை மக்களாற் காண்க என்பர் கீழும். நல்லோர் பொருட்டே மழை பெய்யுமாதலின் வானமுரைத்து விடும் எனப்பட்டது.

எஎ. பதிநன்று பல்லா ருறையி னொருவன்
மதிநன்று மாசறக் கற்பின் - நுதிமருப்பின்
ஏற்றான்வீ றெய்து மினநிரை தான்கொடுக்குஞ்
சோற்றான்வீ றெய்துங் குடி.

(இ-ள்.) பல்லார் உறையின் - பலரும் நிறைந்து ஒத்து வாழ்வார்களானால், பதி நன்று - ஊர் நன்றாகும்; மாசு அறக் கற்பின் - குற்றமறும்படி கற்பானாயின், ஒருவன் மதிநன்று - ஒருவனது அறிவு தெளிவு பெறும்; இன நிரை - ஆனிரைகள், நுதி மருப்பின் - கூரிய கொம்புகளையுடைய, ஏற்றான் - எருதுகளால், வீறு எய்தும் - சிறப்படையும்; தான் கொடுக்கும் - தான் ஏழைகட்குக் கொடுக்கும், சோற்றான் - உணவினால், குடி - தான் பிறந்தகுடி, வீறு எய்தும் - பெருமையடையும்.

(க-து.) பலரும் நிறைந்து ஒத்து உறைவாரானால் ஊர் நன்றாம்; ஐயந்திரிபறக் கற்பானானால், ஒருவன் மதி நன்றாகும்; ஆனிரைகள் கூர்ங்கொம்புகளுடைய எருதுகள் உடனிருத்தலால் சிறப்படையும்; ஏழைகட்கு உணவளிப்பதனால் ஒருவனது குடி மேலோங்கும்.

பல்லாரென்றதை ஈண்டு முயற்சியுமொற்றுமையு முடைய நன்மக்கள் பல்லாரென்று கொள்க; அவரல்லாராயின் ஊர் நன்றாகாது சோம்பும். கல்விகற்றற்குக் குற்றமாவன ஐயந்திரிபுகள்: ஏற்றுக்கு நுதிமருப்பென்று அடைவந்தமையின் ஏற்றான் வீறெய்துமென்றவிடத்து வீறு வெற்றியெனக் கொள்க. பின்வந்த வீறு சிறப்பெனப் பொருள்படும். சோற்றோடு உடையெனவுங் கொள்க.

எ௧. ஊர்ந்தான் வகைய கலினமா - நேர்ந்தொருவன்
ஆற்றல் வகைய வறஞ்செய்கை தொட்ட
குளத்தனைய தூம்பி னகலங்க டத்தம்
வளத்தனைய வாழ்வார் வழக்கு.

(இ-ள்.) கலின மா - கடிவாளம் பூண்ட குதிரைகள், ஊர்ந்தான் வகைய - அவற்றை ஏறிச் செலுத்துவானது வகைக்கொத்தன; அறம் செய்கை - அறச்செயல்கள், நேர்ந்த ஒருவன் - இசைந்த ஒருவனது, ஆற்றல் வகையை - ஆற்றலைப் பொறுத்தன; தூம்பின் அகலங்கள் - நீர்க்காலின் பரப்புக்கள், தொட்ட - தோண்டப்பட்ட, குளத்து அனைய - குளங்களின் அளவின; வாழ்வார் வழக்கு - இல்வாழ்வாருடைய வாழ்க்கைச் செய்கைகள், தத்தம் வளத்து அனைய-அவரவரது வருவாய்ச் செழுமையை யொத்தன.

(க-து.) குதிரைகள் சவாரி செய்வானது வகைக்கொத்தன; ஒருவன் அறச்செய்கைகள் அவன்றன் ஆற்றலைப் பொறுத்தன; நீர்க்காலின் அகலங்கள் குளத்தின் அளவின; இல்வாழ்வார் வாழ்க்கைகள் அவர்கள் வருவாய்ச் செழிப்பை யொத்திருக்கும்.

வகைய - தொழிலடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. நேர்ந்த வென்னும் பெயரெச்சம் ஈறுதொக்கு நேர்ந்தென நின்றது. அனை - அத்தனை யென்பதன் மரூஉவென்ப. குளங்களின் அளவுக்கேற்பவே நீர்செல்லும் நீர்க்கால்கள் அவற்றிற் கமைக்கப்பட்டிருக்குமென்க. தூம்பு - நீர்வெளியே இழியும் நீர்க்கால்; மதகு, கலங்கல் முதலியனவுமாம். கலினம் - கடிவாளம். தொடுதல் - தோண்டுதல். தூம்பு - மட்டுவா.

எஉ. ஊழியும் யாண்டெண்ணி யாத்தன யாமமும்
நாழிகை யானே நடந்தன - *தாழீயாத்
†தெற்றென்றார் கண்ணே தெளிந்தனர் வெட்கென்றார்
வெஞ்சொலா லின்புறு வார்.

(இ-ள்.) ஊழியும் - ஊழிக்காலமும், யாண்டு எண்ணி - ஆண்டுகளாலெண்ணி, யாத்தன - அளவுசெய்யப்பட்டன; யாமமும் - யாமக்காலமும், நாழிகையானே - நாழிகைகளானே, நடந்தன - அளவுசெய்யப்பட்டுக் கழிந்தன; தாழீயா - காலந்தாழாமல், தெற்றென்றார் கண்ணே - தெளிந்தவரிடத்தில், தெளிந்தனர் - அறிவுடையாரெல்லாம் ஐயந் தெளிந்தனர்; வெட்கென்றார் - அறிவிலாதார், வெம் சொலால் - பிறரைக் கொடுமைகூறும் வெவ்விய சொற்களாலேயே, இன்புறுவார் - சொல்லிச்சொல்லி இன்புறுவார்கள்.

(க-து.) ஊழிகள் யாண்டுகளாற் கணக்கெண்ணி அளவு செய்யப்பட்டுக் கழிந்தன; யாமமும் நாழிகையால் வரையறுக்கப்பட்டுக் கழிந்தன; அறிஞர் தெளிந்தார்மாட்டுக் காலந்தாழாமல் ஐயந்தெளிந்தனர்; அறியாதார் பிறரை வெஞ் சொற் கூறி மகிழ்ந்தனர்.

ஊழிகளும் யாமங்களுமாகக் கணக்குச் செய்து காலம் விரைந்து கழிதலால் அறிஞர்கள் காலந்தாழாமல் தெளிந் தாரை நண்ணி ஐயந்தீர்ந்தனர்; காலத்தினருமை யறியாதார் பிறரை நிந்தை கூறி வீண்காலங் கழிப்பரென்பது அறிதற் குரிய பொருள். வடுச்சொல் நயமிலார் வாய்த்தோன்றும் - என்பர் முன்னும். தாழீயா தென்பது தாழாதென்க. ஈண்டது ஈறுதொகுத்தலாய் எச்சப் பொருள் பயந்து நின்றது; 'நெடுநக ரரசு துயிலீயாது' (உஉ) என்னும் பதிற்றுப்பத்திலும் உரை யாசிரியர், 'துயிலீயாதென்பது துயிலாதென்னும் வினைத் திரிசொல்; துயிலாமலெனத் திரிக்க' வென்றுரைத்தமையுங் காண்க. ஆண்டு - யாண்டு என்பதன் மரூஉ. வெளிறு - அறிவின்மை. வெட்கு - வெளிறு.

எந. கற்றான் றளரி னெழுந்திருக்குங் கல்லாத
பேதையான் வீழ்வானேற் கான்முரியு மெல்லாம்

*தாழ்வியா; †வெற்றென்றார் - எனவும் பாடங்கள்.

ஒருமைக்கண் தான்செய்த கருவி தெரிவெண்ணின்
*பொய்யாவித் தாகி விடும்.

(இ-ள்.) கற்றூன் தளரின் - கல்வியறிவுடையவன் ஒன்றில் இழுக்கலுறுவனாயின், எழுந்திருக்கும் - அவன் எப்படியானும் உய்திபெறுவான்; கல்லாத பேதையான் - படியாத அறிவிலான். வீழ்வானேல் - இடையிற்றளருவானானால், கால் மூரியும்-முயற்சி கெட்டு அழிவான்; ஒருமை - ஒரு பிறப்பில், தான் செய்த எல்லாம் - தான் செய்தன வெல்லாம், கருவி - மறுபிறப்பி னுகர்ச்சிக்கு ஏதுக்களாம்; எண்ணின் - ஆராயுமிடத்து, தெரிவு - மெய்யுணர்வு, பொய்யாவித்து ஆகிவிடும் - வீடு பேற்றுக்குத் தவறாத ஏதுவாகும்.

(க-து.) கல்வி யறிவுடையவன் தளர்வானேல் எப்படியானும் உய்வான்; கல்லாத பேதை தளர்வானேல் மீள உய்வறியாது வீழ்வான்; எவர்க்கும் ஒரு பிறப்பின் செய்கைகள் மறுபிறப்பின் நுகர்ச்சிக்கு ஏதுக்களாம்; மெய்யுணர்வு வீடு பேற்றுக்குத் தவறாத ஏதுவாகும்.

கல்வியறிவினாற் கற்றூன் மீள எழுவான்; அஃதில்லாமையாற் பேதை வீழ்வானென்பது கொள்க. காலென்றது ஈண்டு வீழாமைக்குரிய முயற்சி; வீழ்வானென்னும் உருவக வினைக் கேற்பக் காலென்றும் மூரியுமென்று முயற்சி கெடுதல் கூறப்பட்டதென்க. செய்த வெல்லாமென்று கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க. செய்த - பலவின் படர்க்கை இறந்த காலவினையாலணையும் பெயர். ஆகிவிடும் என்பன துணிவுப் பொருட்டு. பொய்யாவித்து - எசசத் தொடராகவும், பண்புத் தொகையாகவும் பொருள் கொள்ளலாம்.

எச. தேவ ரனையர் புலவருந் - தேவர்
தமரனைய ரோரூ ருறைவார் - தமருள்ளும்
பெற்றன்னர் பேணி வழிபடுவார் - கற்றன்னர்
கற்றூரைக் காத லவர்.

(இ-ள்.) புலவரும் - கல்வியறிவுடைய புலவர்கள், தேவர் அனையர் - தேவருக்கு ஒப்பாவார்கள்; ஓர் ஊர் உறைவார் -

* வீயாவித்தாகி - எனவும் பாடம்.

அப்புலவர்கள் உள்ள ஊரில் வாழ்பவர்கள். தேவர் தமர் அனையர் - அத்தேவர்களின் உறவினருக்கு ஒப்பாவார்; தமருள்ளும் - அவ்வாறுறைந்து உறவானோருள்ளும், பேணி வழிபடுவார்-அப்புலவரை விரும்பி வழிபட்டவர்கள், பெற்றன்னர் - அவர் தம் அருள் பெற்றாரை யொப்பர்; கற்றாரைக் காதலவர் - புலவரைக் காதலித் தொழுகுவார், கற்றன்னர் - அப்புலவரை யொப்பக் கற்றவரேயாவர்.

(க-து.) புலவர்கள் தேவரையொப்பர்; அவரூரிலுறைவார் அவருறவினரை யொப்பர்; அவருள்ளும் பேணிவழிபடுவார் அவரருள் பெற்றாரை யொப்பர்; காதலித் தொழுகுவார் கற்றாரையேயொப்பர்.

புலவர் பண்படியாகப் பிறந்த பெயர்; தமர், பொருளடியாகப் பிறந்தபெயர். பேணிவழிபடுவார் பொதுவான மாந்தரெனவுங் காதலவர் சிறப்பான மாணாக்கரெனவுங் கொள்க. பெற்றன்னர் கற்றன்னர் என்பன பெற்றாலன்னர் கற்றாலன்னரெனவும் விரியும். கற்றன்னர் கற்றாரைக்காதலவர் (௫௬) முன்னும் வந்தது. காதலவர் - ஈறு திரிந்த குறிப்பு வினைப் பெயர். தமருள்ளும் - உம்மை உயர்வு சிறப்பு; எழனுருபு பிரித்தற் பொருளது.

௭௫. தூர்ந்தொழியும் பொய்பிறந்த போழ்தே மருத்துவன்
சொல்கென்ற போழ்தே பிணியுரைக்கும் - நல்லார்
விடுகென்ற போழ்தே விடுக வுரியான்
தருகெனிற் றாயம் வகுத்து.

(இ-ள்.) பொய் பிறந்த போழ்தே - நட்பினர்க்குட் பொய் யுண்டான போதே, தூர்ந்து ஒழியும் - நட்புக்கெடும்; மருத்துவன் - மருந்துகொடுப்போன், சொல்க என்ற போழ்தே - சொல் என்று சொன்னபோதே, பிணி உரைக்கும் - நோயாளன் பிணியை யுரைப்பான்; நல்லார் - பெரியார், விடுக என்றபோழ்தே - ஒரு செயலை விடுக வென்றபொழுதே, விடுக - அச்செயலை விட்டிடுக; உரியான் - ஒரு பொருட்குரியான், தருக எனின் - கொடுவென்றால், தாயம் - அவன் பாகத்தை, வகுத்து (விடுக) - பங்கிட்டுக் கொடுத்து விடுக.

(க-து) பொய் பிறந்த போதே நட்புக்கெடும்; மருத்துவன் சொல்லென்றபோதே பிணியாளன் நோய் சொல்வான்; பெரியார் விடுகென்ற பொழுதே அற விட்டொழிக; உரியான் தருகென்றபொழுதே அவன் பங்கை வகுத்து விடுக.

'தூர்ந் தொழியு' மென்றது, உருவகவினை. ஏகாரம், தேற்றம்; மருத்துவன் சொல் லென்றால் மட்டும் பிணியாளன் உண்மையைச் சொல்வானென்று கருத்துக் கொள்க. பிணியை அஃதுடையா னென்றுரைப்பினுமாம். வகுத் தென்பதற்கும் விடுக வென்பது கூட்டுக. அதற்குரியான் தாவெனில் தாயம் வகுத்தென்பதும் பாடம். சொல்லென்ற முதலிய வற்றில் அகரம் தொகுத்தல். தாயம் பங்கிட்டுத் தாராணுயின் வழக்குளதாகும், அதனாற் பொருள் குறைந்து போமாதலால் 'விடுக' என்றார். மருத்துவன் பொருளடியாகப் பிறந்த பெயர்; மருந்து + வ் + அன், வ் - பெயரிடைநிலை மருந்து - பொருள்: மருந்திழைத்துக் கூட்டிக்கொடுப்போன்: போழ்தே - ஏ, தேற்றம்.

எஅ. நாக்கி னறிப வினியதை - மூக்கினன்
மோந்தறிப வெல்லா மலர்களு நோக்குள்ளுங்
கண்ணினாற் காண்ப வணியவற்றைத் தொக்கிருந்
தெண்ணினா னெண்ணப் படும்.

(இ-ள்) இனியதை - சுவைக்கினியதை, நாக்கின் அறிப - நாவாற் சுவைத் தறிவார்கள்; எல்லா மலர்களும் - எல்லா மலர்களையும், மூக்கினன் - மூக்கினால், மோந்து அறிப - யாவரும் மோந்தறிவார்கள்; அணியவற்றை - காட்சிக்கு அழகான பொருள்களை, நோக்கு உள்ளும் - பார்வையுண்டென்று கருதப்படும், கண்ணினல் காண்ப - கண்ணாற் பார்ப்பார்கள்; தொக்கு இருந்து - அறிஞர்கள் கூடியிருந்து, எண்ணினல் - அறிவினல், எண்ணப்படும் - உணர்ச்சிகள் ஆராயப்படும்.

(க-து) சுவைக்கினியதை யாவரும் நாவினாற் சுவைத்தறிப; மலர் மணங்களை மூக்கினால் மோந்தறிப; அழகிய பொருள்களைக் கண்ணினாற் காண்ப; உணர்வருங் கருத்துகளை அறிஞர் ஒன்று கூடியிருந்து அறிவானாராய்ப.

5

காட்சிப் பொருள்களைக் கண்முதலிய ஐம்பொறிகளாலும், கருத்துப் பொருள்களை அறிவின் ஆராய்ச்சியாலும் மக்கள் தெரிந்து கொள்வர் என்பது கருத்து. இன்னென்னும் ஐந்தனுருபும், ஆனென்னும் மூன்றனுருபுகளுங் கருவிப்பொருளன. நாப்பயன் முதலிய மூன்றுங் கூறினமையின் ஏனை மெய்ப்பயன் செவிப்பயன்களையுந் தழுவிக்கொள்க. தொக்கிருந்தென்பதன் உண்மை அறியற்பாற்று. எண்ணப்படுமென்பதற்கு உணர்வுகள் அவாய் நிலையான் வருவிக்கப்படும். தொக்கிருந்து = தொகு + இரு + த் + த் + உ; இரு, பகுதிப் பொருள் விகுதி.

எஎ. சாவாத வில்லை பிறந்த வுயிரெல்லாந்
தாவாத வில்லை வலிகளும்—* மூவா
திளமை யிசைந்தாரு மில்லை - வளமையிற்
கேடின்றிச் சென்றாரு மில்.

(இ-ள்.) பிறந்த உயிரெல்லாம் - பிறந்த உயிர்களெல்லாவற்றுள்ளும், சாவாத இல்லை - இறவாதன இல்லை; வலிகளும் - வலிமைகளும், தாவாத இல்லை - கெடாதன இல்லை; மூவாது - எஞ்ஞான்றும் மூத்திடாமல், இளமை - இளமையை, இசைந்தாரும் இல்லை - நிலையாய்ப் பொருந்தினாரும் இல்லை, வளமையில் - செல்வத்தில், கேடின்றி - குறைதலில்லாமல், சென்றாரும் - ஓங்கியபடி எஞ்ஞான்றுஞ்செல்வரானவரும், இல் - இல்லை.

(க-து.) உலகத்தில் இறவாத உயிர்களும் இல்லை; கெடாத வலிமைகளுமில்லை; மூவாத இளமைகளுமில்லை; குறையாத செல்வங்களு மில்லை.

எனவே உள்ளபோதே அறஞ்செய்க வென்பதாம். சாவாத, தாவாத வென்பன பலவின் படர்க்கை வினையாலணையும் பெயர்கள். தா-கேடு. உயிரெல்லாம், வலிகளுமென்றவற்றிற்கு ஏழாவது விரித்துக் கொள்க. வலிகளென்பதை அறிவுவலி முதலான எல்லாவற்றுக்கும் உரைக்க. கேடென்றது, குன்றுதல். மூவாது = மூ + வ் + ஆ + த் + உ; த் - எழுத்துப்பேறு; எதிர்மறைவினையெச்சம்; இது

* மூவா விளமை - எனவும் பாடம்.

குச்சாரியை பெற்று 'மூக்காது' எனவும் வரும். கேடு-முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

௭௨. சொல்லா னறிப வொருவனை - மெல்லென்ற
நீரா னறிப மடுவினை - யார்கண்ணும்
ஒப்புரவி னானறிப சான்றாண்மை - மெய்க்கண்
மகிழா னறிப நறா.

(இ-ள்.) ஒருவனை - ஒருவனுடைய நன்மை தீமைக..., சொல்லான் - அவன் கூறுஞ் சொற்களாலேயே, அறிப - அறிஞர்கள் அறிந்து கொள்வார்கள்; மடுவினை - மடுவின் மட்பொருளினிமையை, மெல்லென்ற - மென்மையான, நீரான் அறிப - நீரினாலறிவார்கள்; சான்றாண்மை - ஒருவனது பெருந்தகைமையை, யார்கண்ணும் - யாரிடத்திலுங் காட்டும், ஒப்புரவின் - ஒருபடியான நன்மைத்தன்மையினால், அறிப - அறிவார்கள், நறா - கட்குடியை, மெய்க்கண் - (குடித்தானது) உடம்பின்கண், மகிழான் அறிப - களிப்புக் குறிகளா னறிவார்கள்.

(க-து.) ஒருவனை அறிஞர்கள் அவன் சொல்லினாலேயே நிலையறிப; மடுவின் மண்ணினிமையை அதன்தெளி நீரினா னறிப; பெருந்தன்மையை யார்மாட்டும் ஒப்பநடக்கும் நடுநிலைமையா னறிப; கட்குடியை மெய்க்களிப்பா னறிப.

மெல்லென்ற - இடைச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம்; அஃதீண்டுப்பண்புப் பொருண்மை குறித்தது; தெளிநீரென்பது பொருள்; தெளிநீரல்லாதது மெல்லென்னாது தடித்துக் குழம்பாயிருக்குமாதலினென்பது. மகிழ்-காரணவாகுபெயர். நறா-நறாக்குடியை யுணர்த்திற்று. உம்மை - முற்று.

௭௩. நாவன்றோ நட் பறுக்குந் தேற்றமில் பேதை
விடுமன்றோ வீங்கப் பிணிப்பின் அவாஅப்
படுமன்றோ பன்னூல்* வலையிற் - கெடுமன்றோ
மாறு ணிறுக்குந் துணிபு.

* வலையினடுமன்றோ - எனவும் பாடம்.

(இ-ள்.) நா - பதறிப்பேசும் நாக்கு, நட்பு அறுக்கு மன்றே-நேசத்தைக் கெடுக்குமன்றே. வீங்கிப் பிணிப்பின்- வற்புறுத்துக் கட்டாயப்படுத்தினால், தேற்றம் இல்பேதை - தெளிவில்லாத அறிவிலி, விடுமன்றே - நற்செய்கையையுங் கைவிடுமன்றே ; பல்நூல்வலையின் - பலஅறிவு நூல்களென்னும் வலையினால், அவா - அதன்கண் அகப்பட்டநன்மாணாக்கரது தீய அவா, படுமன்றே - கெட்டொழியுமன்றே ; மாறுள் பகைமைக்கண், நிறுக்குந்துணிவு - ஒருவன் வைக்குந் துணி வெண்ணத்தால், கெடுமன்றே - அவன் விரைவிற் கெட்டுவிடுவானல்லனோ ?

(க-து.) பதறிய நாக்கினால் நட்புக்கெடும் ; கட்டாயப் படுத்தினால் தெளிவில்லாத பேதை மக்கள் நற்செய்கைகளைக் கைவிடுப; நூல்களைப் பயிறலால் மாணாக்கர்க்கு அவாக்கெடும் ; பகைமைக்கட் டுணிவு நிறுத்துதல் அங்ஙனம் நிறுத்துவானுக்கே கேடாம். வீங்கிப் பிணிப்பின், மிக்குக் கட்டாயப்படுத்தினால், மாணாக்கன் அறிவுநூல்வலையினகப்படுதலால், அவன் அவாக்கெடுமென்க. அளபெடை, செய்யுளிசை நிறைக்க வந்தது. அவா, மாறு - முதனிலைத் தொழிற்பெயர்கள்.

தேற்றமில் அன்றே - பேதை துன்புறுத்தி இறுகப் பிணிப்பின் கைப்பொருளைக் கைவிடுவான் ; (2) மிக்க நட்பினாற் கட்டினும் பேதை நட்பைவிடுவான் எனவும் பொருள்கள் கொள்ளலாம். அவா - வலையில் நன்மாணாக்கனது விருப்பம் பல நூல்வலையில் உட்படும் எனவும் பொருள் கொள்ளலாம். (2)ல் பிணிப்பினும் என உம்மை தொகுத்த லாகக் கொள்க.

அ௦. கொடுப்பி னசனங் கொடுக்க - விடுப்பி
னுயிரிடை யீட்டை விடுக்க வெடுப்பிற்
கிளையுட் கழிந்தா ரெடுக்க கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல்.

(இ-ள்.) கொடுப்பின் - ஒருவர்க்கு ஒன்று கொடுப்பதானால், அசனம் கொடுக்க - சோறுகொடுத்துண்பிக்க; விடுப்பின் - ஒன்றை விடுப்பதானால், உயிர் இடையீட்டை - உயிரைப் பற்றிய பற்றை, விடுக்க - விட்டுவிடுக ; எடுப்பின் - ஒருவனைத்

தாங்கி மேலுயர்த்துவதானால், கிளையுள் - தன்சுற்றத்தாருள், கழிந்தார் - வாழ்நலங்களற்று ஏழைகளாயுள்ளவர்களை, எடுக்க - தாங்கி மேலுயர்த்துக; கெடுப்பின் - ஒன்றைக் கெடுப்பதானால், வெகுளி - சினத்தை, கெடுத்துவிடல் - கெடுத்துவிடுக.

(க-து.) கொடுப்பதானால் ஏழைகட்கு உணவு கொடுக்க; விடுப்பதானாற் பற்றை விடுக்க; எடுப்பதானால் சுற்றத்தாருள் ஏழைகளை எடுக்க; கெடுப்பதானால் வெகுளியைக் கெடுக்க.

அசனம் வடசொல்; சோறு உணவுகொடுத்தல் உடம்பில் உயிரை நிலைப்பித்தலன்றிவேறு தீயவற்றிற்கு நேராய்ப் பயன் படுதலின்மையின், 'அசனங் கொடுக்க' வென்றார்; உயிரிடை யீடு-உயிர்க்கண் பொருந்தியகுற்றம்; அஃது பற்று. 'இடையீடு'- குற்றம். கெடுத்துவிடல் - அல்லீற்று வியங்கோள். கொடுப் பின் முதலாயின செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சங் கள். இடையீடு முதனிலை திரிந்த தொழிற்பெயர். வெகுளி- தொழிற் பெயர்.

அக. நலனு மிளமையு நல்குரவின் கீழ்ச்சாம்
குலனுங் குடிமையுங் கல்லாமைக் கீழ்ச்சாம்
வளமில் குளத்தின்கீழ் நெற்சாம் - பரமல்லாப்
பண்டத்தின் கீழ்ச்சாம் பகடு.

(இ-ள்.) நலனும் - அழகும், இளமையும் - இளமையியல் பும், நல்குரவின்கீழ் - வறுமைக்கண், சாம் - மங்கும்; குலனும் - குலத்துயர்வும், குடிமையும் - குலத்தொழுக்கமும், கல்லாமைக் கீழ் - கல்லாமைக்கண், சாம் - கெடும்; வளம் இல் - நீர் வருவா யில்லாத, குளத்தின் கீழ் - ஏரியின்கீழ் விளையும், நெல்சாம் - நெற்பயிர் சாவியாம்; பரமல்லா - சுமத்தலாற்றா, பண்டத்தின் கீழ் - சுமைப்பொருளின் கீழ்த்தாங்கும். பகடு சாம்-எருதுகள் சாகும்.

(க-து.) அழகும் இளமையும் வறுமையிற் கெடும்; குலத் துயர்வுங் குலத்தொழுக்கமுங் கல்லாமையிற் கெடும்; வருவா யற்ற ஏரியின்கீழ் விளையும் நெற்பயிர் சாவியாம்; சுமத்தலாற் றாத சுமையைத் தாங்கும் எருதுகள் சாகும்.

'குடிமை' உயர் குடிப்பிறந்தாரது ஒழுக்கத்தை யுணர்த் துதலை, குடிமை-குடிசெய்தற்றன்மை (மடியின்மை, அ.) யென் றும் குடிமை உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை (குடிமை) யென்றும் ஆசிரியர் **பரிமேலழகர்** திருக்குறளுரையி லுரைக்குமாற்றானறிக. வளம்-ஈண்டுவெருவாய். பரமல்லா-சுமக் கலாற்றாத வென்க; பரமல்லாப் பண்டம் - சுமக்குமளவிற்கு விஞ்சிய பண்டம். கீழ்-முதலிரண்டும் ஏழாம் வேற்றுமை இடப் பொருளன. சாகுமென்னுஞ் செய்யுமென் முற்று, ஈற்றயல் மெய்யொடுங் கெட்டுச் சாமென நின்றது. பண்டம் - சினை யாகுபெயர். பகடு - வண்டியிழுக்கும் எருது.

அஉ. நல்லார்க்குந் தம்மூரொன் றில்லை நன்னெறிச்
செல்வார்க்குந் தம்மூரொன் றில்லை—யல்லாக்
கடைகட்குந் தம்மூரொன் றில்லை தங்கைத்
துடையார்க்கு மெவ்வூரு மூர்.

(இ-ள்.) நல்லார்க்கும் - கல்வியறிவில் நல்லார்க்கும், தம் ஊர்என்று - தமக்குரிய ஊர்என்று, ஊரில்லை - ஒரூருமில்லை. எல்லாம் அவரூரேயாம்; நல் நெறி - தவநெறியில், செல்வார்க் கும் - ஒழுகும் அருந்தவத்தோர்க்கும், தம் ஊரென்று - தமக் குரிய ஊரென்று, ஊர்இல்லை - ஓர் ஊர் இல்லை; அல்லா - மேலோரல்லாத, கடைகட்கும்-கீழ்மக்களுக்கும். தம்மூரென்று- தமக்குரிய ஊரென்று, ஊர் இல்லை - ஒரூருமில்லை; தம் கைத்து - தமது கையில், உடையார்க்கும் - பொருளுடையவர்க் கும், எவ் ஊரும் ஊர் - எவ்வூருந் தம்மூரேயாம்.

(க-து.) கற்றார்க்கும் எவ்வூருந் தம்மூர்; தவத்தோர்க் கும் எவ்வூருந் தம்மூர்; கீழ்மக்கட்கும் எவ்வூருந் தம்மூர்; தம் கையிற் பொருளுடையார்க்கும் எவ்வூருந் தம்மூர்.

நல்லார், மிக்கவர்; ஆவது கல்விமிக்காரென்பது. ஊரில் லையென்றது, எவ்வூரும் அவர்க்குத் தம்மூராகப் பயன்படு மென்றது. கடை - பண்பாகுபெயர். கைத்து-கை + அத்து - அ கெட்டது. கையிலென ஏழாவது விரிக்க. கற்றோரை யும் தவத்தோரையும் எவரும்உபசரிப்பாராதலினாலும், பொரு ளுடையான் தனது பொருளால் எதையும் பெறவல்லானாதலி னாலும் இவர்கட்கு எவ்வூராயினும் தம்மூராயிற்று.

அரு. கல்லா வொருவர்க்குத் தம்வாயிற் சொற்கூற்றம்
மெல்லிலை வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்
அல்லவை செய்வார்க் கறங்கூற்றம் கூற்றமே
* இல்லத்துத் தீங்கொழுகு வாள்.

(இ-ள்.) கல்லா ஒருவர்க்கு - கல்வியறிவில்லாத ஒருவருக்கு, தம்வாயின் சொல் - தமது வாயிலிருந்துவருஞ்சொல்லே, கூற்றம் - கூற்றுவனாகும்; மெல் இலை - மெல்லிய இலைகளையுடைய, வாழைக்கு - வாழைமரத்துக்கு, தான் ஈன்றகாய் - தான் வெளிவிட்டகுலையே, கூற்றம் - கூற்றுவனாகும்; அல்லவை செய்வார்க்கு - தீயவை செய்யும் மக்கட்கு, அறம் கூற்றம் - அறக்கடவுளே கூற்றுவனும்; இல்லத்து - வீட்டிலிருந்துகொண்டு, தீங்கு ஒருவன் - கற்புக் கேடாக மறைவாயொழுகும் மனைவி, கூற்றமே - தன்னைக்கொண்ட கணவனுக்குக் கூற்றுவனே யாவாள்.

(க-து.) கல்வியறிவில்லாதவர்களுக்கு அவர்வாயிற் பிறக்குஞ் சொல்லே அவர்க்குக் கூற்றுவனும்; வாழைமரத்துக்கு அஃதீனுங் குலையே கூற்றுவனும்; தீயவை செய்வார்க்கு அறக்கடவுளே கூற்றுவனும்; இல்லத்திலிருந்து மறைவாய்க் கற்புக் கெடுப்பவள் கொண்டானுக்குக் கூற்றுவனே யாவாள்.

கல்லாப் பேதையர் பொய்குறளையே பேசுவராதலால் அவையே அவர்க்குக் குற்றமாகும். அல்லவை செய்தார்க் கறங் கூற்றமாமென்னு மிவ்வுண்மை, 'அல்லவை செய்தார்க் கறங் கூற்றமா மென்னும் பல்லவையோர் சொல்லும் பழுதன்றே' (வழக்குரைகாதை வெண்பா) என்று சிலப்பதிகாரத்திலும் ஆசிரியர் இளங்கோவடிகள் கூறினர். அறமென்னுந் தன்மையே கூற்றுவனாய் வந்து வருத்து மென்க. அன்றிக் கூற்றுவனுக்குத்தலைவனை அறக் கடவுளே கூற்றுவனாய் வந்து வருத்துமெனவுங்கூறுப. ஏனையோ ரெல்லாம் ஒருகாற் றிருந்தி நன்மை செய்தலுங் கூடுமாதல்போலக் கற்புக்கெட்ட பெண்டிர் ஆகாராதலின், அவர் 'கூற்றமே' யென்று தேற்றேகாரங் கொடுத்தோதப்பட்டது.

---

* இல்லிருந்து - எனவும் பாடம்.

அச. நீரான்வீ றெய்தும் விளைநிலம் நீர்வழங்கும்
பண்டத்தாற் பாடெய்தும் பட்டினம் - கொண்டாளும்
நாட்டான்வீ றெய்துவர் மன்னவர் கூத்தொருவன்
*ஆடலாற் பாடு பெறும்.

(இ-ள்) நீரான் - தண்ணீரின் பாய்ச்சலால், விளைநிலம் - பயிர்விளையும்நிலம், வீறு எய்தும் - செழிப்படையும்; நீர் வழங்கும் - கடல்கொடுக்கும், பண்டத்தால் - முத்துமுதலிய பொருள்களால், பட்டினம் - நகரம், பாடு எய்தும் - பெருமை பெறும்; கொண்டு - தங்கீழ்க் கைப்பற்றி, ஆளும் - அரசாளும், நாட்டான்-நாட்டினால், மன்னவர்-அரசர், வீறுஎய்துவர் - சிறப் படைவர்; ஒருவன்-வல்லானொருவன், ஆடலால் - ஆடுதலால், கூத்து-நாடகம், பாடுபெறும் - மேன்மையடையும்.

(க-து) விளைநிலம் நீர்பாய்ச்சலாற் செழிப்படையும்; பட்டினங்கள் கடல்வளத்தாற் பெருமையுறும்; மன்னர் தா மாளும் நாட்டினாற் சிறப்படைவர்; கூத்து வல்லானொருவன் ஆடலால் மேம்படும்.

பட்டினமென்னுங் குறிப்பானும் பண்டமென்னுங் குறிப் பானும் இரண்டாவது நீர், கடலையுணர்த்தும்; தலைமையா லுணர்த்திற் றெனினு மாம்; இடத்து நிகழ்பொருளை இடத் தின் மேலேற்றி 'நீர்வழங்கு' மெனப்பட்டது, நாட்டானென் பது, நாட்டிலுள்ள குடிமக்களின் நன்மையா னென்க.

அரு. ஒன்றூக்கல் பெண்டிர் தொழினலம் - என்றும்
நன்றூக்க லந்தணர் உள்ளம் பிறனாளும்
நாடூக்கல் மன்னர் தொழினலம் - கேடூக்கல்
கேளி ரொரீஇ விடல்.

(இ-ள்) பெண்டிர் - பெண்மக்களின், தொழில் நலம் - தொழிற்சிறப்பு என்றும் ஒன்று ஊக்கல் - தங்கணவரோடு ஒருமைப்பட்ட கருத்தால் முயன்றொழுகலாம். அந்தணர் உள் ளம் -அந்தணரின் கருத்து, நன்று ஊக்கல் - இனிய எண்ணங் களையே முயன்று கடைப்பிடித்தலாம்; மன்னர் - அரசரின்,

* பாடலால் - எனவும் பாடம்.

தொழில் நலம் - தொழிற் சிறப்பு, பிறன் ஆளும் - வேற்றரசன் அரசாள்கின்ற, நாடு ஊக்கல் - நாட்டினைக் கொள்ள முயன்றெழுதலாம்; கேளிர் - சுற்றத்தாரை, ஒரீஇவிடல் - நீக்கிவிடுதல், கேடு ஊக்கல் - கேட்டுக்கு முயறலாகும்.

(க-து.) கணவனோரோடு ஒருமைப்பட்டு நிற்க முயலுதலே பெண்டிர்க்கு நற்செய்கையாம்; அறத்தைக் கடைப்பிடிக்க முயலுதலே அந்தணர்க்கு நற்கருத்தாம்; பிறன் ஆளும் நாட்டைப் பெறமுயலுதலே மன்னர்க்கு உரியசெய்கையாம்; சுற்றத்தாரை நீக்கிவாழ்தல் கேட்டுக்கே முயலுதலாகும்.

ஊக்கல்-முயறல். தொழில்நலம்-தொழிலின் நன்மை; ஒன்றென்றது ஈண்டு ஒன்றுங்கருத்து. தன்னோடொப்பது இல்லாமையால் 'ஒன்று' என்பது எண்ணலளவை யாகுபெயராய் ஒப்பற்ற 'கற்பு' எனினும் பொருந்தும். ஒரீஇவிடல் சொல்லிசையளபெடை. பெண்டு-பெண்மை. நன்று-அறத்தின்மேற்று. உள்ளம் - கருத்து. நாடேக்கல் பெறவென்றொன்று அவாய் நிலையான் வருவித்துக்கொள்க. விடல் - தொழிற்பெயர். என்றும் என்பதை நடு நிலைத்தீபக மாக்கி என்றும் நன்றாக்கல் என்று மியைக்க.

அசுரு. கள்ளாமை வேண்டுங் கடிய வருதலால்
தள்ளாமை வேண்டுந் தகுதி யுடையன
நள்ளாமை வேண்டுஞ் சிறியாரோ டியார்மாட்டும்
கொள்ளாமை வேண்டும் பகை.

(இ-ள்) கடிய - அஞ்சற்பாலவான, துன்பங்கள், வருதலால் -பின்பு வருதலால், கள்ளாமை வேண்டும் - பிறர் பொருளைத் திருடாமை வேண்டும்; தகுதி உடையன - தமக்குத் தகுதியுடைய ஒழுக்கங்களை, சிறியாரோடு - சிற்றினத்தாரோடு, நள்ளாமை வேண்டும் - நட்புக்கொள்ளாமை வேண்டும்; யார் மாட்டும் - யாரிடத்திலும், பகை - பகைமை, கொள்ளாமை வேண்டும் - பாராட்டாமை வேண்டும்.

(க-து) கொடுந் துன்பங்கள் பின்பு உண்டாதலால் என்றுந் திருடாமை வேண்டும்; தகுதியுடைய ஒழுக்கங்களைத் தவிராமை வேண்டும்; சிற்றினத்தாரோடு சேராமை வேண்டும்; யார்மாட்டும் பகைகொள்ளாமை வேண்டும்.

கள்ளாமை முதலியன எதிர்மறைத் தொழிற்பெயர்கள். ஓடென்ற மூன்றனுருபு ஏழாவதனிடப் பொருளில் வந்தது. கடிய, பலவின்படர்க்கைக் குறிப்பு வினைப்பெயர். நள்ளாமை-நெருங்காமை; யார்மாட்டுமென்பது இளைத்தார்மாட்டு மென்றற்கு. 'சிறியாரோ டியார் மாட்டு' மென்ற விடத்துத் தளை பிறழ்தலறிக.

அஎ. பெருக்குக நட்டாரை நன்றின்பா லுய்த்துத்
தருக்குக வொட்டாரைக் கால மறிந்தாங்
கருக்குக யார்மாட்டு முண்டி - சுருக்குக
செல்லா விடத்துச் சினம்.

(இ-ள்) நட்டாரை - ஒருவன் தனக்கு நண்பராஞனை, நன்றின்பால் உய்த்து - நன்மையிற் செலுத்தி, பெருக்குக - நல்வாழ்வில் உயர்த்துக; ஒட்டாரை - பகைவர்களை, காலம் அறிந்து - உரிய காலந் தெரிந்து, தருக்குக - மறங் கொண்டு வெல்க, யார் மாட்டும் - யாவரகத்தும், உண்டி - அடுத்துண்ணுதலை, அருக்குக - சுருக்கிக்கொள்க. செல்லாவிடத்து - செல்லுந் தகுதி யில்லாவிடத்து, சினம் சுருக்குக - சினத்தைத் தணித்துக் கொள்க.

(க-து) நண்பரை நல்வாழ்வி லுயர்த்துக; பகைவரைக் காலமறிந்து வலிசெய்க; யாவரகத்தும் அடுத்துண்ணுதலைக் குறைத்துக்கொள்க; செல்லத்தகாத இடத்திற் சினத்தைத் தணித்துக்கொள்க.

நட்டார்க்கு நன்மை செய்யுநேரம் எப்போது வாய்க்கு மென்று எவரும் எண்ணிக்கொண்டிருத்தலே நட்பின் சிறப் பென்றபடியென்க. தருக்குதல் - வீரங்கொள்ளல்; வெற்றிக் கென்றுகொள்க. யார்மாட்டுமென்றார். நெருங்கிய நண்பர் உறவினர் வீட்டிலும் என்றற்கு. உண்டி உண்டுத் தொழிற் பெயராம். செல்லாவிட மென்றதை இளைத்தார் மாட்டெனக் கொள்க.

'செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக் காக்கினென் காவாக்கா லென்' (வெகுளாமை,உ) என்று நாயனார் அருளிச் செய்தலின், வலியார்மாட்டென்க் கூறும் உரை உரையன்மையறிக. ஆங்கு - அசை. அருக்குக - அருகு என்னும் பகுதி இரட்டித்தது.

அஅ. மடிமை கெடுவார்க ணிற்கும் - கொடுமைதான்
பேணாமை செய்வார்க ணிற்குமாம் பேணிய
நாணின் வரைநிற்பர் நற்பெண்டிர் நட்டமைந்த
தூணின்க ணிற்குங் களிறு.

(இ-ள்) மடிமை-முயற்சியின்மை, கெடுவார்கண்-கெடுவாரிடத்திலேயே, நிற்கும் - ஏற்படும்; கொடுமை - தீமை, பேணாமைசெய்வார்கண் - மேலோர் விரும்பாமையைச் செய்வாரிடத்தில், நிற்கும் - உண்டாகும், நற்பெண்டிர் - நன்மகளிர், பேணிய - விரும்பப்பட்ட, நாணின்வரை - நாணத்தின் எல்லையில், நிற்பர்-நிற்பார்கள், களிறு-யானை, நட்டு அமைந்த-கீழே நட்டு வலிவமைந்த, தூணின்கண் - தூணில், நிற்கும் - நிலைபெறும்.

(க-து) கெடுவாரிடத்திற் சோம்பலிருக்கும்; பிறர் விரும்பாதவற்றைச் செய்வாரிடத்தில் தீமை யேற்படும்; நல்லியல்புடைய மகளிர் நாணெல்லையில் நிற்பர்; யானை தூணெல்லையில் நிற்கும்.

கெடுவார்-பின்பு கெடுவார்; பேணாமை யென்னும் பண்பு அஃதுடைய செயல்களின்மே னின்றது. பேணாமை - காக்கத்தக்க குடிப்பிறப்பு; கல்வி, ஒழுக்க முதலியவற்றைக் காவாமையுமாம்; எதிர்மறைத்தொழிற்பெயர். நாணின்வரை நிற்பரென்பது நாண்கெட்ட தொழில்களைச் செய்யாரென்றபடி; தூண்-கட்டுத்தறி. தான், ஆம் அசைகள்.

அக. மறையறிப வந்தணர் புலவர் - முறையொடு
வென்றி யறிப வரசர்கள் - என்றும்
வணங்கல் அணிகலந் சான்றோர்க்கஃ தன்றி
அணங்கல் வணங்கின்று பெண்.

(இ-ள்.) அந்தண் புலவர் - அந்தணர், மறை அறிப - நான் மறைப் பொருளை அறிவார்கள், அரசர்கள் - மன்னர்கள், முறையொடு - நடுவுநிலையோடு, வென்றி - வெற்றியையும், அறிப - அறிவார்கள், சான்றோர்க்கு - பெருந்தகைமை நிறைந்தவர்களுக்கு, என்றும் - எப்பொழுதும், வணங்கல் - வணக்கமே, அணிகலம் - அணிகலம் போல்வதாம், அஃதுஅன்றி - கணவனை தெய்வத்தை யல்லாமல், அணங்கல்-வேறு தெய்வங்களை, பெண் வணங்கின்று - பெண்மக்கள் வணங்குதலில்லை.

(க-து.) அந்தணர் மறையறிப ; அரசர் முறையும் வெற்றியும் அறிப ; சான்றோர்க்கு அணிகலம் வணக்கம் ; பெண்டிர் கணவனையன்றி வேறு தெய்வந் தொழார்.

அந்தணரை அந்தண்மையென்னும் அருளிரக்கமும் புலமையும் உடையாரென்பார் 'அந்தண்புலவ' ரென்றார் முறை-குடிகளையாளும் அறமுறை ; வென்றி - பகைப்புறங்காணும் வெற்றி. அஃது - கணவனென்னுந் தெய்வத்தை யுணர்த்தலின், அஃறிணையாய் வந்தது ; அன்றிச் சான்றோர்க்கு எவர் மாட்டும் வணக்கமுடைமையே அணிகலமென்று முன்வந்தமையின் பெண்டிர்க்கு இப்பெற்றியன்று; அவர் கணவனார்மாட்டே வணக்கமுடையரல்லது மற்றப்படி தெய்வங்கண்மாட்டும் வணக்க முடையா ராகா ரெனத் தெரிப்பதாயின், அஃதன்றி யென்பது அப்பெற்றியென் றுணர்த்து மெனவும் ஆம். அணங்கல் தொழிலாகுபெயராய்த் தெய்வத்தை யுணர்த்தாநின்றது ; அணங்குதல் - விரும்புதல், அஞ்சுதல்; அணங்கை எனவும் பாடம்.

கூ0. பட்டாங்கே பட்டொழுகும் பண்புடையாள் காப்பினும்
பெட்டாங் கொழுகும் பிணையிலி - முட்டினுஞ்
சென்றாங்கே சென்றொழுகுங் காமம் காப்பினுங்
கொன்றான்மே னிற்குங் கொலை.

(இ-ள்.) பண்பு உடையாள் - நல்லியல்புடைய பெண். பட்டாங்கே - கற்புண்மைப்படியே, பட்டு - காத்து, ஒழுகும் - ஒழுகுவாள் ; பிணை இலி - காதலில்லாதவள். காப்பினும் - கணவன் காதல் செய்யினும், பெட்டாங்கு - தான் விரும்பியபடியே ஒழுகும் - பிறரோடு மருவியொழுகுவாள் ; காமம் -

காமவியல்பு, முட்டினும் - இடையூறு உண்டாயினும், சென்றாங்கே - முன்பு சென்றபடியே, சென்று ஒழுகும் - பின்புஞ் சென்று நிகழும் ; கொலை - கொலைப்பழி, கரப்பினும் - எவ்வளவு மறைத்தாலும், கொன்றான்மேல் - கொலை செய்தவன் மேலேயே, நிற்கும் - நிலைபெறும்.

(க-து.) நல்லபெண் காவலில்லாவிடினுங் கற்பொழுக்கத்தையே மேற்கொண்டொழுகுவள் ; அன்பில்லாதவள் எத்தனைக்காவல் செய்யினுந் தான் விரும்பியவாறே பிறரைக் காதலித்தொழுகுவள்; காமவியல்பு எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் முன் நிகழ்ந்தபடியே நிகழும் ; கொலைப்பழி எவ்வளவு மறைப்பினும் கொன்றான்மேலேயே வெளிப்படும்.

பட்டாங்கு-இயல்பு - ஈண்டுக் கற்பியல்பு ; பண்பு, காதலெனல் பொருந்தும் ; பிணையிலிக்குக் காப்பினுமென வந்தமையின், பண்புடையாளுக்குக் காவாவிடினுமென்றொன்று வருவித்துக்கொள்க. ஆங்கு வினையெச்சப் பொருள்பட்டு நின்றது. உடையான்றொழிலை உடைமைமே லேற்றிக்காமமெனக் கூறப்பட்டது. கொலை - காரணவாகு பெயர்.

௬௬. வன்கண் பெருகின் வலிபெருகும் பான்மொழியார்
இன்கண் பெருகி னினம்பெருகும் சீர்சான்ற
மென்கண் பெருகி னறம்பெருகும் - வன்கட்
கயம்பெருகிற் பாவம் பெரிது.

(இ-ள்.) வன்கண் பெருகின் - அஞ்சாமை மிகுந்தால், வலிபெருகும் - வலிமையும் ஒருவனுக்கு மிகும் ; பால் மொழியார் - பால்போலும் இனியசொல்லையுடைய மனைவிமாரின், இன்கண் - இனிய கண்ணோட்டம், பெருகின் - பெருகுமானல், இனம் பெருகும் - சுற்றத்தார் பெருகுவர் ; சீர்சான்ற - சிறப்புமிக்க, மென்கண் - அருட்டன்மை, பெருகின் - மிகுமானல், அறம்பெருகும் - அறவினைகள் மிகும். வன்கண் - கொடுமையையுடைய, கயம் பெருகின்-கீழ்மைத்தன்மை மிகுமானல், பாவம் பெரிது - தீவினைச் செயல்மிகுதியாம்.

(க-து.) அஞ்சாமை மிகுந்தால் வலிமைமிகும் ; மனையாள்மாட்டுக் கண்ணோட்டம் மிகுந்தால் இனம் பெருகும் ;

அருளிரக்கம் மிகுந்தால் அறம் மிகும்; கீழ்மை மிகுந்தால் தீவினை மிகும்.

வன்கண் அஞ்சாமைப் பொருட்டாதலை 'வன்கட் கானவன்' (கிள்ளைப்பத்து, ந) என்னும் ஐங்குறுநூற்றினுற் கொள்க. அஞ்சாமை யென்னும் உள்ளவலிமை உடம்புக்கும் வலிமை தருதலின், இங்ஙனங் கூறப்பட்டது. கண்-கண்ணோட்டம்; கண்ணோட்டத்தினும் அருட்டன்மையென்பது இரக்கவியல்பு மிக்கதாகலின், அதனை 'மென்கண்' என விதந்தார். பெரிதென்றதை ஆக்கவினை கொடுத்து வினைப் படுத்துக்கொள்க. இன்கண், மென்கண் என்பவற்றில் 'கண்' கருவியாகுபெயர்.

கூஉ. இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞரில் போழ்திற் சினங்குற்றம் குற்றந்
தமரல்லார் *கையகத் தூண்.

(இ-ள்.) இளமைப் பருவத்து - இளம்பருவத்தில், கல்லாமை குற்றம் - கல்லாதொழிதல் பிழையாம்; வளம் இலா - பொருள்வருவாய் இல்லாத, போழ்தத்து - காலத்தில், வள்ளன்மை - ஈகையியல்பு, குற்றம் - பிழையாம்; கிளைஞர் இல்போழ்தில் - உறவினர்கள் துணையில்லாத காலத்தில், சினம் குற்றம் - பிறரொடு சினத்தல் குற்றமாம்; தமர் அல்லார்-தமக்கு உள்ளன்பில்லாதார், கையகத்து ஊண்-இடத்தில் உண்ணுதல், குற்றம் - பிழையாம்.

(க-து.) இளம் பருவத்திற் கல்லாமை குற்றம்; பொருளில்லாத காலத்தில் ஈதல் குற்றம்; உறவினர் துணையில்லாத காலத்தில் பிறரைச் சினத்தல் குற்றம்; உள்ளன்பிலார் மாட்டு உண்ணுதல் குற்றம்.

'வளமில் குள' (அக) மென்றாற்போல ஈண்டு வளமென்பது வருவாயைக் குறித்தமை கண்டுகொள்க. தமர் உள்ளங் கலத்தலாற் றம்மவரென்க. 'தமர்தற் றப்பினது நோன்

* இல்லகத்து என்றும் பாடம்,

றல்லும்' என்னும் புறநானூற் றுரையில், தமரைத் தனக்குச் சிறந்தோரென் றுரைக்கப்பட்டது மிது. கையகத்து (கை + அகம் + அத்து.) வேற்றுமைமேற் சாரியை நின்றது. ஊண் - முதனீண்ட முதனிலைத் தொழிற்பெயர். போழ்தத்து - அத்துச்சாரியை ஏழாம்வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் வந்தது.

கூரு. எல்லா விடத்துங் கொலைதீது மக்களைக்
கல்லா வளர விடறீது - நல்லார்
நலந்தீது நாணற்று நிற்பிற் - குலந்தீது
கொள்கை யழிந்தக் கடை.

(இ-ள்.) எல்லா இடத்தும் - எவ்வகையினும், கொலை தீது - ஒருயிரைக் கொலை செய்தல் தீதாகும்; மக்களை - புதல் வரையும் புதல்வியரையும், கல்லாவளரவிடல் - கல்விகல்லா மல் வளரும்படி விடுதல். தீது - தீதாம்; நாண் அற்று நிற்பின் - நாணமின்றி எல்லார்முன்னும் நிற்பதானல், நல்லார் நலம் தீது - பெண்மகளிரின் அழகு தீதாகும்; கொள்கை குலத் திற்கேற்ற கொள்கைகள், அழிந்தக்கடை - அழிந்தவிடத்து, குலம் தீது - குலம் தீதாகும்.

(க-து.) எவ்வகையாலுங் கொலைதீதாம்; மக்களைக் கல்லாமல் வளரவிடுதல் தீதாம்; நாணில்லாவிட்டால் மகளிரின் அழகு தீதாம்; கொள்கை யழிந்துவிட்டால் குலம் தீதாம்.

எல்லாவிடத்து மென்றது, வேள்விமுதலான விடங்களினுமென்க. கல்லா வினையெச்சவீறு தொகுத்தலாய் நின்றது. நிற்பின் - உறைதன் மேற்று. கடை வினையெச்சப் பொருளது. அழிந்தக்கடை - அழிந்தால்.

கூசு. ஆசார மென்பது கல்வி யறஞ்சேர்ந்த
போக முடைமை பொருளாட்சி யார்கண்ணுங்
கண்ணோட்ட மின்மை முறைமை தெரிந்தாள்வான்
உண்ணோட்ட மின்மையு மில்.

(இ-ள்.) ஆசாரம் என்பது - நல்லொழுக்க மென்பது, கல்வி - கல்வியறிவின் பயனாகும்; அறம் சேர்ந்த - அறவினை

களோடு சேர்ந்த, போகம் உடைமை - இன்பநுகர்ச்சி, பொருள் ஆட்சி - செல்வத்தைக் கையாளுதலின் பயனும்; யார்கண்ணும் - யாரிடத்திலும், கண்ணோட்டம் இன்மை - கண்ணோட்டம் இல்லாமை, முறைமை - நடுநிலையாக ஆளு முறையாம்; தெரிந்து ஆள்வான் - பிறரோடு ஆராய்ந்து அரசாளுபவன், உள்நாட்டம் இன்மையும் - தன்னுளத்தில் ஆராயாமையும், இல் - இல்லை.

(க-து.) நல்லொழுக்கமென்பது கல்வியின்பயன்; அறஞ் செய்தலோடு செல்வத்தாலான இன்பத்தை நுகர்தலென்பது செல்வத்தை முறையாக ஆளுதலின்பயன்; யாரிடத்திலுங் கண்ணோட்டமில்லாமை நடுவு நிலையோடு அரசாளு முறையாம்; ஆராய்ந்து அரசாளுமியல்பினன் தன்னுளத்தே யுந் தனியாக ஆராயாம லிரான்.

தெரிந்தாள்வா னென்பது அமைச்சர் முதலாயினரோடு தெரிந்தாளுதல். உள்நாட்டம்-தனக்குள் ஆராய்ச்சி என்றது, அரசன் வெறுங் கேள்வியறிவினனேயே செய்வானல்லன்; அதனைத் தன்னுள்ளும் வைத்துத் தனித்தாராய்ந்துஞ் செய்வனென்பது. நாட்டம்-தொழிற்பெயர்.

கூரு. கள்ளி னிடும்பை களியறியும் நீரிடும்பை
புள்ளினு ளோங்க லறியும் நிரப்பிடும்பை
பல்பெண்டி ராள னறியுங் கரப்பிடும்பை
கள்வ னறிந்து விடும்.

(இ-ள்.) கள்ளின் இடும்பை - கள்ளைப் பெறாமையால் வரும் துன்பத்தை, களி அறியும் - கள்ளுண்டு களிப்பவன் அறிவான்; நீர் இடும்பை - நீரைப் பெறாமையால் வருந் துன்பத்தை, புள்ளினுள் - புட்களுள், ஓங்கல் அறியும் - வானம்பாடிப் பறவை யறியும்; நிரப்பு இடும்பை - பொருளைப் பெறா மையால் வருந்துன்பத்தை, பல் பெண்டிராளன் - மனைவியர் பலரையுடைய கணவன், அறியும் - அறிவான்; கரப்பு இடும்பை-ஒன்றை ஒரிடத்து வைக்கும் அருமையாலுண்டாகுந் துன்பத்தை, கள்வன் - திருடன், அறிந்துவிடும் - அறிவான்.

(க-து.) கட்பெறாமையா லுண்டாகுந் துன்பத்தைக் கட்குடிய னறிவான்; நீர் பெறாமையால் வருந்துன்பத்தை,

வானம்பாடிப் பறவையறியும். பொருள் தேடுதலாலுண்டா குந் துன்பத்தை மனைவியர் பலரையுடையவன் அறிவான்; ஒன்றை ஒளித்து வைப்பதிலுள்ள துன்பத்தைத் திருடனறி வான்.

களி, வினைமுதற் பொருண்மையாகிய இகரம் புணர்ந்து கெட்ட தென்க. புள்ளினுள் ஓங்கல், வானம்பாடிப்புள்; அது வானோங்கிப் பறத்தலால் வந்தபெயராதலின் ஈண்டு ஓங்கல் தொழிலாகுபெயர். வானம்பாடிப்புள் மழைத்துளியைப் பருகி உயிர் வாழுமியல்பினதாகலின், அத்துளி கிடைக்கப்பெறா விடத்து அது மிகவும் வருந்துமென்க. இவ்வுண்மையைத் "கற்பாடிய தளியுணவிற் புட்டேம்பப் புயன்மாறி" என்னும் பட்டினப்பாலை யடிகளானும் (௩-௪), "வானம் பாடி வறங்க ளைந் தானாது அழிதுளி தலைஇய புறவிற் காண்வர" வென்னும் ஐங்குறுநூற் றடிகளானும் (௪௧௮) பெறுதும். நிரப்புங்கரப் புந் தொழிற்பெயர். நிரப்பு - குறைபாடு.

௯௰. வடுச்சொன் னயமில்லார் வாய்த்தோன்றுங் கற்றார்
சாயினுந் தோன்றா கரப்புச்சொல் தீய [வாய்ச்
பரப்புச்சொல் சான்றோர்வாய்த் தோன்றா- கரப்புச்
கீழ்கள்வாய்த் தோன்றி விடும். [சொல்

(இ-ள்.) வடுச்சொல் - பழிச்சொற்கள், நயம் இல்லார் வாய் - அன்பில்லாதார் வாயில், தோன்றும் - பிறக்கும்; கற்றார் வாய் - அறிவு நூல்களைக் கற்றவர்தம் வாயில், கரப்புச் சொல் - வஞ்சனைப்பேச்சுகள், சாயினும் தோன்றா - அவர் கெடுவதாயினும் பிறவா; தீய பரப்புச் சொல் - தீயவற்றைப் பரப்பும் பேச்சுகள், சான்றோர்வாய் - மேன்மக்கள் வாயில், தோன்றா - தோன்றமாட்டா; கரப்புச்சொல் - ஒன்றனை மறைக்குஞ் சொற்கள், கீழ்கள்வாய் - கீழ்மக்கள் வாயில், தோன்றிவிடும் - பிறந்துவிடும்.

(க-து.) அன்பில்லாதார் வாயிற் பழிச்சொற்கள் தோன் றும்; கற்றார் வாயில் வஞ்சனைச் சொற்கள் தோன்றா; சான் றோர் வாயில் தீயவற்றைப் பரப்புஞ் சொற்கள் தோன்றா; கீழ்மக்கள் வாயில் ஒளிப்புச் சொல் தோன்றிவிடும்.

வடு-பழி; சாயினும் இறப்பினுமாம்: தீய பரப்புஞ் சொல், கோட்சொல்; சான்றோர், நல்லியல்புகள் நிறைந்தோர். கீழ்கள், இழிவான வியல்புடையவர்கள், இது பண்பாகு பெயர். நயம் – நட்புக் குணம், அன்பு; நண்பாற்ற ராகி நயமில செய்வார் (குறள்-998) என்புழிக் காண்க. பரப்புச் சொல் – இல்லாத பழிச்சொற்களை ஏற்றிப் பலரறியக் கூறுதல்.

கூஎ. வாலிழையார் முன்னர் வனப்பிலார் பாடிலர்
சாலு மவைப்படிற் கல்லாதான் பாடிலன்
கற்ற னொருவனும் பாடிலனே கல்லாதார்
பேதையார் முன்னர்ப் படின்.

(இ-ள்.) வால் இழையார் முன்னர் – குற்றமற்ற அணிகளையணிந்த அழகிய பெண்மக்களுக்கு முன், வனப்பு இலார் – அழகில்லாத ஆடவர், பாடு இலர் – பெருமை இலர்; சாலும் – கல்விகேள்விகளான் நிறைந்த, அவைப்படின் – அவையிற் புகுந்தால், கல்லாதான் – கல்வியறிவில்லாதவன், பாடு இலன் – பெருமை இலன்; கற்றான் ஒருவனும் – கற்றறிவுடையானொருவனும், கல்லாதார், (முன்னர்ப்படின்)-படியாதவரிடஞ் சேர்ந்தால், பாடு இலனே-பெருமை இலன்; பேதையார் முன்னர்ப் படின் – அறிவிலாரிடஞ் சேர்ந்தாலும்; பாடு இலனே – பெருமையிலனே.

(க-து.) அழகிய பெண்டிர்க்கு முன்னால் அழகில்லாத ஆடவர் பெருமையடைதலில்லை; கற்ற ரவையிற் கல்லாதான் பெருமை யடைத லில்லை; கல்லாதார் முன்பு கற்றானும் பெருமையடைத லில்லை; அறிவிலார் முன்பும் கற்றார் பெருமை யடைதலில்லை.

வால், தூய்மை யாதலின் குற்றமற்றவென் றுரைக்கப்பட்டது. வாலிழையாரென்னுங் குறிப்பினால் வனப்பிலார் ஆடவராயினர். உம்மை இறந்தது தழீஇய எச்சம். ஏகாரம் இரக்கப் பொருளது. பேதையார் முன்னர்ப் படின் – என்பதை வருவித்துப் பொருளுரைக்கப் பட்டது. முன்னர்ப்படின் என்றதை முன்னுங் கூட்டி நான்கெனப் பிரித்துக்கொள்க, இந்நூல் நான்மணிக்கடிகை யாதலின்.

௧௮. மாசு படினு மணிதன்சீர் குன்றாதாம்
பூசிக் கொளினு மிரும்பின்கண் மாசொட்டும்
பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்.

(இ-ள்.) மாசுபடினும்-அழுக்குப்பட்டாலும், மணி தன் சீர் குன்றாது - நன்மணியின் பெருமை குறையாது; பூசிக் கொளினும் - கழுவி எடுத்துக்கொண்டாலும். இரும்பின்கண் - இரும்பினிடத்தில், மாசு ஒட்டும் - அழுக்குச் சேரும்; கீழ் தன்னை - கீழ்மகனை, பாசத்துள் இடினும்-தளையிலிட்டு ஒறுத்தாலும், (மாசு உடைமை காட்டிவிடும்) --கீழ்மை யியல்பையே காட்டுவான்; விளக்கினும் - அல்லது அறிவு கூறிவிளக்கினு லும், மாசு உடைமை காட்டிவிடும் - கீழ்மை யியல்பையே காட்டுவான்.

(க-து.) அழுக்குச் சேர்ந்தாலும் நன் மணியின் பெருமை குறையாது; கழுவி எடுத்துக் கொண்டாலும் இரும்பின் கண் மாசுண்டாகும்; கீழ்மக்களை ஒறுத்தாலும் தங் கீழ்மைத்தன் மையையே காட்டுவார்கள்; அன்றி அறிவு விளக்கினாலும் அக் கீழ்மையையே காட்டுவார்கள்.

மணிக்குச் சீரென்றது ஒளி; இரும்புக்கு மாவென்றது துரு. ஆம், அசை; பூசுதல், கழுவுதல். வாய்பூசுவெலன்பதிற் போலவென்க. நான்மணிக்கடிகையில் ஒவ்வொரு செய்யு ளினும் நன்னான்கு பொருள்கள் சொல்லப்பட வேண்டிய தாயினும், ஒவ்வோர் செய்யுளின்கண் மூன்று பொருள்களே காணப்படுதலை வருந்திப் பொருள் கொள்ளாது, நூற்பெயர் மிகுதிபற்றி யமைந்ததெனவுங் கொள்ளலாம். பாசத்து ளிடினும் விளக்கினுமென இரண்டாய்ப் பிரித் துரைத்துக் கொள்க. கீழ்க்கு மாவென்றது அறியாமையை. உம்மை எச்சத் தொடு ழிவு சிறப்புமாம். உடைமை-செயப்படு பொருள் குன்றாக் குறிப்புத் தொழிற் பெயர்.

௧௯. மாண்டொழுக்குஞ் சான்றோர் மரீஇயாரிற் றீரா...
பூண்டொழுக்கும் போற்று முடனுறைவு-பண்ணிய

யாழொக்கு நட்டார் கழறுஞ்சொல் பாழொக்கும்
பண்புடையா ளில்லா மனை.

(இ-ள்.) மரீஇயாரின்-நெடுநாட் பழகினவரைப்போல-சான்றோர் - ஆன்றோர்களை, தீராமை - நீக்காமலிருக்கல்-எண் ஒக்கும் - அறிவாராய்ச்சியையொக்கும்; போற்றார் - தம்மைப் போற்றி இணங்காதவரோடு, உடன் உறைவு - உடனிருந்து வாழ்தல், புண் ஒக்கும் - புண்ணினை ஒக்கும்; நட்டார் - நட்பாயினோர், கழறும் சொல் - இடித்துரைக்கும் கொடுமைகாட்டுஞ் சொல், பண்ணிய - நரம்புகளாற் கட்டப்பட்ட, யாழ் ஒக்கும் - யாழிசையை ஒக்கும்; பண்புடையாள் - மனைமாட்சியில்லாதவள், இல்லா மனை - இல்லாத வீடு, பாழ் ஒக்கும் - பாழ்மனையை ஒக்கும்.

(க-து.) சான்றோரை நீங்காதுறைதல் அறிவுடைமையாகும்; இணக்கமில்லாதாரோடு உடனுறைதல் புண்ணுக்கு நிகராகும்; நட்புடையார் இடித்துரைக்குஞ் சொல் வன்சொற் போலாயினும் அது யாழோசையைப் போலும் இனிமையுடையதாம்; மனைமாட்சியுடைய மனையாளில்லாத மனை பாழ்மனையையொக்கும்.

எண்-அறிவு. தொக்கிருந் தெண்ணுஞ் சொனெனப்படும் என்று முன்வந்தமையும் உற்று நோக்குக. சான்றோர் மரீஇயாரிற் றீராமை யென்பதை மருவியமைந்தாரை நீங்காமை யென்று பொருளுரைப்பினு மமையும். அரியாரத் தீராமை எனவும் பாடம். கழறல், தவறுகண்டவிடத்து இடித்துரைத்தல். யாழ் யாழினிசையையும், பாழ் பாழ்மனையையும் உணர்த்தலால் அவைமுறையே கருவியாகுபெயரும் பண்பாகுபெயருமாம். எண் - முதனிலைத் தொழிற்பெயர்.

௭௭. ஏரி சிறிதாயி னீரூரும் இல்லத்து
வாரி சிறிதாயிற் பெண்ணூரும் மேலைத்
தவஞ்சிறி தாயின் வினையூரு மூரும்
உரன்சிறி தாயின் பகை.

(இ-ள்.) ஏரி சிறிதாயின் - குளம் சிறிதானால், நீர் ஊரும் - நீர் வழிந்துவிடும், இல்லத்து - வீட்டில், வாரி சிறிதா

யின் - வருமானங் குறைவானால், பெண் ஊரும் - மனையாள் நிலை கடந்து பேசுவாள்; மேலைத் தவம் சிறிதாயின் - முற்பிறப்பின் நல்வினை குறைவானால், வினை ஊரும் - தீவினைபெருகும்; உரன் சிறியதாயின் - ஒருவன் வலிமை சிறிதானால், பகை ஊரும் - பகைவர் மேற்கொள்வர்.

(க-து.) ஏரி சிறிதானால் நீர் வழிந்து போய்விடும்; வீட்டில் வருவாய் குறைவானால் மனையாள் வரம்பு கடந்து பேசுவள்; முன்னைத் தவம் சிறிதானால் தீவினை மிகுந்து வருத்தும்; வலிமை சிறிதானால் பகைவர் மேற்கொண்டு வென்றிடுவர்.

வாரி, தொழிலடியாகப் பிறந்த பெயர். இடையறு தொழுகுத லென்னும் பொருளால் வருவாய்க் காயிற்று. வினை முதற்பொருண்மை விகுதி; பகை பண்பாகு பெயர். தவமென்னுங் குறிப்பால் வினையைத் தீவினையென்றுரைத்துக்கொள்க. மேலை - பண்புப் பெயர்; மேல் - பகுதி, ஐ - பகுதிப்பொருள் விகுதி.

௯௫. வைத்தலா லாகும் வசையே வணக்கமது
செய்தலா லாகுஞ் செழுங்கிளை செய்த
பொருளினா லாகுமாம் போகம் நெகிழ்ந்த
அருளினா லாகு மறம்.

(இ-ள்.) வசை - நிந்தனை, வைதலால் ஆகும் - தான் பிறரை வைததனால் ஒருவனுக்கு உண்டாகும்; செழும் கிளை - மிக்க உறவு, வணக்கமது செய்ததனால் ஆகும் - எல்லார்க்கும் வணங்கி யொழுகினமையால் உண்டாகும்; போகம் - இன்ப வாழ்க்கை, செய்த பொருளினால் ஆகும் - பொருளைத் தொகுப்பதனால் உண்டாகும்; அறம் - அறவினை, நெகிழ்ந்த அருளினால் ஆகும் - உருகிய இரக்கத்தினால் உண்டாகும்.

(க-து.) பிறரை வைதலால் தமக்கு வசையுண்டாகும்; வணங்கி யொழுகுதலால் உறவினர் மிகுவர்; பொருளைத் தொகுத்ததனால் இன்பவாழ்க்கையுண்டாகும். உருகிய இரக்கத்தினால் அறமுண்டாகும்.

ஏ, அசை; வணக்கமது, அது பகுதிப் பொருள் விகுதி. செய்தலென்றது தொகுத்தலின் மேற்று. நெகிழ்ந்த அருள்,

இயற்கை நவிற்சி. வைத்தது, செய்தது-காலங்காட்டுந்தொழிற் பெயர்கள். கிளை - உவமையாகுபெயர்.

௱௨. ஒருவ னறிவானு மெல்லாம் யாதொன்றும்
ஒருவ னறியா தவனும் ஒருவன்
குணனடங்கக் குற்றமு ளானும் ஒருவன்
கணனடங்கக் கற்றானு மில்.

(இ-ள்.) எல்லாம்-எல்லாக் கலைகளையும், அறிவான் ஒருவனும் இல்-தெரிந்தவனொருவனும் இல்லை; யாதொன்றும் - எதனையும், அறியாதவன் ஒருவனும் இல்-தெரியாதவனொருவனும் இல்லை, குணன் அடங்க - ஒருநல்லியல்பும் இலதாக, குற்றம் உள்ளான் -ஒருவனும் இல் - பிழையேயுள்ளவனொருவனும் இல்லை; கணன் அடங்க-அறியாமை சிறிதும் இலதாக, கற்றானும் இல் - கற்றறிந்தவனும் இல்லை.

(க-து.) எல்லாம் அறிந்தவனும் இல்லை, ஒன்றும் அறியாதவனும் இல்லை; குற்றமே உள்ளவனும் இல்லை; அறியாமையே இல்லாதவனும் இல்லை.

பொருளுக்கேற்பச் செய்யுட் டொடரைப் பிரித்துரைத்துக்கொள்க. கணன் சிறுமை-ஈண்டு அறியாமை யென்னுஞ் சிறுமை யென்க. குணனும் கணனும் போலி. 'யாதொன்றும் - முற்றும்மை; ஏனைய உம்மைகள் எண்ணுப் பொருளன.

௱௩. மனைக்கு விளக்கம் மடவார் மடவார்
தமக்குத் தகைசால் புதல்வர் மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கும்
ஓதிற் புகழ்சா லுணர்வு.

(இ-ள்.) மனைக்கு விளக்கம் - வீட்டுக்கு ஒளி, மடவார் பெண்கள்; மடவார் தமக்கு - பெண்மக்களுக்கு ஒளி, தகைசால் புதல்வர் - நல்லியல்புகள் நிறைந்த மக்கள்; மனக்கு இனிய - பெற்றோர் மனத்திற்கு இனிமையான, காதல் புதல்வர்க்கு - அன்புமிக்க அம்மக்கட்கு ஒளி, கல்வியே - கல்வியறிவேயாகும்; கல்விக்கும் - அக்கல்வியறிவிற்கும் ஒளி, ஓதின் - சொல்லுமிடத்து, புகழ்சால் - புகழ்நிறைந்த, உணர்வு - மெய்யுணர்வேயாம்.

(க-து.) மனைக்கு விளக்கம் நன் மனைவி; நன் மனைவிக்கு விளக்கம் அறிவறிந்த மக்கள்; அம்மக்கட்கு விளக்கம் அறிவுநூற்கல்வி; அக்கல்விக்கு விளக்கம் மெய்யுணர்வு.

மனை-இருமடியாகு பெயர். விளக்கம் ஒளிக்குத் தொழிலாகுபெயர். மனக்கு அத்துச் சாரியை தொக்கது. புகழ்சாலுணர்வு மெய்யுணர் வென்க. முதலில் நின்ற விளக்கம் என்னுஞ்சொல் மற்ற மூன்றிடத்தும் கூட்டப்படுதலால், முதனிலைத் தீவகமாகும். இச்செய்யுள் மாலாதீவகம்.

௱௪. இன்சொலா னாகுங் கிழமை இனிப்பிலா
வன்சொலா னாகும் வசைமனம்-மென்சொலின்
நாவினா லாகு மருண்மனம் அம்மனத்தான்
வீவிலா வீடாய் விடும்.

(இ-ள்.) இன் சொலான் - இன்சொல்லால், கிழமை ஆகும் - ஒருவற்கு நட்புரிமை யுண்டாகும்; இனிப்பு இலா - இன்பமில்லாத, வன்சொலான் - வன்சொல்லினால், வசைமனம் ஆகும்-கெட்ட கருத்து உண்டாகும்; மென் சொலின் - நயமான சொல்லையுடைய, நாவினால் - நாக்கினால், அருள் மனம் ஆகும் - இரக்கமான எண்ணம் உண்டாகும்; அம் மனத்தான் - அவ்வருள் நெஞ்சத்தால், வீவு இலா - அழிதலில்லாத, வீடு ஆய்விடும் - வீடு பேறுண்டாகும்.

(க-து.) இன்சொல்லால் நட்புரிமையுண்டாகும்; வன்சொல்லாற் கெட்ட எண்ணங்க ளுண்டாகும்; நயமான சொற்களால் அருள்நெஞ்சம் உண்டாகும்; அவ் வருள்நெஞ்சத்தால் அழிவிலாத வீடு பேறுண்டாகும்.

நல்லோர் நட்புரிமையாற் றிருத்தமான நல்லெண்ணமும் அவ்வெண்ணத்தால் அருள்நெஞ்சமும், அதனால் வீடுபேறுமுண்டாகு மென்பது. வீவு, தொழிற்பெயர். ஆய்விடும் ஒருசொல். நா-என்றதனால் அதற்கினமாகிய மெய்ம்மனங்களின் அடக்கத்தையும் கொள்க.

மு ற் றி ற் று

# அருஞ்சொல்லகராதி

## எண்-பாட்டெண்

| | |
|---|---|
| அஃகுதல்-சுருங்குதல் | ௨௮ |
| அசனம்-சோறு | ௮௦ |
| அசுணமா-கேகயப்புள் | ௨ |
| அடல்-ஒழித்தல் | ௧௧ |
| அணங்கு தெய்வப்பெண் | ௭௯ |
| அணி-அழகு | ௭௯ |
| அதிர்தல்-நடுங்குதல் | ௧௧ |
| அருக்குதல்-சுருக்குதல் | ௮௭ |
| அலைத்தல்-அடித்துவருதல் | |
| அவை-சபை | ௨௦ |
| அவைக்குட்டம்-சபை என்னும் கடல் | ௧௯ |
| ஆக்கம்-சிறப்பு ௧௮, முற்போக்கு | ௧௧ |
| ஆக்கல்-வளர்த்தல் | ௨௯ |
| இகந்து முறைகடந்து | ௨௧ |
| இசை-புகழ் | ௧௫, ௨௮, ௯௦ |
| இடும்பை-துன்பம் | ௯௫ |
| இடையீடு-பற்று | ௮௭ |
| இழை-நகை | ௯௭ |
| இளநலம்-இளமையினழகு | ௧௭ |
| இறுவாய்-முடிவு | ௬௭ |
| இன்கண்-கனிந்த ஆதரவு | ௯௧ |
| இன்சொல்-நயவுரை | ௬௪ |
| இன்னாத்து-துன்பந்தருவது | ௬௦ |
| இன்னாமை-இழிவு, துன்பம் | ௧௫ |
| ஈடு இடையூறு | ௮௦ |
| உரவோர்-அறிவுடையோர் | ௨ |
| உரன்-வலிமை | ௱ |
| உழுவை-புலி | ௫௯ |
| உள்ளப்படும்-மதிக்கப்படும் | ௨௪ |
| ஊடுதல்-பிணங்குதல் | ௧௨ |
| ஊன்-இறைச்சி | ௨௯ |
| எள்ளற்க-இகழாதே | ௬ |
| ஒட்டார் பகைவர் | ௨௩ |
| ஒண்மை-அறிவுவிளக்கம் | ௫௦ |
| ஓரீஇவிடல்-நீக்கிவிடல் | ௮௫ |
| ஓங்கல்-வானம்பாடிப்புள் | ௩௫ |
| கண்-கண்ணோட்டம் | ௬௪ |
| கண்மாறல்-புறங்கூறல் | ௯ |
| கணன்-சிறுமை | ௱௨ |
| கதம் } கதன் } சீற்றம் | ௧௦, ௬௪ |
| கந்து-கட்டுத்தறி | ௬௦ |
| கயம்-கீழ்மை, | ௯௧ |
| கரவு-வஞ்சனை | ௬௪ |
| கலவர்-மரக்கலமுடையார் | ௯ |
| கலினம்-கடிவாளம் | ௬௭ |
| கழறல் இடித்துரைத்தல் | ௬௧ |
| கழிமடம் மிக்க அறியாமை | ௨௯ |
| கள்ளி-சதுரக்கள்ளி | ௫ |
| களி கட்குடியன் | ௫௯ |
| களிறு-ஆண்யானை | ௮௮ |
| கன்றுதல்-சினத்தல் | [illegible] |
| காங்கி-பேராசைக்காரன் | ௯ |
| காலேயம் பசுக்கூட்டம் | [illegible] |
| குட்டம்-ஆழம் | [illegible] |
| குழவி குழந்தை | [illegible] |
| குழாம்-கூட்டம் | [illegible] |
| கூற்றம்-கூற்றுவன் | [illegible] |
| கெழு-நட்புரிமை | [illegible] |
| கேளிர்-சுற்றத்தார் | [illegible] |
| கொந்துதல்-ஒறுத்தல் | [illegible] |
| கோடு-கொம்பு | [illegible] |
| சிதைத்தல்-கெடுத்தல் | [illegible] |
| சிலைத்தல்-சினந்துரைத்தல் | [illegible] |

சுரும்பு-வண்டு சஅ
செவ்வியன்-கைதேர்ந்த வன் கஅ
செறுதல் சினத்தல் சக
தகை-நல்லியல்பு ௱ங
தண்தார்-குளிர்பூமாலை சகூ
தமர்-சுற்றத்தார் கஉ
திருகுதல்-துன்பங்கருதல் கஉ
தாவுதல்-கெடுதல் எஎ
திணை-குடிப்பிறப்பு சO
தீர்தல்-பிரிந்துவாழ்தல் கங
துறக்கம்-வீட்டுலகம் ருஅ
துன்னுதல்-நெருங்குதல் ருரு
தூம்பு-நீர்க்கால் எக
தோம்-குற்றம் ககூ
நந்துதல் விளங்குதல் சஅ
நல்குரவு-வறுமை அக
நல்லாள்-நன்மக்கள் அ
நறா-தேன் சஅ
நிரப்பு-வறுமை கரு
நிறை-கற்பு கங
நுதி-கூர்மை எO
பகடு-எருது அக
பசைதல் விரும்புதல் கங
பட்டாங்கு-இயல்பு கO
படி-உலகம் உ
படைக்குட்டம்-பகைவரது படை என்னும் கடல் ககூ
பண்பு இயல்பு கO
பழனம்-வயல் க
பறை-ஒருமுகக் கருவி உ
பாசம்-கட்டு உ
பாடு பெருமை கஎ, அச
பாய்மா-தாவும் குதிரை கக
பிணித்தல்-கட்டுதல் கO
பீலை-காதல் கO
பீடு பெருமை கங
புலனுள்வார்-புலவர் ஙக
புள்-பறவை கரு
புற்கம்-புல்லறிவு உஅ
பூசுதல்-கழுவுதல் ஙச
பூவைப்பூ-காயாம்பூ க
பெட்டாங்கு-விரும்பியபடி கO
பேதைமை-மதியாமை உஉ
பேர்தல்-தவிர்தல் சக
பைங்கூழ்-பசும்பயிர் சச
பைத்தல்-சினத்தல் சாஎ
பொருநர்-சண்டைவீரர் சஉ
பொறி-(செல்வம்) திருமகள் சச
போழ்வார்-பிளப்பர் ககூ
மடி-வயிறு உ
மடிமை-சோம்பல் அஅ
மண்ணி-கழுவி ங
மம்மர்-அறியாமை உஉ
மலைத்தல்-சண்டை செய்தல் உங
மன்னுதல்-பொருந்துதல் கரு
மாசு-அழுக்கு கஅ
மாண்ட-பெருமைப்பட்ட கஅ
மிசைதல்-தின்னல் உகூ
முனிதக்கான்-வெறுக்கத்தக்க வன் அக
மிளிற்றுதல்-ஆரவாரித்தல் ஙரு
முனியாதவர்-சினவாதவர் ஙரு
மொய்-வலிமை உக
யாக்கை-உடல் ருO
யாத்தன-அளவுசெய்யப் பட்டன எஉ
வசை-தூறு ௱க
வடுச்சொல்-பழிமொழி ககூ
வண்மை-வளம் கச
வரை-எல்லை ருO

# செய்யுண் முதற்குறிப் பகராதி

# செய்யுண்முதற் குறிப்பகராதி

கழக வெளியீடு—கஅகூ

காரியாசான்

இயற்றிய

# சிறுபஞ்சமூலம்



பாளையங்கோட்டை, அர்ச்-சவேரியார் கல்லூரித்
தலைமைத் தமிழாசிரியர்

**வித்வான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்**

எழுதிய

**விளக்க வுரையுடன்**



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை

தாது—புரட்டாசி

உ

கடவுள் துணை:

# நான்முகம்

தமிழ்மொழி பல்லாயிரம் யாண்டுகளாகத் தோற்றமுற் றிலங்கும் உயர்தனிச் செம்மொழி. இதனைச் சங்கம் நிறுவிப் போற்றி வளர்த்த பெருமை பாண்டியர்க்கே யுரியது. பாண்டியர் நிறீஇய முச்சங்கங்களிற் கடைச்சங்க மிருந்து தமிழாராய்ந்தார், சிறு மேதாவியார், மருதனிளநாகனார், பெருங்குன்றூர்க்கிழார், நக்கீரனார் முதலானவர். அவர்கள் பாடியன கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையும், பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் பதினெண்கீழ்க் கணக்கும் என்றித் தொடக்கத்தன. இவற்றுள், பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மேற்கணக்கைச் சார்ந்தவை.

> "அடிநிமிர் பில்லாச் செய்யுட்டொகுதி
> அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
> திறம்பட உரைப்பது கீழ்க்கணக்காகும்"

என்ற பன்னிருபாட்டியற் சூத்திரமேற்கோளுக்கிணங்கக் குறைந்த அடிகளையுடைய செய்யுட்களான் அறம் பொருள் இன்பம் இவற்றைத் தழுவி அமைந்த நூல் கீழ்க்கணக்காகும். கணக்கு—நூல். கீழ்க்கணக்கு சிறுபான்மை ஐம்பதிற் குறைந்தும் ஐந்நூற்றின் மிக்கும் வரும். இனியது, இன்னா, கார், களவழி நான்கும் ஐம்பதிற் குறைந்து வந்தன. முப்பாலாகிய திருக்குறள் ஐந்நூற்றின் மிக்கு வந்தது. இக் கீழ்க்கணக்கு நூல்களையே "தாயபனுவல்," என்னும் பெயராற் கூறுவர் எனவும், இவை அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுவ எனவும், இடையிடை அவையன்றியுந் தாஅய்ச்செல்வது முண்டெனவும், இச் செய்யுட்கள் அடி நிமிராது இரண்டடி முதல் ஆறடி யிறுதியாக வருவன வெனவும், அவை பல எழுத்தினான் அகன்று காட்டாது சில எழுத்தினான் வருவன எனவும்,

ஒழுக்கமறிவுதவந்தானமுறவுசீலமுபசாரம
வழுக்கிலகருணையாசாரம்வாய்மைவணக்கமவந்தித்த
லழுக்கிலன்புதுறவடக்கமழுக்காறுடைமுதலறங்கண்
முழுக்கவருளுமுழுஞாக்குமுழுவெண்டிங்கணமுகத்தினாய் (கச)

சிரம்புகல்விபெருஞ்செல்விநீடுமாயுள்வலியூக்கம
பரம்புசூழ்ச்சிகலங்காமைபனுவல்வழியேபொருளீட்டல்
வரம்பில்கைபுகழாக்கன்மலியநுகர்தலிவையெல்லாங்
குரம்புமலியுமொருதீர்த்தங்குடைந்தோர்கெய்துங்கோற்றொடியே. (கரு)

உயிரொன்றிரண்டுவடிவெடுத்தாங்குவக்கும்பெருங்காதலினமுழுகிக்
கயில்வணகழற்காலாடவருங்கமழ்பூந்தெரியனமடவாரும
பயிலும்படியிற்றுறக்கத்திறப்டாப்பேரின்பநலநுகர்வா
செயிர்முற்றிரிக்குமொருதீர்த்தனுசென்றுபடியிறறேமொழியே (கசு)

அறிவுவளரும்புத்திரருமவர்தமவழியிறபுத்திரருஞ
செறிவொழுப்பவத்தோர்களுந்தீராநரகின்சிறைநீங்கு
நெறியினவர்தங்குலமுலகினீடுவாழும்பிதிர்த்தேவ
ரெறிவர்பரிவையொருதீர்த்தமெய்தியொருவராடுறினே. (கஎ)

வேறு.

தேசார்மணிக்கரைமேலெறிதிரைவார்தருதீர்த்த
மாசாரமொடன்பான்முறையாடுந்தவரல்லா
லேசார்தருமாசூசமுமெரிவெங்கதிர்வெப்பு
மாசானதுமொழியப்படிவாருமபயனுறுவார் (கஅ)

வழுக்கிக்கரைபுனல்வீழினுமவாரிப்பருகிடினு
மொழுக்கத்தெழுதிரைவீசியவுறைமெய்த்தலையுறினு
மழுக்கற்றிடுதீர்த்தந்துளையங்கிலங்குளிர்செயினு
முழுக்கக்கரிசொழியக்கதிமுற்றுங்கனிவாயாய். (கக)

தீர்த்தத்தெழில்விழிநோக்கினர்தீர்த்தத்திசைகேட்டோர்
தீர்த்தத்துறைமீஞதிகடர்த்தமவளர்சாரு
தீர்த்தமவிளைநெல்லாதிகளைவைத்தோர்குருகினமுந்
தீர்த்துக்கரிசுயர்வாரிதுதிண்ணஞ்சிறுநுதலாய (உ0)

இவ்வாறுயர்தீர்த்தத்தருகெய்தித்தவமாதி
செவ்வாய்மையபுரியிற்றிகழ்தானமபலசெயயி
னவ்வானருளபிதிரர்க்குளமமையக்கடனுறறித
துவ்வாவமிழ்தனையாய்பயன்சொலலின்முடியாதால (உக)

வேறு.

இன்னவாறியம்புமெமபிரானையேந்துகொங்கையா
ணன்னரோகைநணணிநாதவென்றுபோற்றியோதுவாண
முன்னரெண்ணிலாததீர்த்தமெய்த்தவறறுண்மேலவாய
மன்னிநின்றசில்லவென்றுவாய்மலர்த்தியண்ணலே. (உஉ)

முப்பால்", "நன்னிலைய வாங்கீழ்க் கணக்கு" எனச் சிறிது சிறிது வேறுபட்டுக் காணப்படுதலின், சிலர் இன்னிலை யென்று பொய்கையார் பாடிய 45 வெண்பாக்களடங்கிய நூலை மேற்குறித்த கைந்நிலைக்குப் பதிலாகக் கூறுவர். கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டு இவையே என்று இன்னும் வரையறுக்கப்படாமைவியப்பே.

மருத்துவ நூலிற் கூறப்பட்ட கண்டங்கத்திரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், நெருஞ்சிவேர், பெருமல்லிவேர் ஆகிய பஞ்ச மூலங்கள் மக்கள் பிணிகளைத் தீர்ப்பது போல, இந்நூல் தன்னில் அமைந்த ஒவ்வொரு செய்யுட்களிலும் அடங்கிய ஐந்தைந்து பொருள்களாலும் தன்னைப் படித்துணர்கின்றவர் பிறவி நோயைப் போக்கத்தக்க நல்லொழுக்க நெறிகளை விளக்கிக் காட்ட வல்லது.

இந்நூல் இயற்றியவர் **காரியாசான்**. இவர் ஆசிரியர் **மாக்காயனுர்**. இவை இந்நூற் பாயிரச் செய்யுளால் விளங்கும். இந்நூலாசிரியர் சைன மதத்தவராவர்.

இந்நூல் பாயிரச் செய்யுள் உள்பட 100 செய்யுட்கள் கொண்டது. இவற்றில்.

"வைதா னொருவ னினிதீய வாழ்த்திய
தெய்தா வுரையை யறிவானே — னெய்த
லறிவறி யாவாண் டெனவுரைப்பார் வாயுட்
டறிவெறியார் தக்காரே தாம்"

"நெடியமண் ணொன்றுராஅ யத்தன்
தெவ்வர் தலைப்பா னிவையென்னும் பெற்றுனைத்
தெய்வமாத் தேறுமாற் றேர்ந்து"

என்ற இரண்டு செய்யுட்களின் மூலமட்டும் வழூச்செறிந்து சிதைந்து பொருள் கண்டு கொள்ளக்கூடாத முறையில் அமைந்துள்ளன. இந்நூலிற் பதிப்பித்துள்ள பழைய பொழிப்புரை கொண்டு இற்றைக்கு அறுபதாண்டுகட்கு முன் யுவ ஆண்டில் வெளியான பதிப்பிலும் இதே பாடங் காணப்படுகின்றது. ஆதலின்

எங்கேனும் கிடைக்கும் சிறுபஞ்சமூலம் ஏட்டுச் சுவடியில் இவ்விரண்டு பாடல்களின் மூலமும் உரையும் காணப்படுமேல் அவற்றை அடுத்த பதிப்பில் வெளியிடக் காத்திருக்கின்றேம். அச்சிட்டு வெளியாயுள்ள செய்யுள் மூலங்களிற் கண்ட பாடபேதங்கள் சில புறத்திரட்டுப் போன்ற நூல்களிற் கண்ட செய்யுட் பாடத்துக்கேற்பத் திருத்தியமைக்கப்பெற்றுள்ளன. இப்பொழுது எழுதப்பெற்றுள்ள உரை பெரும்பாலும் செந்தமிழ் நடையில் விளக்கமான முறையில் அமைக்கப்பெற்றிருப்பதும் பொழிப்புரை, கருத்துரை, விளக்கவுரைகளும் ஏற்றவாறு அமைக்கப்பெற்றிருப்பதுங் கற்போர்க்கு இன்பத்தை யெளிதிலூட்டுமென் றெண்ணுகின்றேம்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் தக்க உரையெழுதப்பெறாமலிருக்கும் நூல்கட்கும் இதுபோல் விளக்கவுரை யெழுதித்தரக் கேட்டு, அங்ஙனமே எழுதியவற்றை யச்சிட்டுத் தமிழுலகிற் குதவிவருந் திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு எமது உளமார்ந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவிக்கின்றனம்.

இந்நூல் அச்சிடப் படுங்காலத்து ஒப்பு நோக்கித் திருத்தம் பரிந்துதவிய திருச்சி அரசினர் மகமதிய உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியர் திரு. அ. நடராச பிள்ளையவர்கட்கு எம் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

இவ்விளக்கவுரை தமிழ்க்கலைப்பயிற்சி கருதும் அறிஞர்கட்கும், பள்ளிமாணவர்கட்கும் பெரிதும் பயன்படுமாதலின், தமிழகத்தார் இத்தகைய வெளியீடுகளை விருப்புடன் ஏற்றுப் போற்றுவார்களாக. இறைவன் திருவருள் முன்னிற்க.

"புலவரகம்"<br>பாளையங்கோட்டை,<br>25—9—1936

இங்ஙனம்,<br>பு. சி. புன்னைவனநாதன்,<br>தமிழாசிரியர்.

ஓம்

# சிறுபஞ்சமூலம்

## மூலமும் விளக்கவுரையும்.

---

### கடவுள் வாழ்த்து.

முழுதுணர்ந்து மூன்றொழித்து மூவாதான் பாதம்
பழுதின்றி யாற்றப் பணிந்து—முழுதேத்தி
மண்பாய ஞாலத்து மாந்தர்க் குறுதியா
வெண்பா வுரைப்பன் சில.

(பதவுரை) முழுது உணர்ந்து - எல்லாவற்றையும் அறிந்து, மூன்று ஒழித்து - காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் நீக்கி, மூவாதான்- மூப்பில்லாதவனாகிய கடவுளின், பாதம்- திருவடிகளை, பழுது இன்றி - குற்றம் இல்லாமல், ஆற்ற - மிகுதியாக, பணிந்து - வணங்கி, முழுது எத்தி - (அவனுடைய மங்கள குணங்கள்) முழுவதும் போற்றி, மண் - மண்ணானது, பாய - பரவியிருக்கின்ற, ஞாலத்து - இப்பூமியிலுள்ள, மாந்தர்க்கு - மக்கட்கு, உறுதியா - நன்மை யுண்டாகுமாறு, சில வெண்பா - சில வெண்பாச் செய்யுட்களால் ஆகிய சிறுபஞ்சமூலம் என்னும் இந்நூலை, உரைப்பன் - யான் சொல்வேன்; (என்றவாறு.)

(பழைய பொழிப்புரை) காமாதி மூன்றையு மொழித்து முற்றுமுணர்ந்து, மூப்பில்லாதான் பாத மனக்குற்ற நீக்கி மிகவும் வணங்கிப் பல குணங்களைப் புகழ்ந்து மண்பரந்த வுலகில் மக்கட் கெல்லாம் உறுதியாகிய பொருள்மேற் றொடுத்து வெண்பாவாகிய சில செய்யுட்களை யுரைப்பேன்.

(கருத்துரை) நிலைபெற்ற கடவுளின் அடிகளை வணங்கிப் போற்றி இந்நிலவுலகினார்க்கு நன்மை யுண்டாகுமாறு இந்நூலை யான் கூறுவேன்.

இச்செய்யுளில் கடவுள் வணக்கமும் செயப்படு பொருளும் உரைக்கப் படுகின்றன வாதலின், இது சிறப்புப்பாயிரம் எனப்படும். ஆசிரியர், தாம் எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முடிதற் பொருட்டு ஆன்றோர் முறைப்படி இக் கடவுள்வாழ்த்துக் கூறினார்.

முழுதுணர்தல் - எல்லாம் அறிதல். மூவாதான் - மூ என்னும் பகுதியடியாகப் பிறந்த எதிர்மறை வினையாலணையும் பெயர். மூவாதான் என்றமையால் கடவுளின் என்று மொருபடித்தா யிருக்குந் தன்மை யுணரப்படும். பழுது - வழிபாடு செய்தலில் தவறுதல். பணிதல் - தன்முயற்சியின்றி யடங்குதல். உறுதி - அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்கள். சில வெண்பா என்பது கருவியாகு பெயராய்ச் சில வெண்பாக்களாலாகிய நூலை யுணர்த்திற்று. உறுதியாக என்பது உறுதியா எனக் ககரந்தொக்கு நின்றது. பாய - இறந்த காலப் பெயரெச்சம். 'சிறு பஞ்சமூலம்' என்ற இந்நூற் பெயர்க்கேற்ப இதன் ஒவ்வொரு செய்யுளிலும் ஐந்து பொருள்கள் அமைந்திருத்தல் வேண்டும். அம்முறைப்படி, இக் கடவுள் வாழ்த்துச் செய்யுளிலும் முக்குற்ற மொழித்தலில் மூன்றும், முழுதுணர்தல் ஒன்றும், மூவாமை ஒன்றும் ஆக ஐந்து பொருள்கள் அமைந்திருத்தல் காண்க. (க)

## நூல்

ஒத்த வொழுக்கங் கொலைபொய் புலால்களவோ
டொத்த விவையல வோர்நாலிட்—டொத்த
உறுபஞ்ச மூலந்தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலஞ் சிறந்து.

(ப-ரை,) ஒத்த - பொருந்திய, ஒழுக்கம் - நன்னடக்கை, கொலை - கொல்லுதல், பொய் - இல்லது கூறல், புலால் - புலால்

உண்ணுதல், களவு ஓடு - திருட்டு ஆகிய இவற்றுடனே, ஒத்த - பொருந்திய, இவை அல - இவற்றுக்கு எதிரிடையாகிய, ஓர் - ஒரு, கால் இட்டு - (கொல்லாமை, பொய் கூறாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை என்னும்) நான்கையுஞ் சேர்த்து, ஒத்த - உலகிற் பொருந்திய, உறு - மிகுதியாகிய, பஞ்ச மூலம் - சிறுவிலைக் காலத்தின் காரணத்தை, தீர் - அகற்றுகின்ற, மாரி போல் - மழையைப் போல, சிறு பஞ்சமூலம் - (நோய்களை யகற்றும்) சிறு பஞ்ச மூலங்களைப் போன்ற இந்நூலை, சிறந்து - சிறப்புற்று, கூறீர் - (கல்வியறிவாளரே! நீங்கள் மக்கள் தீய குணங்களை நீக்கி நற் குணங்களைப் பெருக்குமாறு) சொல்லக்கடவீர்; (எ-று.)

(ப-பொ-ரை.) பொருந்திய வொழுக்கங் கொலை பொய் புலால் களவோ டொத்த வினையன்றி யிவற்றுக்கு மறுதலை யாகிய நான்கு மென்று சொல்லப்பட்ட விவ்வைந்து மகப் பட்ட மிக்க பஞ்சத்தின் மூலத்தைத் தீர்க்கு மாரிபோலச் சிறு பஞ்சமூலமென்று மருந்தாகக் கூறீர் மிக்கு.

(க-ரை.) பஞ்சத்தைத் தீர்க்கும் மழையைப்போல மக்கள் வினைகளைத் தீர்க்கும் இச் சிறுபஞ்ச மூலமும் என்க.

இந்நூலில் ஒழுக்கம் கொலையின்மை முதலிய ஐந்தைப் பற்றிய பொருள்களே வருதலால், இவ்வைந்தையுஞ் சேர்த்துச் சிறுபஞ்ச மூலங் கூறீர் என்றார். கொல்லாமை, பொய்யாமை, புலாலுண் ணாமை, கள்ளாமை முதலியனவும் ஒழுக்கத்தில் அடங்கு மெனினும், சிறந்த அறங்களாக நிற்பதால் அவை நான்கையுந் தனித்தனி அற மாகக் கொண்டு மற்ற அறங்களை யெல்லாம் ஒன்றாக்கி இவ்வைந்தை யுஞ் சேர்த்துச் சிறுபஞ்சமூலமெனக் கூறினார். சிறு பஞ்சமூலம்- உவமையாகுபெயர். சிறு பஞ்சமூலங்களாவன - சிறிய ஐந்து வேர்கள்; அவை கண்டங்கத்திரி வேர், சிறு வழுதுணை வேர், சிறு மல்லி வேர், பெருமல்லி வேர், நெருஞ்சில் வேர். இந்நூலிலுள்ள ஒவ்வொரு வெண்பாவும் உயிர்க்குறுதி பயக்கும் அவ்வைந்து பொருள்களையுடைமையால், இந்நூலும் சிறு பஞ்சமூலம் எனப்பட லாயிற்று. ஒழுக்கமும், ஓர் நாலும் எனக்கூட்டுக. உறு - மிகுதி;

உரிச்சொல். தீர்மாரி - வினைத்தொகை. அல - எதிர் மறை வினையாலணையும் பெயர். கூறீர் என்பதற்கு நீங்கள் என்பது வினை முதலாக வருவிக்கப்பட்டது. (உ)

பொருளுடையான் கண்ணதே போக மறனு
மருளுடையான் கண்ணதே யாகு—மருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியு
முய்யான் பிறர்செவிக் குய்த்து.

(ப-ரை.) போகம் - உலக இன்பமானது, பொருள் உடையான் கண்ணதே ஆகும் - செல்வப் பொருளுடையவனிடத் துண்டாகும், அறனும் - நல்லொழுக்கமும், அருள் உடையான் கண்ணதே ஆகும் - இரக்க முள்ளவனிடத்தி லுள்ளதாகும், அருள் உடையான் - அத் தகைய அருளையுடையவன், பழி செய்யான் - பழிக்கப்படுந் தீய செயல்களைச் செய்யான், பாவம் சேரான் - தீவினையைச் செய்ய மனத்திலும் நினையான், புறமொழியும் - புறங்கூற்றுச் சொற்களை யும், பிறர் செவிக்கு - மற்றையவர் காதுகளில், உய்த்து - செலுத்தி, உய்யான் - பிழைக்க மாட்டான்; (எ-று.)

(ப-பொ-ரை.) பொருளுடையான் கண்ணதே யாகும் இன்பம்; அறவினையும் உயிர்கள்மேல் அருளுடையான் மாட்டேயாகும்; அவ்வருளுடையான் பழியைச் செய்யான், பாவத்தை யடையான், பிறர் செவியின்கட்செலுத்திப் பிறரைப் பழிபடக் கூறும் புறமொழிகளையும் நடத்தான்.

(க-ரை.) பொருளுள்ளவனுக்கு இன்பம் பெருகும்; அருளுள்ளவனுக்கு அறம் விளையும்; அருளுள்ளவன் பழியையும், தீவினையையும் புறங்கூறுதலையுஞ் செய்யான்.

'பொருளுடையான் கண்ணதே போகம்,' என்றதனாற் போகத்தைத் தரக்கூடிய பொருளைத் தேடிக்கொள்ள வேண்டியது இன்றியமையாத தென்பது பெறப்படும். 'அருளிலார்க் கவ்வுலக மில்லை' என்ற குறட்பொருள், 'அறனும் அருளுடையான் கண்ணதே

யாகும்,' என்பதில் அடங்கி யுள்ளது. அறன் - அறம் என்பதன் போலி. ஆகும் என்பது தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப் பட்டது. செவிக்கு - ஏழனுருபு நான்கனுருபாக மயங்கிவந்த உருபு மயக்கம். செவியிற்கு என்றும் பாடம். (ரு)

கற்புடைய பெண்ணமிர்து கற்றடங்கி னனமிர்து
நற்புடைய நாடமிர்தந் நாட்டுக்கு—நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனு
மாகவே செய்யி னமிர்து.

(ப-ரை.) கற்பு உடைய பெண் - கற்புள்ள பெண்ணனவள், அமிர்து - தன் கணவனுக்கு அமிர்தம் போல்வாள், கற்று - (அறிவு நூல்களைக்) கற்று, அடங்கினன் - (அவற்றின் வழியில்) அடங்கி நிற்பவன், அமிர்து - (உலகத்தார்க்கு) அமிர்தம் போல்வான், நற்பு உடைய நாடு - நன்மையுள்ள நாடு, அமிர்து - (அந்நாட்டரசனுக்கு) அமிர்தம் போன்றது, அ நாட்டுக்கு - அந்த நாட்டுக்கு, நற்புடைய மேகமே சேர் கொடி வேந்து - நன்மையைச் செய்கின்ற மேகத்தை யளாவுகின்ற கொடியையுடைய அரசன், அமிர்து - அமிர்தம் போல் இன்பஞ் செய்வான், சேவகனும் - (அவ்வேந்தனது) சேவ கனும், ஆகவே செய்யின் - (அவ்வேந்தனுக்கு) நன்மையான வற்றையே செய்வானாயின், அமிர்து - அவ்வேந்தனுக்கு அமிர்தம் போல்வான் ; (எ-று.)

(ப-போ-ரை.) கற்புடைய பெண் தனது கொழுநற்கு அமிர்தோ டொக்கும், கற்றுவைத்துப் பொறிகளைந்தையும் அடக்கினன் உலகத்தார்க்கு அமிர்தோ டொக்கும், நற் செய்கைகளையுடைய நாடுகள் அந்நாடாளும் அரசர்க்கு அமிர்தோடொக்கும், அந்நாட்டிற்கு மழைபோல நன்மையைச் செய்யும் மேகத்தைச் சேர்ந்த கொடி வேந்த னமிர்தோ டொக்கும், அவன் சேவகனும் அவ்வரசற்கு நன்மையாகவே செய்யின் அமிர்தோ டொக்கும்.

(க-ரை.) கற்புடைப் பெண், கற்றடங்கினன், நாடு, வேந்து, சேவகன் இவர்கள் முறையே கணவன் முதலியவர்களுக்கு அமிர் தம் போல் நின்று உதவுவார்கள்.

கற்பு - கணவன் முதலானோரிடத்து நடக்கவேண்டிய முறை மைகள் எல்லாவற்றையுங் கற்றல்; தொழிற் பெயர். அடங்குத லாவது - உளம் உரை செயல்கள் அடங்கப்பெறுதல். மேகம்சேர் என்பதற்கு மேகத்தின் தன்மையெனின், மேகம் பொருளாகு பெயர். நற்பு - நன்மை என்னும் பண்படி விகாரம். ஆகவே என்பதை ஆகு + அவே என்று பிரித்து நன்மையாகின்ற அத் தொழில்களையே எனக் கூறுதலு முண்டு. அமிர்து - மரணத்தி னின்று தவிர்ப்பது. இது சாவா மருந்து, மூவா மருந்து எனப் படும். (௬)

கல்லாதான் றான்காணு நுட்பமுங் காதிரண்டு
மில்லாதா ளெக்கழுத்தஞ் செய்தலு—மில்லாதா
னெல்லாப் பொருளில்லார்க் கீத்தளியா னென்றலு
நல்லார்கள் கேட்பி னகை.

(பு-ரை.) கல்லாதான் - (ஆசிரியனிடத்துக் கற்கவேண்டிய முறைப்படியே) கல்லாதவனாகிய ஒருவன், தான் காணும் - தானே ஆராய்ந்து காண்கின்ற, நுட்பமும் - நுண்பொருளும், காது இரண் டும் - இரண்டு காதுகளும், இல்லாதாள் - இல்லாதவளாகிய ஒருத்தி, எக்கழுத்தம் செய்தலும் - (தான் மிக்க அழகுடையவளென்று) இறுமாப்படைதலும், இல்லாதான் - கையிற் பொருளில்லாதவன், இல்லார்க்கு - தன்னைப்போற் பொருளற்ற வறியவர்கட்கு, ஒல்லாப் பொருள் - அவர்களின் விருப்பந் தணிவதற்குப் பொருந்தாத பொருளை, ஈந்து - கொடுத்து, அளியான் - (தான் வறியவரிடத்து மிகவும்) அருளுடையவன், என்றலும் - என்று தற்பெருமை சொல்லுதலும், நல்லார்கள் - அறிவுடையவர்களாகிய நல்லவர்கள், கேட்பின் - கேட்டால், நகை - அவர்கட்குச் சிரிப்பை உண்டாக் கும்; (எ-று.)

(ப-போ-ரை.) கல்லாதா ெனாருவன் தான் ஆராய்ந்து காணும் நுண்மைப்பொருளும், காதிரண்டும் இல்லாதாள் அழகுடையேன் என்றெடுத்த முகத்தினளா யொழுகலும், பொருளில்லாதவன் இல்லாதார்க் கீய்த்தறியா னென்றலும், ஒருவன் தான் தனக்கியன்ற பொருளன்றி யியலாத பொருளை ஈயாதா னென்றலும் அறிவுடைய நல்லோர் கேட்பின் நகையாம்.

(க-ரை.) கல்லாதான் நுட்பம் முதலானவை அறிஞர்க்கு நகைப்பினையே விளைவிக்கும்.

ஆசிரியனிடத்து நூல்களை முறைபெறக் கல்லாதவன் நுண் பொருளாய்ந்து நுவலப்புகின், நேர் பொருளன்றி இடக்கர்ப் பொருளையே விரிக்க முற்பட்டு அறிஞர் இகழ்ச்சிக்கு உரியவ னுவன் என்க. "கல்லாதாெனாட்பங் கழிய நன்றாயினுங் கொள்ளா ரறிவுடையார்," என்ற குறளும், "கற்றதூ உ மின்றிக் கணக்காயர் பாடத்தாற், பெற்றதாம் பேதையோர் சூத்திரம் - மற்றதனை, நல்லா ரிடைப்புக்கு நாணாதுசொல்லித்தன், புல்லறிவு காட்டிவிடும்", என்ற நாலடியும் மேற்படி பொருளை வலியுறுத்துவனவாம். காதுகளே பெண்கள் முகத்துக்கு நகையணிந்து அழகு செய்யும் சிறப்புறுப்பா கும். கல்லாதான் நுட்பம், காதில்லாள் இறுமாப்பு, இல்லாதான் ஒல் லாப் பொருளீதல், அளியானென்றல், நல்லார் கேட்டு நகைத்தல் ஆகிய ஐந்து பொருள்களும் இச்செய்யுளில் அமைந்திருத்தல் காண்க. நுட்பம் - குணவாகு பெயர். ஏக்கழுத்தம் - இறுமாப்பு. "எள்ளு நர்கட் கேக்கழுத்தம் போல இனிதன்றே," என்னும் சிந்தாமணி (காந்தரு ௬.) அடியின் பொருளை நோக்குக. அளியான்- தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. காதிரண்டும் - உம்மை முற்றுப்பொருள். (ரு)

உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்றீண்
டிடம்பொழிய வேண்டுமே லீகை—மடம்பொழிய

வேண்டி னறிமடம் வேண்டேல் பிறர்மனை
யீண்டி னியையுந் திரு.

(ப-ரை.) உடம்பு - உடலெடுத்தல், ஒழிய வேண்டின் - உன்னை விட்டு நீங்கவேண்டுமாயின், உயர்தவம் - உயர்ந்த தவத்தை, ஆற்று - செய்வாயாக, ஈண்டு - இவ்வுலகத்தில், இடம் - நீ இருக்கும் இடமானது, பொழிய வேண்டுமேல் - புகழான மேன்மையடைய வேண்டுமானால், ஈகை ஆற்று - (இரப்பவர்க்கு வேண்டியவற்றைக்) கொடுத்தலைச்செய்வாயாக, மடம் பொழிய வேண்டின் - மெல்லிய வீரம் தனக்குள்ளே நிறைய வேண்டினையாயின், அறிமடம் - அறிவின்கண் அடங்கி யொழுகுக, பிறர்மனை வேண்டேல் - பிறர்மனைவியை விரும்பாதொழிக, ஈண்டின் - சிறிதாயினும் வருவாய் நாடோறும் பொருந்துமாயின், திரு இயையும் - செல்வம் வந்து தானே நிறையும் ; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறப்பான் வரும் உடம்பை நீக்க வேண்டினையின் உயர்தவத்தைச் செய்க, இவ்வுலகத்தினிடமெல்லாந் தன்புகழால் நிறைய வேண்டினையின் ஈகையைச் செய்க, மெல்லிய வீரம் தனக்கு நிறைய வேண்டினையின் அறிவின்கண் அடங்கி யொழுக, பிறர் மனையாளை விரும்பா தொழிக, சிறிதாயினும் வருவாய் நாடோறும் ஈண்டிற் செல்வம் ஒருவற்கே கூடும்.

(க-ரை.) பிறவி யொழியத் தவமும், புகழ் நிறைய ஈகையும், உள்ளம் தூய்மையாய் நிரம்ப அறிந்தும் அறியாமையும், பிறர்மனை நயவாமையும், வருவாய் நாடோறும் சிறிதாகச் சேர உண்டாகும் செல்வமும் ஒருவற்கு வேண்டற்பாலனவாம்.

'ஈதலிசைபட வாழ்தலதுவல்ல தூதியமில்லை யுயிர்க்கு' என்றமையால் ஈகை ஆற்று எனப்பட்டது. மடம் என்பது மென்மை. ஈண்டு மென்மையின் பயனாகிய இணக்கத்தை யுணர்த்துகின்றது. தான் கூறுவது அறியமாட்டாதாரிடத்து, அவரறியாமையைக்

கூறின் அவரோடிணங்குதற்குத் தடையுண்டாமாதலின், "மடம் பொழிய வேண்டி னறிமடம்," என்றார். அறிமடமாவது - தான் கூறுவது அறியும் அறிவில்லார் மாட்டு அவரறிய மாட்டாமையைத் தானறிந்தும் அறியாதான் போன்றிருத்தல். அவர் அறியாமையை அவருக்குத் தெரிவிப்பின் பயனில்லை என்றவாறாயிற்று. பாவங்களிற் கொடியது பிறர்மனை விரும்பல் ஆதலின், பிறர்மனை வேண்டேல் என்றார். வள்ளுவரும், "பகைபாவ மச்சம் பழியென நான்கும், இகவாவா மில்லிறப்பான் கண்," என்றனர்- ஆற்று என்பது தீபகமாக மூன்றிடங்களிலும் கூட்டப்பட்டது. மனை - மனையாள்; இடவாகு பெயர். (கூ)

படைதனக்கு யானை வனப்பாகும் பெண்ணி
னிடைதனக்கு நுண்மை வனப்பா—நடைதனக்குக்
கோடா மொழிவனப்புக் கோற்கதுவே சேவகர்க்கு
வாடாத வன்கண் வனப்பு.

(ப-ரை.) படை தனக்கு - நால்வகைப்படைக்கு, யானை வனப்பு ஆகும் - யானைப் படையே அழகாகும், பெண்ணின் - பெண்ணினுடைய, இடைதனக்கு - இடைக்கு, நுண்மை - நுட்பமானது, வனப்பு ஆம் - அழகாகும், நடைதனக்கு - ஒருவனுடைய ஒழுக்கத்திற்கு, கோடா மொழி - நடுநிலை தவறாத சொல்லே, வனப்பு - அழகாகும், கோற்கு - செங்கோலுக்கும், அதுவே - அந்தக் கோடா மொழியே அழகாகும், சேவகர்க்கு - போர் வீரர்க்கு, வாடாத - கெடாத, வன்கண் - வீரமானது,வனப்பு - அழகாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) படைக்கு வனப்பாவது யானை, பெண்ணிடைக்கு வனப்பாவது நுண்மை, ஒழுக்கத்துக்கு வனப்பாவது ஒருவற்காகப் பாங்குரையாமை, செங்கோலுக்கு வனப்பாவது ஒருவர்க்குப் பாங்குரையாமை, சேவகர்க்கு வனப்பாவது கெடாத வன்கண்மை.

(க-ரை.) சேனைக்கு யானைப்படையும், பெண்கள் இடைக்குச் சிறுமையும், ஒழுக்கத்துக்கும் அரசன் செங்கோலுக்கும் நடுவு நிலை பிறழாத சொல்லும், படை வீரர்க்கு அஞ்சாமையும் அழகாகும்.

கரி, பரி, தேர், காலாள் என்ற நால்வகைச் சேனையில் கரிப் படை சிறந்ததாதலின், படைதனக்கு யானை வனப்பாகும் என்றார். சேவகர்க்கு எதிரிகளால் உடற்கு ஊறு வந்த காலத்தும் குறையாத வீரத்தன்மையே அழகாதலின், சேவகர்க்கு வாடாத வன்கண் வனப்பு என்றார். படைதனக்கு, இடைதனக்கு முதலியவற்றிலுள்ள தனக்கு என்பதில் தன், அ - சாரியைகள். நுண்மை - பண்புப் பெயர். ஆகும் - இசையெச்சம். கோல் - செங்கோல்; உவமையாகு பெயராய்க் கண்ணோடாது குடிகள் யாவரிடத்தும் முறை செய்தலை யுணர்த்தியது. வன்கண்மை என்பது வன்கண் என மையீறு கெட்டு நின்றது. (எ)

பற்றினன் பற்றற்ற னூறவசி யெப்பொருளு
முற்றின னுகு முதல்வனூற்—பற்றினற்
பாத்துண்பான் பார்ப்பான் பழியுணர்வான் சான்றவன்
காத்துண்பான் காணன் பிணி.

(ப-ரை.) பற்று அற்றான் - எல்லாப் பொருள்களிலுங் கலந்து நின்றே அவற்றிற் சார்பில்லாதவனாகிய கடவுளாற் செய்யப்பட்ட, நூல் - முதனூலை, பற்றினன் - கடைப்பிடித்து ஒழுகுகின்றவன், தவசி - வீடு பேற்றை விரும்பி நோற்பவனாவான், எப்பொருளும் - எல்லாப் பொருளையும், முற்றினன் - முற்றவுணர்ந்தவன், முதல்வன் ஆகும் - எல்லார்க்குந் தலைவனாவான், நூல் பற்றினல் - நூல்களிற் கூறப்பட்ட அறங்களைக் கைக்கொள்வதனால், பாத்து உண்பான் - தன் மனைக்கு வரும் விருந்தினர் முதலியவர்களை யுண்பித்துத் தானும் உண்கின்றவன், பார்ப்பான் - அந்தணனாவான், பழி உணர்வான் - பழிக்கு ஏதுவான செயல்களை அறிந்து விலக்குவோன், சான்றவன் - அறிவா னிறைந்த பெரியோனாவான், காத்து -

உடற்குப் பொருந்தாத உணவுகளை மறுத்து, உண்பான் - உண்பவன், பிணிகாணன் - நோய் கொள்ளான்; (எ-று.)

(ப-பொ-ரை.) பற்றற்றானாற் சொல்லப்பட்ட நூலைப் பற்றினான் தவசியாவான், எப்பொருளையுமுற்ற வறிந்தான் முதல்வனாவான், நூலின்கட் சொன்னபடியே பகுத்துண்பான் பார்ப்பானாவான், பழியை யுணர்வான் சான்றோனாவான், தனக்கு நுகர்கலாகாதென்று சொல்லியவற்றை நுகராதே காத்து நுகர்வான் பிணிகாணான்.

(க-ரை.) கடவுள் நூலுணர்ந்தொழுகுபவன் தவமுடையன், எல்லா முணர்ந்தவன் தலைவன், பிறர்க்குப் பகுத்துக்கொடுத்துண்பவன் அந்தணன், பழியை விலக்கி யொழுகுபவன் பெரியோன், நல்லன தெரிந்துண்பவன் நோயறியான்.

பற்றற்றான் - தொடர்பற்றவனாகிய முழுமுதற் கடவுள். 'பற்றுக பற்றற்றான் பற்றினை,' என்றார் திருவள்ளுவர். பற்றற்றான் நூல் என்பது இறைவன் ஓதிய வீட்டு நூல். எப்பொருளையும் உணர்ந்தவன் பலரையும் நல்லாற்றுப்படுத்துந் திறனுடையனாகவே அவனை யாவருந் தலைமகனாகக்கொண்டு போற்றுவார் என்பார், 'எப்பொருளும் முற்றினானாகு முதல்வன்', என்றார். பழியை யறிந்து நீக்குவோன் எல்லாராலும் பாராட்டடப்படுஞ் சிறப்புடையவனாதலிற் சான்றோன் எனப்பட்டான். "அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்க துவரப் பசித்து," "மாறுபாடில்லாத வுண்டி மறுத்துண்ணின் ஊறுபா டில்லை யுயிர்க்கு," என்னுங் குறட்பொருளுணர்ந்து, கொள்ளத் தகாத வுணவை நீக்கிக் கொள்ளத் தக்க வுணவைக் கொள்வோன் நோயற்று வாழ்வான் என்பார், 'காத்துண்பான் காணான் பிணி', என்றார். பாத்து-பகுத்து என்பதன் மரூஉ. காத்தல் - தடுத்தல், மறுத்தல். (அ)

கண்வனப்புக் கண்ணோட்டங் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப் பித்துணையா மென்றுரைத்தல்—பண்வனப்புக்

கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் றன்னடு
வாட்டானன் றென்றல் வனப்பு.

(ப-ரை.) கண் வனப்பு - கண்ணுக்கு அழகாவது, கண்ணேட்டம் - பிறர்மேற் கண்ணேடுதலாம், கால் வனப்பு - கால்களுக்கு அழகாவது, செல்லாமை - பிறரிடத்தில் இரக்கப் போகாமையாம், எண் வனப்பு - ஆராய்ச்சிக்கு அழகாவது, இத்துணை ஆம் என்று உரைத்தல் - பொருளை அறுதியிட்டு முடிவு செய்தலாம், பண் வனப்பு - இசைக்கு அழகாவது, கேட்டார் - அதனைக் கேட்டவர்கள், நன்று என்றல் - இது நல்லது என்று புகழ்ந்துரைத்தலாம், கிளர் - புகழினல் விளங்குகின்ற, வேந்தன் வனப்பு- அரசனுக்கு அழகாவது, தன் நாடு - தனது நாட்டிலுள்ள குடிகளை, வாட்டான் - (இவன்) வருத்தான், நன்று (இவனுடைய ஆட்சி) நல்லது, என்றல் - என்று (உலகத்தவர் அவனைப் புகழ்ந்து) கூறுதலாம் ; (எ-று.)

(ப-பொ-ரை) கண்ணிற்கு வனப்பாவது பிறர்மேற் கண்ணேடுதல், காலிற்கு வனப்பாவது பிறர் மாட்டிரந்து செல்லாமை, ஆராய்ந்து சூழுஞ் சூழ்ச்சிக்கு வனப்பாவது இவ்வளவு இன்னதென்று துணிந் துரைத்தல், பாடும் பண்ணிற்கு வனப்பாவது கேட்டார் நன்றென்றல், படை கிளர்ந்தெழும் வேந்தற்கு வனப்பாவது தானாளும் நாட்டினை வருத்தான் மிகவும் நன்றென்றல்.

(க-ரை.) கண்ணுக் கழகு கண்ணேட்டம், காலுக்கழகு இரந்து செல்லாமை, ஆராய்ச்சிக் கழகு பொருளைத் துணிந்து சொல்லுதல், இசைக் கழகு கேட்பவர் அதனைப் புகழ்தல், அரசனுக் கழகு குடிகள் அவனை நல்லவ னென்றல்.

கண்ணேட்டம் - கண் பிறர்மேற் செல்லுதல். அதாவது அன்புடன் பார்த்தல்; அருட்பார்வையற்ற கண் கொடுங்கண், வன்கண் எனப்படும். செல்லாமை - நடவாமை. கண் வனப்பு கால் வனப்பு முதலிய நான்கும் நான்காம் வேற்றுமைத் தொகை

கள். எண் - எண்ணுதல்; ஆராய்ச்சி. 'வேந்தன் தன்னுடு வாட்டான் நன்றென்றல் வனப்பு' என்பதை வேந்தன் வனப்பு தன் நாடு வாட்டான் நன்று என்றல் என்று பொருளுரைக்கப்படுவது கொண்டு கூட்டுப் பொருள்கோள். (க),

கொன்றுண்பா னச்சாங் கொடுங்கரிப்போ வானுச்சா
நன்றுணர்வார் முன்கல்லா னவுஞ்சா—மொன்றுனுங்
கண்டுழி நாச்சாங் கடவான் குடிப்பிறந்தா
னுண்டுழி நாச்சா முணர்ந்து.

(ப-ரை.) கொன்று - ஒருயிரைக் கொன்று, உண்பான் - அதன் தசையைத் தின்பவனுடைய, நா - நாக்கானது, சாம் - அற்று விழும், கொடும் கரிபோவான் - பொய்ச் சான்று கூறப் போகின்றவனுடைய, நா சாம் - நாக்கானது அற்று விழும், நன்று உணர்வார் முன்-நன்ருகக் கற்றறிந்தவர்களுக்கு எதிரில், கல்லான் நா சாம் - கற்றுணராதவனுடைய நாக்கானது அடங்கும், கடவான்-தான் சொல்லிய சொல்லைக் (கடவாத) நெறியினடப்போன், ஒன்று கண்டுழி - (தனிசு தண்ட வேண்டி வந்தா) னொருவனைப் பார்த்த விடத்து, நா சாம் - (தான் வாக்குச் சொன்னவனிடம் பேசுதற்கு) நாவெழாது, குடி பிறந்தான் - உயர்குடியிற் பிறந்தவன், உண்டுழி - தான் யாதானு மொருவனிடத்து ஒரு நன்மையைப் பெற்றுப் பின் அவன் குற்றஞ் செய்ததாக அறிந்தபொழுது, உணர்ந்து - அதனை யுணர்ந்து, நா சாம் - நாவால் அதனைப் பிறர்க்குச் சொல்லான்; (எ-று.)

(ப-போ-ரை.) உயிர்களைக் கொன்றுண்பானுடைய நாச் சாம், ஒருவர் பாங்கிலே நின்று பொய்ச்சான்று போவா னுடைய நாவுஞ்சாம், மிகக் கற்றுணர்ந்தோர் முன்பொரு மறுமாற்றஞ் சொல்லமாட்டாது கல்லாதானுடைய நாவுஞ் சாம், தனிசு வேண்டிவந்தா னொருவனைக் கண்டால் தனிசு கொண்டவனுடைய நாவுஞ்சாம், குடிப்பிறந்தா னொருவ

னுடைய நா ஒருவனுதவி பெற்ற விடத்து அவ்வுதவி செய் தான்திறத்து ஒரு தீமை சொல்லமாட்டாது மற்றவன் செய்த நன்றியை நினைத்துச்சாம்.

(க-ரை.) புலாலுண்போன் முதலியவர்களின் நாக்கள் சாம்.

கொன்றுண்பவனது நாவைக் காலதூதுவர் அறுத்தெடுப்பா ராதலின், "கொன்றுண்பான் நாச்சாம்," என்றார். கொடுங்கரி - பண்புத்தொகை. கண்டுழி, உண்டுழி - உழி இரண்டும் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபுகள். கண்டவுழி உண்டவுழி என்பன அகரந் தொக்குக் கண்டுழி உண்டுழி எனவந்தன. உயிர், தசை - இசையெச்சங்கள். (ய)

சிலம்பிக்குத் தன்சினை கூற்றநீள் கோடு
விலங்கிற்குக் கூற்ற மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை.

(ப-ரை.) சிலம்பிக்கு - சிலந்திப் பூச்சிக்கு, தன்சினை - தன்னுடைய கருவாகிய முட்டையே, கூற்றம் - எமனாகும், விலங்கிற்கு - எருது முதலிய மிருகங்களுக்கு, நீள்கோடு - நீண்ட கொம்புகளே, கூற்றம் - எமனாகும், வலம்படா - வெற்றி யுண்டாகாத, மாவிற்கு - கவரிமானுக்கு, மயிர்தான் - அதன் மயிரே, கூற்றம் - எமனாகும், ஞெண்டிற்கு - நண்டுக்கு, தன் பார்ப்பு - தன் குஞ்சுகளே, (கூற்றம்) - எமனாகும், நாவிற்கு - ஒருவனுடைய நாவுக்கு, நன்று அல் - நன்மையல்லாத, வசை - பழிமொழிகள், (கூற்றம்) - எமனாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) சிலம்பிக்குத் தன் முட்டை சாக்காட்டைக் கொடுக்குமாதலாற் கூற்றமாம், நீண்டதங் கொம்புகள் துன்பங் கொடுக்குமாதலால் விலங்கிற்கும் அவையே கூற்றமாம், வென்றியில்லாத கவரிமாவிற்குச்

சாக்காட்டைக் கொடுக்குமாதலால் அதற்குத் தன் மயிரே கூற்றமாம், ஞெண்டிற்குச் சாக்காட்டைக் கொடுக்குமாதலால் அதற்குத் தன்பார்ப்பே கூற்றமாம், ஒருவனது நாவிற்குப் பழியைக் கொடுக்குமாதலாற் பிறரை நன்றல்லாத வசை சொல்லுதல் கூற்றமாம்.

(க-ரை.) சிலந்திப் பூச்சிக்கு அதன் முட்டையும், மிருகங் களுக்கு அவற்றின் நீண்ட கொம்புகளும், கவரிமானுக்கு அதன் மயிரும், நண்டுக்கு அதன் குஞ்சுகளும், ஒருவனுடைய நாவிற்கு வசை மொழியும் எமனாகும்.

சிலந்திப்பூச்சி முட்டையிட்டவுடன் தானழிதலால், "சிலம்பிக் குத் தன்சினை கூற்றம்," என்றும், விலங்குகட்கு நீண்ட கொம் பிருந்தால் அது மரங்கள் முதலியவற்றிற்குத்தி முறியப் பெற்று வருந்துமாதலாலும், எவர்மீதேனும்பட்டு ஊறு விளைக்கு மென்று அறுக்கப்படுமாதலாலும், நீள்கோடு விலங்கிற்குக் கூற்றம் என்றுங் கூறினார். கவரிமான் முட்செடி முதலியவற்றிற் பட்டுத் தன் மயிர் ஒன்று உதிர்ந்தால், 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா', என்ற குறட்கிணங்க, அது தன் உயிரை விட்டு விடுமாதலால், "மயிர் தான் வலம்படா மாவிற்குக் கூற்றம்," என்றார். "நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறுங் காலத்திற் கொண்ட கருவளிக்கும்," என்றபடி நண்டு குஞ்சுகளை ஈன்றவுடன் அழிந்துபோகு மாதலால், 'ஞெண் டிற்குத் தன்பார்ப்பு' (கூற்றம்) என்றார். பிறர் பழி கூறுவோன் அடையும் பயன் இம்மையில் இகழப்படுதலும், மறுமையில் எரிவாய் நிரயத்து அழுந்தலும் ஆதலால், 'நாவிற்கு நன்றல் வசை,' (கூற்றம்) என்றார். மயிர்தான் - தான் அசை. ஈற்றிலுள்ள கூற்றம் என் பதைத் தீபகமாக்கி ஞெண்டிற்கும் நாவிற்கும் கூட்டப்பட்டது. வசை - பழிப்பு; ஆகுபெயராய்ப் பழிப்பா மொழியை யுணர்த்திற்று.

நாணிலான் சால்பு நடையிலா னன்றேன்பு
மூணிலான் செய்யு முதாரதையு—மேணிலான்

சேவகமுஞ் செந்தமிழ் தேற்றான் கவிசெயலு
நாவகமே நாடி னகை.

(ப-ரை.) நாண் இலான் - நாணமில்லாதவனது, சால்பும் - அமைதியும், நடை இலான் - நல்லொழுக்கம் இல்லாதவனது, நல் நோன்பும் - நல்ல நோன்பும், ஊண் இலான் - தனக்கே உண் பொருளில்லாதவன், செய்யும் உதாரதையும் - செய்கின்ற ஈகையும், ஏண் இலான் - வலிமையில்லாதவனது, சேவகமும் - வீரத் தொழிலும், செந்தமிழ் - செந்தமிழில், தேற்றான் - (தன் மனதைத்) தெளியச் செய்யாதவன், கவி செயலும் - பாட்டுக்களைச் செய்தலும், நா அகமே நாடின் - நாவினிடத்துக் கொண்டு ஆராயின், நகை - சிரிப்புக்கு இடமாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) நாணில்லாதவன் அமைதியும், சீலங்களைச் செய்யாதான் கொள்ளு நல்ல நோன்பும், தனக் குண்ணும் பொருளில்லாதான் செய்யும் வண்மையும், வலியில்லாதான் சொல்லும் வீரமும், செந்தமிழறியாதான் கவியைச் செய்தலுமென இவ்வைந்தும் நாவகத்தாலே மேவியாராயின் நகையாம்.

(க-ரை.) நாணமில்லாதவன் அமைதி, நன்னடையில்லாதவன் நோன்பு, உண் பொருளில்லாதவன் ஈகை, வலியில்லாதவன் வீரம், செந்தமிழ்த் தேர்ச்சியில்லாதவன் கவி பாடுதல் என்னும் இவ்வைந்தும் பயனிலை என்பதாம்.

சால்பு என்பது குணங்களானிறைந்த தன்மை. சால்பினை ஆக்குங் குணங்களைந்தனுள் நாணம் ஒன்றாதலாலும், இழிதொழிலைச் செய்ய நாணுத ஒருவனுக்குச் சால்புடைமை அமையாதாதலானும், 'நாணிலான் சால்பு நகைதரும்,' என்றார். உதாரதை - பெருங் கொடைத் தன்மை. நடை - நன்னடை. தேற்றான் - பிறவினை.

கோறலு நஞ்சுனைத் துய்த்தல் கொடுநஞ்சு
வேறலு நஞ்சுமா றல்லானைத்—தேறினு

னீடாங்கு செய்தலு நஞ்சா மிளங்கிளையை
நாடாதே தீதுரையு நஞ்சு.

(ப-ரை.) கோறலும் - உயிரைக் கொல்லுதலும், நஞ்சு - ஒருவனுக்கு நஞ்சு போலும், ஊனை துய்த்தல் - அங்ஙனம் கொல்லப் பட்ட உயிரின் தசையைத் தின்னுதலும், கொடு நஞ்சு - கொடிய நஞ்சு போலும், மாறு அல்லானை - தனக்கு எதிர் அல்லாதவனை, வேறலும் - எதிர்த்து வெல்லுதலும், நஞ்சு - நஞ்சு போலும், தேறி ஞன், ஒரு காரியத்துக்கு உரியவனென்று ஆராய்ந்து தெளியப் பட்டவனாகிய ஒருவன், நீடாங்கு செய்தலும் - (அக் காரியத்தின் மேல்) கால நீட்டிப்பு செய்தலும், நஞ்சு ஆம் - நஞ்சுபோலும், இளம் கிளையை - இளைய சுற்றத்தாரை, நாடாதே - ஆராயாமலே, தீது உரையும் - தீயவுரைத்தலும், நஞ்சு - நஞ்சுபோலும் ; (எ-று.)

(ப-பொ-ரை.) ஒருயிரை அருளின்றிக் கோறலும் தனக்கு நஞ்சு போலும், பிறிதொன்றினுடைய ஊனைத் தின்றலும் தனக்குக் கொடிய நஞ்சு போலும், தனக்கு எதி ராகாதானை அடர்த்து வெல்லுதலும் தனக்கு நஞ்சு போலும், ஒருவனை ஒரு கருமத்துக்கு ஆமென்றாராய்ந்து தேறினல் அக்கருமத்தில் விடாதே நீட்டித்துக்கொண்டு செலுத்தலும் தனக்கு நஞ்சு போலும், தன்னிளைய சுற்றத் தாரை ஆராயாதே தீதுரைத்தலும் தனக்கு நஞ்சு போலும்.

(க-ரை.) கொலை செய்தலும், புலாலுண்டலும், நிகரில்லாத வனை எதிர்த்து வெல்லுதலும், ஆராய்ந்து தெளிந்த ஒருவனை வினை மேற் செலுத்தாது காலம் நீட்டித்தலும், இளங்கிளைஞரை யாராயாது தீங்கு சொல்லுதலும் ஆகிய ஐந்தும், ஒருவனை நஞ்சு போலத் துன்பஞ் செய்யும் என்பதாம்.

நீடு ஆங்கு என்ற விடத்து, நீடு - நீடித்தல், முதனிலைத் தொழிற் பெயர். ஆங்கு - அசை. கோறல், வேறல் - கொல், வெல் முதனிலைகள். கிளை - உறவு. இளங்கிளை என்பதில்

இளமை - சிறுமை ; ஆதலின் வறிய சுற்றத்தார் என்க. இளைத்த சுற்றத்தாரையே பழித்தலும் புறக்கணித்தலும் இயல்பு. உரை - முதனிலைத் தொழிற்பெயர். தீதுரையாவது - உளம் வருந்தும் படியான பழிமொழிகளை எடுத்துரைத்தல். 'துய்த்தல்' என்பதற்கும் உம்மை கூட்டுக. 'மாறல்லானை வேறலு நஞ்சு' என்றது, தனக்கு யாதொரு துன்பமுஞ் செய்யாத, பகைமையும் வலிமையுமில்லாத ஒருவனைத் துன்புறுத்தல் கொடும் பாவச் செயலாய், அதைச் செய்தவனுக்கு அதற்குரிய தீங்கைத் தவறாது விளைவித்தலின் என்க. வினை செய்வான் ஒருவன் வகையறச் சூழ்ந்து அவ் வினை செய்யத்தக்க ஒருவனைத் தெளிந்த பின், அவனை உடனே அவ்வினை மேற் செலுத்தாது கால நீட்டித்தல் அவ்வினை முடிதற்குக் கேடாக நிகழுமாதலின் "தேறினனீடாங்கு செய்தலும் நஞ்சு" என்றார்.(கரு)

இடரின்னா நட்டார்க ணீயாமை யின்னா
தொடர்பின்னா நள்ளார்கட் டூயார்ப்—படர்பின்னா
கண்ட லவிர்பூங் கதுப்பினா யின்னாதே
கொண்ட விரதங் குறைவு.

(ப-ரை.) கண்டல் - தாழைமலர், அவிர் - (முடிக்கப்பட்டு) விளங்காநின்ற, பூ கதுப்பினாய் - அழகிய கூந்தலையுடையவளே ! நட்டார்கண் - நண்பர்களிடத்து, இடர் - செய்யுந்துன்பம், இன்னா - தீது, ஈயாமை - (அவர்கள் இடருற்ற காலத்தில் அவர்க்கு வேண்டும் பொருளைக்) கொடாதிருத்தல், இன்னா - தீது, நள்ளார்கண் - பகைவரிடத்து,தொடர்பு - நட்புக்கொள்ளுதல், இன்னா - தீது, தூயார் - உளத்தூய்மை யுடையவரை, படர்பு - விட்டுநீங்குதல், இன்னா - தீது, கொண்ட - (ஒருவன்) கைக்கொண்ட, விரதம் - நோன்பில், குறைவு - குறைவுபடுதல், இன்னா - தீது ; (எ-று.)

(ப-பொ-ரை.) நட்டார் மாட்டுக்கண்ட இடரின்னா, அவர்மாட்டு ஈயாமையின்னா, வஞ்சனையுடையார் மாட்டு

நடக்கு நட்பின்னு, மனந்தூயாரை நீங்குதலின்னு, கண்டல் விளங்குங் குழலாய்! தாங்கொண்ட விரதங்கள் நிரம்ப முடியாதே குறையாக ஒழுகுதல் இன்னு.

(க-ரை.) நட்டாரிடத்தில் அன்பஞ்செய்தலும், அவர்கட்கிடருற்றகாலத்து ஈயாமையும், பகைவரிடம் உறவுகொள்ளுதலும், தூயாரை நீங்குதலும், எடுத்த விரதத்தை முடிக்காமையும் ஆகிய இவ்வைந்தும் தீயபயன்களைத் தரும் என்பதாம்.

கண்டலவிர் பூங்கதுப்பினுய்—மகடூஉ முன்னிலை. அவிர்பூ-வினைத்தொகை. நட்டார்கண் என்பது தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. ஈயாமை, தொடர்பு, படர்பு, குறைவு -தொழிற்பெயர்கள். இன்னுதே என்பதில் ஏ - அசை, தேற்றமுமாம். தூயார்படர்பு - ஐந்தாம் வேற்றுமைத்தொகை. (கசு)

கொண்டான் வழியொழுகல் பெண்மகன் றந்தைக்குத்
தண்டான் வழியொழுகல் தன்கிளையஃ—தண்டாதே
வேல்வழி வெம்முனை வீடாது மன்னுடு
கோல்வழி வாழ்தல் குணம்.

(ப-ரை.) பெண் - (இல்வாழ்க்கைக்கு இசைந்த) பெண்ணனவள், கொண்டான் வழி - தன்னை மணந்து கொண்டவனுடைய சொல்வழியே, ஒழுகல் - நடத்தலும், மகன்- (ஒருவனுக்குப்) புதல்வனுயிருப்பவன், தந்தைக்கு - தகப்பனுக்கு, தண்டான் - (அவனது கட்டளையைவிட்டு) நீங்காதவனுய், வழி-அவனுரைக்கும்வழியிலேயே, ஒழுகல் - நடத்தலும், தன் கிளை - அத்தந்தையினுடைய சுற்றத்தார்க்கு, அஃது - அக்குணமே பொருந்தியிருத்தலும், மன் - மன்னனுடைய, வெம்முனை-வெவ்விய போரைச் செய்யும் வீரர்கள், அண்டாது - பகைவரோடு சேர்ந்துகொள்ளாமல், வேல்வழி - அரசன் பகைவர்மீது ஏவுகின்ற வேல் செல்லும் வழியேபோய், வீடாது (வாழ்தல்) - அவனை நீங்காது போர்செய்தலும், நாடு -

குடிகள், (மன்) கோல்வழி - அரசன் செங்கோல் முறைப்படி, வாழ்தல் - ஒழுகுதலும், குணம் - நன்மையாம்; (எ - று.)

(ப-பொ-ரை.) கொழுநன் வழியொழுகுதல் பெண் குணம், தந்தைக்கிடைவிடாதே நிரந்தரமா யொழுகல் மகன்குணம், அவனைப்போல் வழியொழுகுதல் கிளையின் குணம், பகைவரோடு செறியாதே வேல்வழியினிடை விடாது வாழ்தல், அரசன் வெம்முனையிற் போயிருந்தார் குணம், அவ்வரசன் கோல்வழியே வாழ்தல் நாட்டின் குணம்.

(க-ரை.) பெண் கணவன் சொற்படி யொழுகுதலும், மகன் தந்தை சொல்வழி நடத்தலும், கிளை அவன்போலவே வழி யொழுகுதலும், வெம்முனையின்கட் போயிருந்தார் பகைவரோடு சேராதே அவரை வெல்லும் வழியால் இடைவிடாமல் வாழ்தலும், நாடு அரசனது கோல்வழியே வாழ்தலும் அவரவர்கட்குரிய குணங் களாம்.

"கோனோக்கிவாழுங் குடி" என்ற நான்மணிக்கடிகையடிக் கிணங்க, 'நாடு கோல்வழி வாழ்தல்' என்றார். வேல்வழி — வெல் லும் வழி எனலுமாம். வீடாது - கெடாது. தட்டான் என்பது தண்டான் என மெலித்தல் விகாரம் பெற்றது. முனை - போர். அஃது ஆகுபெயராய்ப் போர் செய்யும் வீரர்களை யுணர்த்திற்று. மன், வாழ்தல் என்பன இரண்டிடத்துங் கூட்டப்பட்டன. நாடு - இடவாகுபெயர். (கரு)

பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை
யிழைத்ததீங் கெண்ணி யிருத்த—லிழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வது நன்று.

(ப-ரை.) பிழைத்தல் - (தனக்குப் பிறனொருவன் செய்த) பிழையை, பொறுத்தல் - பொறுத்துக் கொள்ளுதல், பெருமை -

பெருமையாகும், இழைத்த - பிறர்செய்த, தீங்கு — தீமையை, எண்ணி இருத்தல் - நினைத்துக்கொண்டே யிருத்தல், சிறுமை- சிறுமையாகும், இழைத்த - தான் செய்த, பகைகெட - பிழைகள் கெடும் படி, வாழ்வதும் - வாழ்தலும், பல் பொருளார் - பலபொருள்களை யுடைய செல்வர்களும், நல்லார் - பெரியோர்களும், நகைகெட - எளனஞ்செய்து நகைப்பது நீங்க, வாழ்வதும் - வாழ்தலும், நன்று - நன்மையாம்; (எ-று.)

(ப—போ—ரை.) தனக்குப்பிற ெனாருவன் செய்த பிழையைப் பொறுத்தல் பெருமையாவது, பிற ரிழைத்த தீங்குகளை மறவாதிருத்தல் சிறுமையாவது, தான் செய்த பிழைகளைப் பின்பு கெட வாழ்தலும், பலபொருள்களையு முதவியோரும் நல்லோருமிகழ்ந்து நகுநடையினைக் கெட வாழ்தலும் நன்று.

(க-ரை.) பிறர்தவற்றைப் பொறுத்தல் பெருமை, பிறர் செய்த தீங்கை எண்ணிக் கொண்டிருத்தல் சிறுமை, பிறர் பகை கெட வாழ்தலும் செல்வரும் நல்லோரும் எளனஞ் செய்து நகைக் காது வாழ்தலும் நன்மை யுடையனவாம்.

தவறு - ஒருவன் அறியாது செய்த குற்றம். இதனைப் பொறுப் பவர் பெருமை யடைவர்- பொறுக்கா திருத்தலால் அத் தீங்கின் தொடர்ந்த எண்ணமே நெடுநாட் பகைவிளைத்துக் கேடும் பயக்கும். இதனாற் சிறுமையே நேரும். பிறர் பகை ஏற்படின் அதனை நால் வகையிலொன்றால் நீக்கி வாழ வேண்டும். பிறரால் நகைத்து எள் - ளப்பட வேண்டாதவர் வறுமையையும் இரப்பையும் நன்முயற்சி யால் நீக்கி வாழ வேண்டும். பெருமை, சிறுமை, நன்று என்பன பண்புப் பெயர்கள். (கசு)

கதநன்று சான்றாண்மை தீது கழிய
மதநன்று மாண்பில்லார் முன்னர்—விதநன்றாற்
கோய்வாயிற் கீழுயிர்க்கீ துற்றுக் குரைத்தெழுந்த
நாய்வாயு ணல்ல தசை.

(ப-ரை.) மாண்பு இல்லார் முன்னர் - நற்குண மில்லாதார் முன்பு, கதம் நன்று - கோபம் நல்லது, சான்றாண்மை - சால்புடைமை, தீது - தீதாகும், கழிய - மிக்க, மதம் - வலி செய்தல், நன்று - நல்லது, கோய்வாயின் - கோய்போலும் வாயை யுடைய, கீழ் உயிர்க்கு - கீழ்மக்களுக்கு, ஈ - கொடுக்கும், துற்று - உணவு, குரைத்து எழுந்த - குரைத்துக் கொண்டே எழுந்த, நாய் வாயுள் - நாயின் வாயிற் கொடுத்த, நல்லதசை விதம் - நல்ல மாமிச விதத்தினும், நன்று - நன்மையாம்; (எ-று.)

(ப-போ-ரை.) நன்மைக் குணமில்லாதார் முன்பு கோபம் நன்று, சான்றாண்மை தீது, மிக்கவலி செய்தல் நன்று ; கள்ளினை முகக்குங் கோய்போலும் வாயையுடைய கீழ்மக்கட் கீயும் உணவும் குரைத்தெழுந்த நாய்வாய்க்கீயும் தசையின் றிறப்பாட்டினன்று.

(க-ரை.) நற்குணமில்லாதவர்க் கெதிரில் கோபமே நன்று, சான்றாண்மை தீது, மிக்க வலிசெய்தல் நன்று; கீழ்மக்கட்கு ஈயு முணவு குரைத்துவரும் நாய்வாயிற் கொடுத்த தசைக்கு நிகராகும்.

சான்றாண்மை - சால்புடைமை, சால்பாவது அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும் நிறைந்திருப்பது. மாண்பு - நற்குணம், கோய் - கள் முகக்கும் கலம், இது கீழ்மக்கள் வாய்க்கு ஒப்பு. கீழ் மக்கள் வாய் மிகுந்த உணவை உருட்டிப்போடு தற்கு ஏற்றபடி அகன்றதாயும் வேற்று வடிவம் பெற்றதாயும் கெட்ட மொழிகள் வெளிப்படத் தக்கதாயும் அருவருக்கத் தக்கதாயு மிருக்கும். வாயுள் - உள், ஏழனுருபு. ஆல் அசை நிலை. (கஎ)

நட்டாரை யாக்கிப் பகைபணித்து வையெயிற்றுப்
பட்டா ரகலல்கு லார்படிந்—தொட்டித்
தொடங்கினா ரில்லகத் தன்பிற் றுறவா
வுடம்பினா னைய பயன்.

(ப-ரை.) நட்டாரை - நட்புக்கொண்டவரை, ஆக்கி -செல்வராக்கி, பகைபணித்து - பகைவரைத் தாழ்த்தி, வைஎயிற்று - கூரிய பற்களையுடைய, பட்டு ஆர் - பட்டாடை யணியப்பெற்ற, அகல் அல்குலார் - அகன்ற அல்குலையுடைய மாதரை, படிந்து ஒட்டி - சேர்ந்து தொடர்புற்று, தொடங்கினார் (அகத்து) - முறையாயினார்மாட்டும், இல்அகத்து - தாம்பிறந்த குடியிற் பிறந்தவரிடத்தும், அன்பின் - அன்பினால்,துறவா - நீங்காமையும் ஆகிய இவ்வைந்தும், உடம்பினான் - அரிதாகிய மக்கட் பிறப்பால், ஆய பயன் - உண்டாய பயன்களாம்; (எ-று.)

(ப - பொ - ரை.) தம்மோடு நட்புக் கொண்டாரைச் செல்வத்தின்கண் ணேயாக்கி, பகையைக் குறைத்து, கூரிய எயிற்றுப்பட்டாரகலல்குலாரைச் சேர்ந்து முயங்கிப் பொருந்தி, அச்சுற்றமாய்த் தொடர்பு பட்டு முறையாயினார் மாட்டும், தாம் பிறந்த குடியிற் பிறந்தார் மாட்டும் அன்பினானீங்காது இப்பெற்றிப்பட்ட ஐந்தும் உடம்பு பெற்றதனானாய பயன்.

(க-ரை.) நட்டாரையுயர்த்தல், பகைவரைத் தாழ்த்தல், மாதரைச் சேர்தல், அவரிடத்தும் தங்குடியிற் பிறந்தாரிடத்தும் அன்போடிருத்தல் ஆகிய ஐந்தும், மக்கட் பிறப்பின்பயன்.

ஆக்கி என்பதன்முன் செல்வத்தில் என்பது இசையெச்சம். ஒருவன் சுற்றத்தார் அவனோடு நன்மையான காரியங்களில் சேர்ந்து உதவிசெய்ய முயல்கின்றவராதலால் அவரை ஒட்டித் தொடங்கினார் என்றார். இல்லகம்-அகம் ஏழனுருபு. இல் ஆகுபெயராய் இல்லத்திலுள்ளவரை யுணர்த்தியது. அன்பின்-இரண்டிடத்தும் தீபகமாகக் கூட்டுக. துறவாமை என்பதன் மையீறு தொக்குத் துறவா என நின்றது. உடம்பு - ஈண்டு மக்களுடம்பு. (கஅ)

பொய்யாமை பொன்பெறினுங் கள்ளாமை மெல்லியலார்
வையாமை வார்குழலார் நச்சினு - நையாமை

யோர்த்துடம்பு பேருமென் றானவா யுண்ணுனேற்
பேர்த்துடம்பு கோட லரிது.

(ப·ரை.) பொன் பெறினும் - ஒருவன் பொன்னைப் பெற்றானாயினும், பொய்யாமை - பொய் சொல்லாமையும், கள்ளாமை - பிறர்பொருளைக் களவு செய்யாமையும், மெல் இயலார் - மெல்லிய தன்மையை யுடையாராகிய எளியாரை, வையாமை - திட்டாமையும், வார்குழலார் - நீண்ட கூந்தலையுடைய பெண்கள், நச்சினும் - விரும்பினாலும், நையாமை - உளந்தளராமையும், (மேற்கொண்டு) உடம்பு - தன்னுடம்பு, பேரும் என்று - மெலியுமென்று, ஓர்த்து - அறிந்து, (அதைக் காக்கும் பொருட்டு) ஊன் - பிறிதோருடம்பின் தசையை, அவாய் - விரும்பி, உண்ணான்எல் - உண்ணாதிருப்பானாயின், (அவன்), பேர்த்து - மீட்டும், உடம்பு கோடல் - பிறிதோருடம்பைக் கொள்ளுதல், அரிது - இல்லை; (எ-று.)

(ப-பொ-ரை.) பொன்பெற்றானாயினும், பொய் சொல்லாதும், பிறர்பொருளைக் களவு கொள்ளாதும், எளியாரை வையாதும், வார்குழலார் தம்மைக் காதலிப்பினும் தன் மனந்தளராதும், தன்னுடம்பு தளருமென்றோர்ந்து பிறிதொன்றனூனைக் காதலித்தொருவ னுண்ணானாயின் மறித்துப் பிறிதுடம்பு கோடல் அரிது.

(க - ரை.) பொய்யாமை கள்ளாமை முதலியவற்றையுடையவன் பிறப்படையான் என்பது.

கள்ளல் - பிறர்பொருளை வஞ்சித்துக் கொள்ளுதல். மெல்லியலார் - பொருளில்லாமையால் மெலிந்திருப்பவர். ஓர்ந்து என்பது ஓர்த்து என வலித்தது. பெறினும், நச்சினும் - உம்மைகள் இழிவு சிறப்புப்பொருள. வார்குழல் - வினைத்தொகை. எல் - எனின் என்பதன் மரூஉ. அரிது இன்மைப் பொருளது. (கக)

தேவரே கற்றவர் கல்லாதார் தேருங்கால்
பூதரே முன்பொருள் செய்யாதா—ராதரே

துன்ப மிலேம்பண் டியாமே வனப்புடையே
மென்பா ரிருகா லெருது.

(ப-ரை.) கற்றவர் - அறிவு நூல்களைப் படித்தவர், தேவரே - தேவரை யொப்பவரேயாவர்; கல்லாதார்-அவற்றைக் கல்லாதவரைப் பற்றி, தேருங்கால் - ஆராய்ந்து பார்க்குமிடத்து, பூதரே - பசாசு களோ டொப்பவரேயாவர், முன் - முதுமைப் பருவம் வருதற்கு முன்பே, பொருள் செய்யாதார் - பொருள் தேடி வைத்துக்கொள் ளாதவர், ஆதரே - அறிவிலாரேயாவர், பண்டு - முன்னே, யாம் - நாம், துன்பம் இலேம் - (செல்வமுடையோ மாயிருந்ததனால்) துன் பம் உடையோமல்லோம், வனப்பு உடையேம்-அழகுடையேம், என் பார் - என்று சொல்லுவோர், இருகால் எருது - இருகால் மாடு களுக்கு நிகராவர்; (எ-று.)

(ப-பொ-ரை.) நூலைக்கற்றார் தேவரோ டொப்பர், கல்லாதார் ஆராயுங்காற் பூதபசாசுகளோடொப்பர், தமக்கு மூப்பு வருதற்கு முன்பே பொருளைத்தேடித் தமக்கு வைப் பாக வையாதார் ஒன்று மறியாது ஒரு பற்றின்றித் திரியு மாந்தரோ டொப்பர், பண்டு செல்வமுடையேமாதலால் ஒரு துன்பமும் இலோ மென்பாரும், பண்டியாமே யழகியோம் என்பாரும் இருகாலுடைய எருதுகளோ டொப்பர்.

(க-ரை.) படித்தவர் தேவர், படியாதவர் பூதபசாசுகள், முது மைக்கு இளமையிலேயே பொருள் தேடாதவர் அறிவிலார், முன்பு பொருளுடைமையால் துன்பமற்றோம்; முன்பு அழகுடையவரா யிருந்தோம் என்பவர் இரண்டுகால் மாடுகள்.

தேவரே, பூதரே, ஆதரே—ஏகாரம், தேற்றம், பிரிநிலையுமாம். தேர்தல் - ஆராய்தல். நாற்காலெருத்திற் பிரித்தற்கு இருகா லெருது என்றார். 'தேவரனையர் புலவரும்' என்றார் நான்மணிக் கடிகை யாசிரியர் (செ - எச) கல்லாதாரை 'விலங்கு' என்றார் வள்ளுவர். (உ௰)

கள்ளான்சூ தென்றுங் கழுமான் கரியாரை
நள்ளா னுயிரிரங்க நாவாடான்—நள்ளானு
யூன்மறுத்துக்கொள்ளானே லூனுடம் பெஞ்ஞான்றுந்
தான்மறுத்துக் கொள்ளான் றளர்ந்து.

(ப-ரை.) கள்ளான் - (பிறர்பொருளைக்) களவு செய்யாதவனாய், சூது - சூதாட்டத்தில், என்றும் - எக்காலத்தும், கழுமான் - கலவாதவனாய், கரியாரை - கீழ்மக்களை, நள்ளான் - நட்புக் கொள்ளாதவனாய், உயிர் இரங்க - பிறவுயிர்களிரங்கும்படி, நா ஆடான் - நாவாடாதவனாய், ஊன் நள்ளான் ஆய்-ஊனுணவைப் பொருந்தாதவனாய், மறுத்து - தடுத்து, கொள்ளானேல் - அவ்வூனுணவை ஒருவன் கொள்ளாதிருப்பானாயின், தான் - அவன் தான், மறுத்து - மீட்டும், ஊன் உடம்பு - தசையோடு கூடிய உடம்பை, எஞ்ஞான்றும் - எந்நாளும், தளர்ந்து - ஒழுக்கம் தளர்ந்து, கொள்ளான் - எடுக்கமாட்டான்; (எ - று.)

(ப-பொ-ரை.) பிறர் பொருளைக் களவு காணாது, சூதினைப் பற்றிக் காதலியாது, கீழ்மக்களுடன் நட்புக் கொள்ளாது, பிறர் மனந் துன்புறும்படி வன்சொற் சொல்லாது கடைப்பிடியுடையனாய் ஊனுணவை மறுத்து விரும்பானாயின் எஞ்ஞான்று மொழுக்கத்திற் றளர்ந்து மாறிப் பிறந்து ஊனுடம்பினைக் கொள்ளான்.

(க - ரை.) கள்ளாமலும் சூதாடாமலும் கயவருடன் நட்புக் கொள்ளாமலும் பிறர் வருந்த வன்சொற் கூறாமலும் ஊனுண்ணாமலும் ஒருவ னிருப்பானாயின் அவன் மீட்டும் பிறக்கமாட்டான் என்பதாம்.

பிறர் மனந் திடுக்கிடப் பேசுதல், கொலையை நிகர்த்த பழிச் செயலேயாகும். கள்ளல் முதலிய தீய செயல்களை விட்டொழிப்பவன் இம்மையிலும் சீர்த்தியுடனிருந்து பின் பிறப்பு நீங்கி வீடடைவன். கள்ளான், கழுமான், நள்ளான், நாவாடான் என்பன

முற்றெச்சங்கள். கழுமல் - பற்றல், கலத்தல். கரியார் - கருமை யை யுடையவர், கருமை - மனவிருள். நா ஆடல் - நா அசைதல், பேசுதல். 'ஊன் நள்ளானாய் மறுத்துக் கொள்ளானேல்' என்பதற்கு ஊனை விரும்பாதவனாய் அதனையுண்ணும் பிறரையும் தடுத்துத் தானும் உட்கொள்ளானேல் எனப் பொருள் கூறுதலுமுண்டு. உயிர் என்றது ஈண்டு மக்களுயிரை. (உக)

பூவாது காய்க்கு மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார் - தாவா
விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமை செல்லு முணர்வு.

(ப-ரை.) பூவாது - பூக்காமலே, காய்க்கும் - காய்க்கின்ற, மரம் உள - மரங்களும் உண்டு, (இவை போல) நன்று அறிவார் - நன்மையை அறிபவர், மூவாது மூத்தவர் - ஆண்டுகளால் மூவாதவர் களாயினும் அறிவினால் மூத்தவரோடொப்பர், நூல் வல்லார் - நூல் களைக் கற்று வல்லவர் (அத்தன்மையரே யாவர்); தாவா - கெடா திருக்க, விதையாமை - பாததிகட்டி விதைக்காமலே, நாறுவ - முளைப்பனவாகிய, வித்து உள -விதையும் உண்டு, (இதேபோல) மேதைக்கு - அறிவுடையவனுக்கு, உரையாமை - பிறர் எடுத்துரைக் காமலே, உணர்வு - அறிவானது, செல்லும் - தோன்றி நடக்கும்; (எ-று.)

(ப-பொ-ரை.) பூவாதே காய்க்கும் பலா முதலா யின மரமுள, நன்மையை அறிவார் ஆண்டுகளால் மூத்திலராயினும் மூத்தாரோடொப்பர், நூல்கற்று வல்லவரும் அப்பெற்றியர், நிலத்தில் விளையாது முளைக்கும் வித்து முள, மதியுடையவர்க்குப் பிறர் அறிவியாமலே செல்லும் உணர்வு.

(க-ரை.) பூவாது காய்க்கு மரம்போல் ஆண்டுகளால் மூவா தாரும் அறிவினால் மூததாராவர். நூல்வல்லாரும் அங்ஙனமே.பாத்தி

கட்டிவிதைக்காமலே முளைக்கிற விதைபோல பிறர் அறிவிக்காமலே அறிவுடையார்க்கு அறிவு தோன்றும்.

பூவாது காய்க்கும் மரங்கள் அத்தி, ஆல், பலா, அரசு முதலியன. ஆண்டால் முதியோரைப் பெருந்தன்மையுடையாராயும் இளைஞரைச் சிறுதன்மையுடையாராயும் கூறுவது உலக இயற்கையாயினும் சில இளைஞர் நன்மையுணர்ச்சி நூலுணர்ச்சி முதலியவற்றால் அப் பெரியார் தன்மையை அடைதலுங் கூடும். ஆண்டு மூத்துப் பெருந்தன்மையடையும் முறைமையின்றியே சிலர் இளமையில் அறிவாற் பெருந்தன்மை யடைகின்ற காரணத்தால், பூவாது காய்க்கும் மரங்கள் இவர்க்கு உவமையாயின. விதையாமை நாறுவ வித்து - பறவை எச்சம் முதலாயினவற்றாலுள்ள வித்து. மேதை - பேரறிவு. இது அதனை யுடையவனை யுணர்த்தியதால் பண்பாகுபெயர். இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி. விதையாமை, உரையாமை - மையீற்று வினை யெச்சங்கள். (உஉ)

பூத்தாலுங் காயா மரமுமுள நன்றறியார்
மூத்தாலு மூவார்நூ றேற்றாதார்—பாத்திப்
புதைத்தாலு நாறாத வித்துள பேதைக்
குரைத்தாலுஞ் செல்லா துணர்வு.

(ப-ரை.) பூத்தாலும் - பூத்திருந்தனவாயினும், காயா - காய்க்காத, மரமும் உள - மரங்களும் உண்டு, (அதுபோல) நன்று அறியார் - நன்மையறியாதவர், மூத்தாலும் - ஆண்டுகளால் முதிர்ந்தாலும், மூவார் - அறிவினால் முதிரார், நூல் தேற்றாதார் - அறிவு நூல்களைக் கற்றுத் தெளியாதவர் (அத்தன்மையரேயாவர்) ; பாத்தி புதைத்தாலும் - பாத்தி கட்டிப் புதைத்தாலும், நாறாத - முளைக்காத, வித்து உள - வித்துமுண்டு, (அது போல) பேதைக்கு - அறிவில்லாதவனுக்கு, உரைத்தாலும் - நன்மையை எடுத்துக் கூறினாலும், உணர்வு செல்லாது - அறிவு தோன்றாது; (எ-று.)

(ப-பொ-ரை.) பூத்தாலுங் காயாத பாதிரி முதலாயின மரங்களுள, நன்மையை யறியாதார் ஆண்டுகளான் மூத் தாராயினும் மூவாதாரோ டொப்பர், நூறேற்றாருமப் பெற்றியர், பாத்தியின்கட் புதைத்தாலு முளையாதவித் துள, பேதையாயினார்க்குப் பிறருரைத்தாலு முணர்வு புகாது.

(க - ரை.) பூத்தாலுங்காயா மரம்போன்றவர் ஆண்டு முதிர்ந் தும் அறிவு முதிராதவரும் நூல்களைக் கற்றுத் தெளியாதவரும் ஆவர். புதைத்தாலும் முளைக்காத விதையைப் போன்று அறிவிலா னுக்கு எவ்வுரையாலும் அறிவுண்டாகாது.

பூத்தாலுங் காயாமரம் பாதிரி முதலியன. தேற்றாதார் - தன்வினைப்பொருளில் வந்தது, நாறா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். நாறல் - முளைத்தல். நூலுணர்ச்சி பகுத்தறிவு வளர்ச்சிக்குத் துணையாவது. மரம், வித்து - சாதி யொருமைகள். இதுவும் எடுத்துக் காட்டுவமையணியின் பாற்படும். (உ௬)

வடிவிளமை வாய்த்த வனப்பு வணங்காக்
குடிகுலமென் றைந்துங் குறித்து—முடியா
துளங்கா நிலைகாணார் தொக்கீர் பகுவால்
இளங்காற் றுறவா தவர்.

(ப-ரை.) வடிவு - உருவம், இளமை - இளம்பருவம், வாய்த்த வனப்பு - பெற்ற அழகு, வணங்கா குடி - தாழாதகுடி, குலம் - (தாழாத) குலம், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட இவ்வைந் தும், குறித்து - தாம்எண்ணி, முடியா - நுகர்ச்சி முடியப்பெற்று, துளங்கா நிலைகாணார் - அழியாத நிலையைக் காணமாட்டார். (ஆதலால்) இளங்கால் - இளம் பருவத்திலேயே, துறவாதவர் - நீங் கித தவஞ் செய்யாதவர், தொக்கு - கூடி, ஈர் - பாரத்தை இழுக் கின்ற, பகு - எருதோடொப்பர்; (எ-று.)

(ப-பொ-ரை.) வடிவும் இளமையும் வாய்த்த வனப்பும், தாழ்வில்லாத குடிப்பிறப்பும், நற்குலமும் என்று சொல்லப் பட்ட இவ்வைந்தும் தாங்குறித்த நுகர்ச்சி நுகர்ந்து முடியு மளவு நிற்குநிலைமை யாவருங் காணமாட்டார். ஆதலாற் கூடி யொருபாரத்தை இழுக்கு மெருதோ டொப்பர்; இளங் காலத்திலே துறவாதார்.

(க-ரை.) உருவு, இளம்பருவம், அழகு, உயர்குடி, உயர்குலம் இவ்வைந்தும் முடிவுபோக நுகர்வது அருமையாதலால், இளம் பருவத்திலேயே துறவாதவர் பாரமிழுத்துச் செல் எருது என்றபடி,

வணங்கா என்பது குலத்துடனும் சேர்க்கப்பட்டது. என்ற ஐந்தும் என்பது என்றைந்தும் என நிலைமொழி ஈறு தொகுத்தல் பெற்றது. துறத்தல் - இருவகைப் பற்றுக்களையும் விடுதல். வடிவு முதலிய ஐந்தனுள் எண்ணும்மைகள் தொக்கன. கால் - ஏழன் சொல்லுருபு. முடியா என்பதைப் பலவின்பால் வினைமுற்றாக்கி நுகர்ந்து முடியமாட்டா எனலுமாம். (உ௬)

கள்ளுண்டல் காணிற் கணவற் பிரிந்துறைதல்
வெள்கில ளாய்ப்பிற ரிற்சேற—லுள்ளிப்
பிறர்கரும மாராய்த றீப்பெண் கிளைமைத்
திறமதுதீப் பெண்ணின் றொழில்.

(ப-ரை) காணில் - (பெண்கள் குணத்தைப்பற்றி) ஆராய்ந்து பார்க்குமிடத்து, கள் உண்டல் - கள்ளுண்டலும், கணவன் - தன் கணவனை, பிரிந்து உறைதல் - (புணர்ச்சி வேண்டாது) பிரிந்துறைதலும், வெள்கு இலள் ஆய் - நாணுதல் இல்லாதவளாய், பிறர் இல் சேறல் - பிறர்மனைக்குட் செல்லுதலும், பிறர் கருமம் உள்ளி - பிறர் கருமத்தை நினைத்து, ஆராய்தல்-பிறருடன் ஆராய்தலும், தீப்பெண்-தீயபெண்டிரோடு, கிளைமை - நேயமுடைமையும், (ஆகிய ஐந்தும்) திறமது - தனக்கேயுரியதாக, தீபெண்ணின் தொழில் - தீய பெண்டிரின் தொழில்களாம்; (எ-று.)

(ப-போ-ரை.) கள்ளுண்டலும், ஆராயுங்காற் றங்கணவனைப் புணர்ச்சி வேண்டாதே பிரிந்துறைதலும், நாணிலளாய்ப் பிறருடைய மனைக்கட் சேறலும், பிறர்கருமத்தை நினைத்துப் பிறருட னாராய்தலும், தீப்பெண்ணிணோடிணங்குதலு மென இவ்வைந்துந் தனக்கே கூறுகத் தீப்பெண்ணின் றொழில்.

(க-ரை.) கள்ளுண்டல் முதலிய ஐந்தும் தீப் பெண்ணின் தொழில் என்க.

உண்டல், உறைதல், சேறல், ஆராய்தல் என்பன தொழிற் பெயர்கள். வெள்கு - முதனிலைத் தொழிற்பெயர். இளமை - தொழிற் பண்புப்பெயர். கள்ளுண்டல் தன் மதிமயக்குக்கும், தன் குடிப்பழிக்கும் ஏதுவாவது. தீப் பெண்டிரிணக்கம் தனக்குத் தீங்கு பயக்கும். (உ௫)

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள் வெளவன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமி—னொருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலன் றிண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு.

(ப-ரை.) பெருங்குணத்தார்-நன்மைக் குணமுடையவர்களை சேர்மின் - சென்றடையுங்கள், பிறன் பொருள்-பிறன் பொருளை, வெளவல் மின் - கவராதேயுங்கள், கருங்குணத்தார் - தீக்குணத்தாரது, கேண்மை - நட்பை, கழிமின் - விடுங்கள், ஒருங்கு உணர்ந்து-முற்றுமறிந்து, தீ சொல்லே - (பிறரைச்சொல்லும்) தீயசொற்களையே, காமின் - (சொல்லாது) தடுங்கள், காலன் வரும் - யமன் வருவான், திண்ணிதே-இஃது உறுதியானதே, வாய்ச்சொல்லே அன்று - இது வாய்ச்சொல்லேயன்று, வழக்கு - உலக வழக்காம்; (எ-று.)

(ப-போ-ரை.) பெருங்குணத்தாரைச் சென்றடைமின், பிறன் பொருளைக் கொள்ளன்மின், தீக்குணத்தாரோடு

நட்பை விடுமின், எல்லாமுணர்ந்து பிறரைச் சொல்லுந்தீச் சொற்களைச் சொல்லாது காமின், காலன் வருகையுண்மையே, யாஞ் சொல்லுகின்ற எம்முடைய சொல்மாத்திரையேயன்று உலகின்கண் வழங்கி வருகின்ற வழக்காகக் கொள்க.

(க-ரை.) நற்குணமுடையாரைச் சேருங்கள், பிறன் பொருளைக் கவராதேயுங்கள், தீக்குணமுடையவரை ஒழியுங்கள், தீய சொற்களைப் பேசாதிருங்கள்; காலன் வருவன்; இஃது உண்மை.

பெருங்குணம் - பெருமைக்குக் காரணமான சாந்த முதலிய நற்குணங்கள். சொல்லிழுக்குப்பட்டுச் சோகாமலிருப்பான் தீச் சொல்லே காமின் என்றார். காத்தலாவது தன்னிடத் துண்டாகாது தடுத்தல். திண்ணிது - திண்மை என்னும் பண்படியாய்ப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. திண்ணிது வழக்கு என்பனவற்றைச் சேர்மின் முதலிய ஐந்தனையுங் கூறும் நீதி என்பதற்குப் பயனிலையாகக் கொள்வாரும் உண்டு. (உசு)

வான்குருவிக் கூடரக்கு வாலுலண்டு கோற்றருதல்
தேன்புரிந் தியார்க்குஞ் செயலாகா—தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன வென்னுரொ ரோவொருவர்க்
கொல்காதோ ரொன்று படும்.

(ப-ரை.) வான்குருவி கூடு - தூக்கணங் குருவியினாற் கட்டப்பட்ட கூடும், வால் உலண்டு - தூய உலண்டு என்னும் புழுக்களால் நூற்கப்பட்ட நூலும், கோல் தருதல் - கோற் புழுவால் செய்யப்படுவதாகிய கோற்கூடும், தேன் - தேனீக்களாற் றிரட்டப்பட்ட தேன் பொதியும், (ஆகிய இவ்வைந்தும்) புரிந்து - விரும்பி, யார்க்கும் - எவர்க்கும், செயல் ஆகா - செய்தல் முடியா; ஆதலால், வல்லவர் - எல்லாங் கற்று வல்லவரும், தாம்புரீஇ - தாம் விரும்பி, வாய்ப்பன என்னூர் - நமக்கிவை வாய்ப்பாகச் செய்யலாமெனக் கருதமாட்டார், ஒரோ ஒருவர்க்கு - ஒவ்வொரு

வர்க்கு, ஒல்காது - குறையாது, ஒரொன்று - ஒரோவொரு அருமை யாகிய செய்கை, படும் - உண்டாயிருக்குமாதலால்; (எ-று).

(ப-பொ-ரை.) வாலிய தூக்கணங்குருவி செய்யுங் கூடும், பேரெறும்புகளால் செய்யப்படுமரக்கும், வாலிய வுலண்டென்னும் புழுக்களால் நூற்றநூலும், வேறொரு புழுவாற் செய்யப்பட்ட கோற்கூடும், தேனீயாற் றிரட்டப்பட்ட தேன் பொதியும் என இவ்வைந்தும் விரும்பியவர்க்குச் செய்ய முடியாவாதலால் எல்லாங்கற்று வல்லவர் நமக்கிவை வாய்ப்பச் செய்யலாமென்று கருதார்; ஒரோவொருவற்குச் செயலாற் குறைபடாதே யொரோவொரு செய்கையருமைகள் படுமாதலால்.

(க-ரை.) வான் குருவிக்கூடு முதலியனவற்றைச் செய்தற் கருமை கருதி அவற்றை எல்லாங்கற்று வல்லவரும் செய்யலாமென்று மனத்தினுங் கருதார் என்றது.

வான் குருவி - தூக்கணங்குருவி. இது பற்பல நார்களைக் கொண்டு விசித்திரமான கூண்டுகளைப் பின்னுவதிற் றேர்ந்தது. அரக்கு - செம்மெழுகு. இச்செய்யுளால் தற்பெருமை பேசுதல் கூடாது என்பது பெறப்படும். தருதல் - தீபகமாய் இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. புரீஇ - சொல்லிசையளபெடை. (உஎ)

அறனட்டா னன்னெறிக்க ணிற்க வடங்காப்
புறனட்டான் புன்னெறிப்போ காது-புறனட்டான்
கண்டெடுத்துக் கட்களவு சூது கருத்தினுற்
பண்டெடுத்துக் காட்டும் பயின்று.

(ப-ரை.) அறன் - அறத்தை, நட்டான் - விரும்பியவன், நல்நெறிக்கண்-நல்லவழியில், நிற்க- நிற்பதற்கு, அடங்கா - நீதிக்கு அடங்காத, புறன் - அறத்துக்குப் புறமாகிய காரியத்தை, நட்டான்-விரும்பியவனுக்குரிய, புல்நெறி - புன்மையான வழிகளில்,

(ப-ரை.) மாணுக்கர் - மாணுக்கருடைய, குடுமி - சிகை யானது, நெய்தல் - கருநெய்தலின், முகிழ்துணை ஆம் - அரும்பி னளவாயிருத்தல் ஆகும், நேர்மயிர் - பொருந்திய மயிர், உய்தலும் - கழுவாது ஒழிதலும், ஒரு திங்கள் நாள் ஆகும் - ஒருமாத தினங்கள் ஆகும், செய்தல் - அவர்கள் செய்தலும், வந்து - (ஆசிரியனிடத்தே) வந்து, வணங்கி - (அவனைத்) தொழுது, வலம்கொண்டு - வலப்புற மாகச் சுற்றிவந்து, நுணங்குநூல் - நுட்பமாகிய நூல்களை, ஓதுதல்- படித்தலும், கேட்டல் - கேட்டலும். (ஆகும்) ஆம்; (எ-று.)

(ப-பொ-ரை.) நெய்தல் மொட்டினளவினதாம் மாணுக் கர்க்குக் குடுமி, தலையின்கண் நீண்டமயிரு மண்ணு தொழிவது ஒருதிங்களுளாகும், இனி அவர்கள் செய்கை ஆசானை வலங்கொண்டுவந்து வணங்குதலும், நூல்களைப் பாடமோதலும், ஓதியவற்றின் பொருள் கேட்டலுமாக மூன்று.

(க-ரை.) மாணுக்கன் குடுமி நெய்தல் மொட்டளவாக இருக்க வேண்டும், அவன் மாதம் ஒருமுறை தலை முழுகலாம்; ஆசிரியனை வணங்குதல் ஓதுதல் கேட்டல் அவனுக்குரிய கடமையாம்.

நெய்தல் - கருநெய்தல். முகிழ் - மொட்டு, மொக்கு. துணை - அளவு, உய்தல் - ஒழிதல். (கழுவா தொழிதல்) அதாவது தலை முழு காதொழிதல். நேர்மயிரு முய்தல் என்பதில் நேர்மயிர் உய்தலும் என உம்மை மாற்றிக்கொள்ளப்பட்டது. ஆகும் என்ற முற்று இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (௩௫)

ஒருவ னறிவானு மெல்லாம்யா தொன்று
மொருவ னறியா தவனு—மொருவன்
குணனடங்கக் குற்றமில் லானு மொருவன்
கணனடங்கக் கற்றானு மில்.

(ப-ரை.) எல்லாம் அறிவான் ஒருவனும் - எல்லாவற்றையும் அறிவானொருவனும், யாது ஒன்றும் அறியாதவன் ஒருவனும் - ...

தொன்றையும் அறியாதாரொருவனும், குணன் அடங்க இல்லான் ஆம் ஒருவனும் - நற்குண முழுதும் இல்லாதவனாகிய ஒருவனும், குற்றம் இல்லான் ஆம் ஒருவனும் - குற்றமுழுது மில்லாதாரொருவ னும், கணன் அடங்க கற்றானும் - நூற்றொகுதி முழுதுங் கற்றா ரொருவனும், இல் - இவ்வுலகத்தில் இல்லை; (எ-று.)

(ப-பொ-ரை.) எல்லாவற்றையும் அறிவாரொருவனும், யாதொன்று மறியாதாரொருவனும், குணனடங்க வில்லாதா ரொருவனும், குற்ற மில்லாதாரொருவனும், எல்லா நூற் றொகைகளும் ஒழியாமற் கற்றாரொருவனும் உலகத்தின்கண் இல்லை.

(க-ரை.) எல்லாமறிந்தவனும், ஏதுமறியாதவனும் நல்லியல்பே யில்லாதவனும், குற்றமேயில்லாதவனும், எல்லாக் கல்விகளையுங் கற்றவனும் இவ்வுலகில் இல்லை.

இச்செய்யுளால் மக்களில் ஒருவரை யொருவர் இழித்துரைக் கும் இழிகுணம் கூடாதென்பதும், எவரும் தற்பெருமை கொள்ளு தல் கூடாதென்பதும் உணரப்படும். ஒருவனறிவானு மெல்லாம் என்பது எல்லாம் அறிவான் ஒருவனும் என உம்மை பிரித்துக் கூட் டப்பட்டது. இல்லானும் என்பது தீபகமாக இரண்டிடங்களிலும் கூட்டப்பட்டது. குணன், கணன் என்பவற்றில் நகரம் ஈற்றுப் போலி. அடங்க - முழுதும். 'குணனடங்கக் குற்ற முளானும்' எனவும் பாடம். (௫௧)

உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட்செய் யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி யிவைவிடுவா னுயி
ரிழிவன் றினிது தவம்.

(௫௨-ரை.) உயிர் நோய் செய்யாமை - பிறிதோர் உயிர்க்குத் துன்பஞ் செய்யாமையும், உறு நோய் - தனக்குப் பிறரால் வருந்

துன்பத்தை, மறத்தல் - மறத்தலும், செயிர்நோய் - கோபத்தா லுண்டாகுந் துன்பத்தை, பிறர்கண் செய்யாமை - பிறரிடத்துச் செய்யாமையும், செயிர்நோய் - குற்றத்தைச் செய்யுந் துன்பத்தைத் தருகின்ற, விழைவு - அவாவும், வெகுளி - கோபமும், ஆகிய இவை - ஆகிய இவற்றை, விடுவான் ஆயின் - விட்டுவிடுவானே யானல், தவம் - அவனுல் செய்யப்படும் தவமானது, இழிவு அன்று - தாழ்ந்ததன்று, இனிது - இனிமையுடையதாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறிதோருயிர்க் கொரு நோயுஞ் செய்யாமை, தனக்குப் பிறரால் வந்துற்ற நோயை மறத்தல், கோபத்தால் தான் பிறர்மாட்டு இன்னுதன செய்யாமை, குற்றத்தைச் செய்யு நோயைப்பண்ணுங் காதலையும், மனத் தின்கட் பிறர்மேலுள்ள செற்றத்தையும் விடுவானுயின், அவன் செய்யுந்தவம் இழிவன்றி இன்பத்தைத் தரும்.

(க-ரை.) பிற உயிர்கட்குத் துன்பஞ் செய்யாமை முதலியன மேற்கொண்டு விழைவு வெகுளி முதலியவற்றை விட்டுவிடுவா னுயின், அவன் செய்யுந் தவம் இனிமையுடையதே யாகும்.

உயிர்க்கொலை முதலியவற்றை விட்டவனின் தவமே சிறப்புடை யது. இதனை, "உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய் யாமை, அற்றே தவத்திற் குரு," என்ற வள்ளுவர் வாய்மொழியா னும் தெளிக. விழைவும் வெகுளியும் பல குற்றங்களையும் துன்பங் களையும் விளைவிப்பனவாதலின், "செயிர் நோய் விழைவு வெகுளி" என்றார்.

( ௪ )

வேட்பவன் பார்ப்பான் விளங்கிழைக்குக் கற்புடைமை
கேட்பவன் கேடில் பெரும்புலவன்—பாட்டவன்
சிந்தையா னுகுஞ் சிறந்த துலகினுட்
டந்தையா னுகுங் குலம்.

(ப-ரை.) வேட்பவன் - வேள்வி செய்பவன், பார்ப்பான் பார்ப்பானுவான், விளங்கு இழைக்கு - விளங்குகின்ற அணிகல

அணிந்துள்ள பெண்ணுக்கு, கற்பு உடைமை - கற்பினை யுடைத்தா யிருத்தல் சிறந்தது, கேட்பவன் - பல நூல்களையும் ஆசிரியனை யடுத்துக் கேட்பவன், கேடுஇல் - அழிவில்லாத, பெரும் புலவன் - பெரிய புலவனுவான், அவன் - அப் புலவன், சிந்தையான் ஆகும் - மனத்தானுராய்ந்து பாடும், பாட்டு - செய்யுள், உலகினுள் - உலகத்தில், சிறந்தது - மேம்பட்டது, குலம் - ஒருவனது குலனுடைமை, தந்தையான் ஆகும் - அவன் தந்தையாலே அழகு பெற்று விளங்கும்; (எ-று.)

(ப-பொ-ரை.) வேள்வியைச் செய்தவன் பார்ப்பானுவான், கற்புடையாள் விளங்கிழையாவாள், கேடில்லாத பெரும் புலவனுவான் பலநூல்களையும் பொருளுணரக் கேட்பவன், அப்புலவன் சிந்தையினழகாலே பாடும் பாட்டுச் சிறப்பது, உலகின்கண் ஒருவர்க்குக் குலமுடைமை தந்தையழகாலேயாம்.

(க-ரை.) வேள்வி செய்பவன் அந்தணனும், கற்புடையவள் பெண்ணும், நூற் கேள்வியுடையவன் புலவனும், ஆராய்ச்சியினியல்வது பாட்டும், தந்தையான் ஏற்படுவது குலமுமாகும்.

வேட்டல் - வேள்வி செய்தல். விளங்கு இழை - வினைத் தொகைபுறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. சிந்தை - ஆராய்ச்சி. சிறந்தது என்பதை மூன்றுங் கூட்டுக. புலவன் - அறிவுடையவன்; புலம் - அறிவு. (௩௩)

வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிக
னுய்ப்பானே யாசா னுயர்கதிக்—குய்ப்பா
னுடம்பினர் வேலி யொருப்படுத்தா ரூர்த்
தொடங்கானேற் சேறற் றுணிவு.

(ப-ரை.) வைப்பானே - பொருளை யீட்டி வைப்பவனே, வள்ளல் - வள்ளலென்று சொல்லப்படுவான், வழங்குவான் - அப் பொருளைப் பிறர்க்குக் கொடுப்பவனே, வாணிகன் - வாணிகனென்று

சொல்லப்படுவான், உயர்கதிக்கு - (ஒருவனுக்கு நல்லறிவூட்டி, அவனை) மேலான பதவிக்கு, உய்ப்பானே - செலுத்தக் கூடியவனே, ஆசான் - சிறந்த ஆசிரியனாவான், உயர்கதிக்கு உய்ப்பான் - உயர்கதியிற் செலுத்த வல்லோன், உடம்பின் ஆர்வேலி - உடம்பின்கண் பொருந்தியுள்ள உயிராகிய வேலியை, ஒருப்படுத்து - நீக்கி, ஊன் - அவற்றின் தசையை, ஆர - உண்ண, தொடங்கானேல் - ஆரம்பியானாயின், சேறல் - (அவன்) உயர்கதியிற் செல்லுதல், துணிவு - உண்மையாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) ஈட்டி வைப்பானை வள்ளலாகக்கொள்ளப் படும், தான் பயனது கொள்ளாது பிறர்க்குப் பொருள்களைக் கொடுப்பவன் வாணிகனோ டொக்கும், அக்கொடையினாய பயன்விளைவு மறுமைக்குத் தனக்கு விளைத்துக் கோடலால் ஒருவர்க்கு ஆசிரியனாவான், அவனை யுயர்ந்த பிறப்பின் கண்ணே செலுத்த வல்லா னடாத்தும் ஒழுக்கத்தால் உடம் பாகிய வேலியையுடைய உயிர்களைக் கொன்று ஒருப் படுத்துப்போக்கி, அவற்றினூனை புண்ணத் தொடங்கா னாயின் உயர்கதிக்குச் சேறல் உண்மையாம்.

(க-ரை.) பிறர்க்குப் பயன்படும்படி பொருளை யீட்டி வைப் பவன் வள்ளல், அவற்றைப் பயன் கருதி எவனேனும் வழங்குவா னாயின் அவன் வாணிகனை யொப்பான், மாணாக்கனை உயர்கதிக்குச் செலுத்துபவனே ஆசிரியனாவான், மாணாக்கன் உயிர் கோறலும் ஊன் புசித்தலும் இல்லானானால் உயர்கதிக்குச் செல்லல் துணிவே யாம்.

உடம்பின் - இன்சாரியை. உயிர் நீங்கின் உடல் மாறிக் கெடு தலின், அஃது உடற்கு வேலியாகக் கூறப்பட்டது. ஒருப்படுத்தல் - நீக்குதல், இதில் பகுதியாகிய ஒரு - முதனிலைத் தொழிற் பெயர்.

வைததனை ஞைகும் வசைவணக்க நன்றாகச்
செய்ததனை ஞைகுஞ் செழுங்குலமுற்—செய்த

பொருளினு னாகுமாம் போக நெகிழ்ந்த
வருளினு னாகு மறம்.

(ப-ரை.) வைததனென்—(ஒருவன் பிறனை)வைததனால், வசை ஆகும் - (அவனுக்கு) வசையுண்டாகும், நன்றாக வணக்கம் செய்ததனால் - நனமை வணக்கம் என்பவற்றைப் பிறர்க்கும் செய்தத னால், செழுங்குலமும் ஆகும் - வளமையாகிய குடிப்பிறப்புமாகும், செய்த பொருளினால்-ஈட்டிய பொருளினால், போகம் ஆகும்-இன்பம் உண்டாகும், நெகிழ்ந்த - (பிறர் பொருட்டுத்) தன் மனம் நெகிழ்ந்த, அருளினான் - அருள் காரணமாக, அறம் ஆகும் - தருமம் உண்டா கும்; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறனையொருவன் வைததனால் வசை யாகும்; பிறர்க்கு வணக்கத்தையும், நன்மையையும் உள வாகச் செய்ததனால் வளமையுடைய குடிப்பிறப்பாம்; காலத்திலே முயன்றுசெய்த பொருளானின்பமாகும்; பிறர்க் குத் தன்மனம் நெகிழ்ந்த அருளினான் அறமாகும்.

(க-ரை.) பிறரைத் திட்டுதலாற் பழியும், வணக்கமும் நன் மையும் மேற்கொண்டிருத்தலாற் குலமேன்மையும், பொருளாற் போகமும், அருளால் அறமும் உண்டாகும்.

வணக்கம் என்பதை ஒரு பொருளாகவும் நன்று என்பதை ஒரு பொருளாகவுங் கொள்க. நன்று - பெயர், செய்தல் ஈண்டுப் பெருக்குதல் என்க.

போகம் - நுகர்ச்சி. இன்பம். நெகிழ்தல் - உருகுதல். அருள் - காரணங் கருதாது ஒரு தன்மைத்தா யெல்லார்மேலுஞ் செல்லு மிரக்கப் பெருக்கு. (௩௫)

இல்லியலார் நல்லறமு மேனைத் துறவறமு
நல்லியலி னாடி யுரைக்குங்கா—லல்லியற்
றானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமா
ஞானத்தால் வீடாக நாட்டு.

(ப-ரை.) இல் இயலார் - மனைவாழ்க்கை இயற்கையாக வுடையார், நல் அறமும், - நல்ல அறமும், ஏனை துறவறமும் - மற்றைத் துறந்தோர் செய்யும் நல்ல அறமும், நல்இயலின் - நன்மையாகிய முறையால், நாடி - ஆராய்ந்து, உரைக்குங்கால் - சொல்லுமிடத்து, நல் இயல் தானத்தால் - நல்லியலாகிய கொடையினுல், போகம் - செல்வ நுகர்ச்சியும், தவத்தால் சுவர்க்கம் ஆ - தவத்தினுல் சுவர்க்க நுகர்ச்சியாகவும், ஞானத்தால் - ஞானத்தினுல், வீடு ஆ - வீடாகவும், நாட்டு - நிலைபெறுத்துவாயாக; (எ-று.)

(ப-போ-ரை.) மனைவாழ்க்கை யியற்கையை யுடையார் செய்த நல்லறமும், மற்றைத் துறந்தார் செய்யு நல்லறமும், நல்லவியலினுலே யாராய்ந் துரைக்குங்கால் நல்ல இயல்புடைய கொடையாற் செல்வநுகர்ச்சியும், தவத்தாற் சுவர்க்க நுகர்ச்சியைப் பெறுவதும், மெய்யுணர்ச்சியால் வீடும் என்று நாட்டுக.

(க-ரை.) இல்லறத்தார் செய்த அறமும், துறவறத்தார் செய்த அறமும் ஆராயின், கொடையாற் செல்வ நுகர்ச்சியும் தவத்தாற் சுவர்க்கமும், ஞானத்தால் வீடும் பெறுவரென்பதாம்.

இல் - இல்வாழ்க்கை. இயல் - முறைமை; நடுவுநிலைமை. வீடு - முத்தி. ஞானத்தாலே வீடென்பது, "ஞானத்தால் வீடு" என்றுஞ் சிவஞான சித்தியினும் பெறப்படும். நல்லறம், துறவறம் என்பன அவற்றின் பயன்களை உணர்த்தி நின்றன. போகம் - குணவாகு பெயராய் அக் குணத்திற்குரிய பூமியை உணர்த்தலுமாம். (௩௧)

மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பு
முகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

(ப-ரை.) மயிர் வனப்பும் - தலைமயிராலுண்டாகும் அழகும், கண்கவரும் - (கண்டவர்) கண்களைக் கவர்தற்குரிய, மார்பின்

வனப்பும்-மார்பினுல் உண்டாகும் அழகும், உகிர் வனப்பும் - நகத்தால் உண்டாகும் அழகும், காதின்வனப்பும்-செவியினுல் உண்டாகும் அழகும், செயிர் தீர்ந்த - குற்றம் நீங்கின, பல்லின் வனப்பும்-பல்லினுலுண்டாகும் அழகும், வனப்பு அல்ல-அழகல்ல, நூற்கு இயைந்த-நூல்கட்குப் பொருந்திய, சொல்லின் வனப்பே - சொல்லழகே, வனப்பு - அழகாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) தலைமயிரான் வருமழகும், கண்டார் கண்ணைக் கவரு மார்பினுல் வருமழகும், உகிரான் வருமழகும், காதினுன் வருமழகும், குற்றந்தீர்ந்த பல்லினுன் வருமழகும் என இவ்வைந்தழகும் ஒருவற்கு அழகல்ல; நூல்கட்குப் பொருந்திய சொல்வன்மையால் வரும் அழகே அழகாவது.

(க-ரை.) தலைமயிர், மார்பு, நகம், செவி, பல் இவற்றினழகினும் சொல்லழகே சிறந்தது.

மயிர் - மக்கள் தலைமயிர். கண்கவர்தல் - பார்த்த கண் பார்த்த பொருளினின்றும் பெயராதபடி வயப்படுதல். நெஞ்சத்து நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற் கல்வியழகே மற்றெவ்வழகினும் மேம்பட்டது என்றபடி. நூற்கு இயைந்த சொல்லின் வனப்பே வனப்பு என்பதற்கு இலக்கண வரம்பின்படி பேசும் அழகு என்று வேறு பொருளுங் கூறலாம். வனப்பே - ஏ பிரிநிலை. (ருஎ)

தொழீஇ யடவுண்ணுர் தோழரிற் றுஞ்சார்
வழீஇய பிறர்பொருளை வெளவார்—கெழீஇக்
கலந்தாரிற் கீழ்காணுர் காணுய் மடவாய்
புலந்தாரிற் போற்றுர் புலை.

(ப-ரை.) தொழீஇ - தொழுத்தையானவள், அட உண்ணுர்-சமைத்துவைக்க அதனை அறிவுடையார் உண்ணமாட்டார், தோழர் - நண்பரது, இல் - வீட்டில், துஞ்சார் - தனியே புகுந்து உறங்கமாட்டார், வழீஇய - மறந்த, பிறர் பொருளை-பிறரது பொருள்

களை, வௌவார் - கவர்ந்துகொள்ள மாட்டார், கெழீஇ - தழுவி, கலந்தபின் - சிலரை நட்டபின்னர், கீழ் - அவரது கீழ்மையாகிய குணத்தை, காணார் - ஆராய்ந்து பார்க்கமாட்டார், புலந்தபின் - சிலருடன் பகைத்தபின்பு, புலை - அவரது கீழ்மைக் குணத்தை, போற்றார் - போற்றாது அவரை எதிர்த்துக் கெடுப்பார்; மடவாய் - பெண்ணே! காணாய் - இவற்றை ஆராய்ந்து பாராய்; (எ-று).

(ப-பொ-ரை.) தொழுத்தை யடவுண்ணார், தொழுவில் றனியே புக்குறங்கார், பிறர்பொருளை மறந்தாகிலும் வௌவிக்கொள்ளார், மருவிச்சிலரோடு நட்டபின்பு கீழ்மைக் குணத்தை யாராயார், மடவாய்! ஆராய்ந்து பாராய்! சிலரோடு பகைத்தபின்பு கீழ்மைக் குணத்தைப் போற்றாது எதிர்த்துக் கெடுப்பார்.

(க-ரை.) இழிவான வேலைக்காரிகள் சமைத்த உணவை யுண்ணல் முதலியவற்றை அறிஞர்கள் செய்யார்.

தொழுத்தை - அடிமைப்பெண், ஆண்பால் - தொழும்பன். வழுவிய எனற்பாலது வழீஇய என அளபெடுத்தது; சொல்லிசை யளபெடை. மடவாய் - மகடூஉ முன்னிலை. புலத்தல் - பகைத்தல். கீழ், புலை - பண்பாகுபெயர். ([illegible])

பொய்யாமை நன்று பொருணன் றுயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்கால் — பல்லார்முன்
பேணாமை பேணுந் தகைய சிறிதெனினு
மாணாமை மாண்டார் மனம்.

(ப-ரை.) பொய்யாமை - பொய்சொல்லாதிருத்தல், நன்று - நன்மையாம், பொருள் - தன் முயற்சியால் வருந்திய பொருள், நன்று - நன்மையாம், உயிர் - பிறிதோருயிர், நோவ - வருந்த, கொல்லாமை - கொல்லாதிருத்தல், நன்று - நன்மையாம், கொழிக்குங்கால் - ஆராயுமிடத்து, பேணும் தகைய - விரும்பும் தன்மையன, பல்லார் முன் - பலரறிய, பேணாமை - விரும்பாமை, நன்று - நன்மையாம்,

மாண்டார் மனம் - மாட்சிமைப் பட்டவர்களுடைய மனமானது, சிறிதுஎனினும் - சிறிதாயினும், மாணாமை - (மனைவாழ்க்கைக்கு மீள்கைக்கண்ணே ஒருப்படாமை, (நன்று - நன்மையாம்.) (எ-று.)

(ப-பொ-ரை.) பிறர்க்குப் பொய் சொல்லாமை நன்று, பொருளுண்டாக்குத னன்று, பிறிதோருயிரையுந் துன்புறக் கொல்லாமை நன்று, ஆராயுங்கால் தாம் விரும்புவன பலரறிய விரும்பாமை நன்று, மாட்சிமைப்பட்ட தவசிகள் சிறிதாயினும் மனைவாழ்க்கையின்கண் மீள்கைக்கு மாணாதொழிகை நன்று.

(க.ரை.) பொய்யாமை, கொல்லாமை, பேணாமை முதலியன நன்மை என்பதாம்.

பொய்யாமை, கொல்லாமை, பேணாமை, மாணாமை - எதிர் மறைத் தொழிற்பெயர்கள். 'மாண்டார் மனம் சிறிதெனினும் மாணாமை,' என்பதற்கு மாட்சிமைப் பட்டவர்களுடைய மனமானது கொஞ்சமாவது பெருமையடையாதிருத்தல் நன்மை எனவும் கூறலாம். ஒரு நன்று பின்னிரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. கொழித்தல் - தெள்ளுதல், ஆராய்தல். (௩௧)

பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லா
ருண்டா ரடிசிலே தோழிரிற்—கொண்டாரா
யாக்கைக்குத் தக்கவறி வில்லார்க் காப்படுப்பிற்
காக்கைக்குக் காப்பறுத்த சோறு.

(ப-ரை.) பண்டாரம் - பண்டாரத்துக்கும், பல்கணக்கு - பல கணக்குத் தொழிலுக்கும், கண்காணி - (பொருள்களைத் திருடு போகாமற் காக்கும்) மேற்பார்வைத் தொழிலுக்கும், இல்லார் - இல்லற விருத்திகளின் காவலுக்கும், பாத்து - பலபேர் பங்கிட்டு, உண்டு ஆர் - உண்டு வயிறு நிறைகின்ற, அடிசில் - உணவின் காவலுக்கும், யாக்கைக்கு - உடம்பு எடுத்ததற்கு, தக்க - தகுதி

யான, அறிவு இல்லார் - மேலான அறிவில்லாதவர்களை, தோழனின் - தங்கள் நண்பர்களைப்போல, கொண்டாராய் - மனத்துட் கொண்டவர்களாய், கா - காவற்றொழிலுக்கு, படுப்பின் - ஏற்படுத்தினால், (அவையெல்லாம் அவர்களிடத்து) காக்கைக்கு - காகத்துக்கு, காப்பு அடுத்த - தன் காவலில் சேர்ந்த, சோறு - சோறும், (அதாவது அச் சோற்றைப்போலக் காவலாலேயே களவு போம்); (எ-று.)

(ப-பொ-ரை.) பண்டாரத்தினையும், பல் கணக்கினையும், கண்காணியையும், தன் கோயிலுளாரையும் மங்கையரையும், தனக்காக்கு முணவினையும் பகுத்து மக்கள் யாக்கைக்குத் தக்க அறிவில்லாதாரையும் தன் தோழரைப் போலக் கொண்டு தேறிக் காக்கவிடின் அக்காவல் காக்கையைச் சோறு காக்கவிட்டதனோ டொக்கும்.

(க-ரை.) பண்டார முதலியவற்றை அறிவில்லார் காக்கவிடின் அக்காவல் சோறு காத்தற் றொழிலைக் காகத்திற் கிட்டாற்போலும்.

பண்டாரம் - பொருள் சேரிடம்; கருவூலம். கண்காணி - மேற்பார்வையாளி, இது கங்காணி என மருவியும் வழங்கும். கா - காவல்; முதனிலைத் தொழிற்பெயர். பகுத்தல் - உண்டாக்குதல்.

(௪௰)

உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி—நடையிட்டா
ரிவ்வகை யைவரையு மென்று மறுக்காரே
செவ்வகைச் சேவகர் சென்று.

(ப-ரை.) உடை இட்டார் - (தமக்கஞ்சி) உடுத்த உடையைப் போகவிட்டவர், புல்மேய்வார் - புல்பறித்து வாயிலிட்டோர், ஓடுநீர் புக்கார் - ஓடுகின்ற நீரிற் புகுந்தவர், படை இட்டார் - தமது படையை விட்டவர், பற்று ஏதும் இன்றி - பற்றுச் சிறிதுமில்லாமல்,

நடையிட்டார் - (ஓடமாட்டாது) நிலைதளர்ந்திருந்தவர், இவ்வகை ஐவரையும் - இவ்வகைப்பட்ட ஐவரையும், செவ்வகை சேவகர் - செம்மையான தன்மையையுடைய வீரர்கள், என்றும் - எந்நாளும், சென்று - (தீங்கு செய்யச்) சென்று, அணுகார் - சேரமாட்டார்; (எ-று.)

(ப-போ-ரை.) தமக்கஞ்சி யுடுத்த புடைவையைப் போக விட்டார், புல்லினைப் பறித்து வாயிலிட்டார், ஓடு நீரின்கட் புக்கார், கைப்படை துறந்தார், மற்றோராரணின்றி ஓட மாட்டாது நிலைதளர்ந்திருந்தார் இப்பெற்றிப்பட்ட ஐவரையு மொருநாளுந் தீங்கு செய்யச்சென்றணுகார் அறம்பொருள் செய்யுஞ் சேவகர்.

(க-ரை.) உடுக்கை யிழந்தவர் முதலிய ஐவரையும் வருத்தா தொழிதல் வீரர்க்குரிய அறமாம்.

உடை - உடுக்கை, தொழிலாகுபெயர். புல் மேய்தல் - புல்லை மெல்லுதல். இடல் - வைத்தல், செய்தல் என இரு பொருளில் வந்துள்ளது. உடையிட்டார் முதலிய ஐந்திடங்களிலும் எண்ணும்மைகள் தொக்கன. படை - படுத்தற்குரியது, படுத்தல் - கொல்லுதல். செவ்வகை - நீதித்தன்மை. ஓடுநீர்புக்கார் - புறங் காட்டி யோடுபவர் எனலுமாம். (சுக)

பூவாதாள் பூப்புப் புறங்கொடுத் தாளிலிங்கி
ஓவாதாள் கோல மொருபொழுதுங்—காவாதாள்
யார்யார் பிறர்மனை யாளுள்ளிட்டிவ் வைவரையுஞ்
சாரார் பகைபோற் சலித்து.

(ப-ரை.) பூவாதாள் - பருவமடையாத கன்னியும், பூப்பு புறங்கொடுத்தாள் - மாதவிடாய் நீங்கியவளும், இலிங்கி - தவ முடையவளும், ஒருபொழுதும் - ஒருகாலத்தும், கோலம் ஓவா தாள் - கோலஞ் செய்தல் நீங்காதவளாகிய, காவாதாள் - கற்பைக் காவாத பரத்தையும், யார் யார் பிறர்மனையாள் - பிறராகிய

யாவர்க்குமுரிய மனையாளும், உள்ளிட்ட இ ஐவரையும் - உள்ளிட்ட இந்த ஐவரையும், பகைபோல் சலித்து - பகைவரைப்போல் வெறுத்து, சாரார் - (அறிவுடையார்) சேரார்; (எ-று.)

(பு-பொ-ரை.) பூப்பில்லாத கன்னியும், பூப்புத் தவிர்ந் தாளும், தவத்திற்புக்க விலிங்கியும், கோலஞ் செய்கை யொருபொழுது மோவாளாகிக் கற்புக்காளாகாத கணிகையும், பிறர்யாவர்க்குரிய மனையாளு முள்ளிட்டிவ்வைவரையுஞ் சாரார் பகைபோல வேறுபட்டு.

(க-ரை.) பூவாத கன்னியையும், பூப்பு நீங்கிய விருத்தமாதை யும் தவப்பெண்ணையும் வேசியையும் பிறர் மனையாளையும் அறிஞர் சேரமாட்டார்.

பூவாதாள் - திரளாத பெண்; பூப்புப் புறங் கொடுத்தாள் - பூப்பு நின்று விட்டவள். தன்னை யெப்பொழுதும் கோலஞ் செய்துகொண்டு ஆடவரை மயக்குகின்றவளாதலாலும், கற்புப் பேணாதவளாதலாலும் வேசையை "ஓவாதாள் கோல மொரு பொழுதுங் காவாதாள்" என்றார். பகை - பண்பாகுபெயர். (சஎ)

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

(ப-ரை.) வருவாய்க்கு - தம்கணவர் வரும்படிக்கு, தக்க - தகுதியாகிய, வழக்கு அறிந்து - வழக்கத்தை (செலவை)த் தெரிந்து (செய்து), சுற்றம் - பந்துக்கள், வெருவாமை - (தங்கள் கோபச் சொல்லால்) பயந்தொதுங்காமல், வீழ்ந்து - (அவர்களை) விரும்பி, விருந்து ஓம்பி - விருந்தினரைப்பேணி, திரு ஆக்கும் - செல் வத்தை மென்மேலும் உயரச்செய்கின்ற, தெய்வதையும் - தெய் வத்தையும், எஞ்ஞான்றும், - எப்பொழுதும், தேற்றம் - தெளிவ

கிய, வழிபாடு செய்வதே - வணங்குதலைச் செய்வதே, பெண்டிர் சிறப்பு - மாதர்க்குரிய சிறப்புக்களாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) தமக்குள்ள பகுதியினளவறிந்து அதற்குத்தக்க போக்கறிந்து, சுற்றத்தை வெருவாமைத் தழுவி, விருந்து புரந்து, திருவினையாக்குந் தெய்வத்தை வழிபாடு செய்க. இவ்வைந்து தொழிலும் பெண்டிர்க்குச் சிறப்பாவன.

(க-ரை.) இல்வாழ்க்கைத் துணைவியர்க்குச் சிறப்புக்களாவன கணவருடைய வரவினளவைத் தெரிதலும், அதற்குத்தக்க செலவு செய்தலும், சுற்றந்தழுவுதலும், விருந்தோம்பலும், தெய்வத்தை வழிபடுதலும் என்பனவாம்.

வழங்குதல் என்னுந் தொழிற் பெயர் விகுதிகுன்றி முதனிலைத் தொழிற் பெயராய் வலித்தல் விகாரம் பெற்று வழக்கு என நின்றது. சுற்றம் — சூழ்தல்; தொழிலாகு பெயராய்ச் சூழ்வாரை யுணர்த்தியது. வெருவாமை—எதிர்மறை வினையெச்சம். விருந்து— புதுமை; பண்பாகு பெயராய்ப் புதியாரை யுணர்த்தியது. சிறப்பு— கருவியாகு பெயர்; சிறப்பைத் தருபவையாதலின். (௫௩)

நாள்கூட்ட மூர்த்த மவற்றோடு நன்றாமக்
கோள்கூட்டம் யோகங் குணனுணர்ந்து—தோள்கூட்ட
லுற்றானு மல்லானு மைந்து முணர்வானாற்
பெற்றானட் கொள்க பெரிது.

(ப-ரை.) நாள் கூட்டம் - நாட் பொருத்தமும், மூர்த்தம் - முழுத்தமும், அவற்றோடு - அவற்றுடனே, நன்று ஆம் - நன்மையாகிய, அ கோள்கூட்டம் - அந்தக் கோளின் பொருத்தமும், யோகம் - யோகமும், குணன் - (இவற்றாலுண்டாகிற) நன்மையும், உணர்ந்து - ஆராய்ந்தறிந்து, பெற்றால் - (இவை ஐந்தும் நன்மையாயிருக்கிற) காலைப்பெற்றால், ஐந்தும் உணர்வான் - இவ் வைந்

தனையு மறிந்து சில நன்மையாகிய காரியங்களைச்செய்வோனும், தோள் கூட்டல் உற்றானும் (ஒருவனோடு ஒருத்தியைத்) தோள் கூட்டலுற்றவனும், பெரிதுநாள் கொள்க - மிகவும் நல்ல நாளாகக் கொள்க ; (எ-று.)

(ப-பொ-ரை.) நாள் பொருந்துதலும், மூர்த்தமும், நன்றாய்க் கோள் கூடுதலும், அமிர்தயோக முதலாயின யோகமும், இவற்றினான் வருநன்மையு மாராய்ந்துணர்வா னாட் பெற்றாலந்நாளை நன்றென்று கொள்க; ஒருவனோ டொருத்தியைக் கூட்டலுற்றவனு மற்றுஞ் சிலநன்மைக் காரியஞ் செய்யலுற்றவனும்.

(க-ரை.) திருமணம் முதலிய நற்செயல்களுக் கெல்லாம் நாட்பொருத்தம் நாழிகைப் பொருத்தம் முதலியன பார்த்து நல்ல நாள் கொள்ள வேண்டும்.

நாள் - (வாரம், திதி, நட்சத்திரம்) கிழமை, பிறை, விண்மீன். மூர்த்தம் - மூழ்த்தம் என்பதின் மரூஉ. முழுத்தமாவது மூன்றே முக்கால் நாழிகை கொண்டவேளை. கோள் - ஞாயிறு திங்கள் முதலிய ஒன்பது கோள்கள். ஆண்பெண் கூட்டத்துக்குத் தோள் கூட்டம் என்றல் மரபு. வள்ளுவரும் 'பிறர்க்குரியாள் தோள் தோயாதார்' என்றனர். பெற்றால் - வினையெச்சம். ஆல் - அசை நிலை. (௪௯)

பேணடக்கம் பேணாப் பெருந்தகைமை பீடுடைமை
நாளொடுக்க மென்றைந்து நன்றாகப்— பூணொடுக்கம்
பொன்வரைக்கோங் கேர்முலைப் பூந்திருவே யாயினும்
தன்வரைத் தாழ்த்த லரிது.

(ப-ரை.) பேண் - உறவினரைப் பேணுதலும், அடக்கம் - அடக்க முடைமையும், பேணா - பிறரை விரும்பாத, பெருந் தகைமை - பெருந்தன்மையும், பீடுடைமை - பெருமை யுடைமை

யும், நாண் ஒடுக்கம் - நாணத்தா லுண்டாகும் ஒடுக்கமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட ஐந்தனையும், (பொருந்தாது) பூண் ஒடுக்கம் - பூணடங்கின, பொன்வரை - பொன்மலைபோன்ற, கோங்குஏர் - கோங்கரும்பின் அழகையுடைய, முலை - முலைகளை யுடைய, பூ திருவே ஆயினும் - தாமரை மலரில் வாழ்கின்ற திரு மகளேயானாலும், தன்வரை - (தன்கொழுநனைத்) தன்னளவின், தாழ்த்தல் - தாழ்த்துதல், அரிது - (நன்மையாதல்) இல்லை; (எ-று.)

(ப-பொ-ரை.) சுற்றத்தாரைப் பேணலும், அடக்க முடைமையும், பிறனொருவனைப் பேணாத பெருந்தகை மையும், ஒப்புரவு முதலாயுள்ள பீடுடைமையும் நாணால் வரும் ஒடுக்கமென்று சொல்லப்பட்ட ஐந்தனையும் பொருந் தாது தன் கொழுநனைத் தன்வரைத் தாழ்த்தலரிது, பொன் வரைக் கோங்கேர்முலைப் பூந்திருவேயாயினும்.

(க-ரை.) திருமகளைப்போன்ற செல்வியே யெனினும் ஒரு பெண் சுற்றந்தழுவுதல் அடக்கம் முதலியன உடையளாய்க் கணவன் அளவில் அடங்கியிருத்தலே நன்றாம்.

பேண் - முதனிலைத் தொழிற்பெயர். 'தன்வரைத் தாழ்த்தல்' என்றது தன்னளவில் கணவனை அடக்கி வைத்துக் கொள்ளுத லென்றற்கு. தகைமை - அழகு. அடக்கம் - மெய் மொழி யடக்கத் துடன் உளத்தடக்கமுமாம். அரிது, இன்மை குறித்து நின்றது.

வார்சான்ற கூந்தல்! வரம்புயர வைகலு
நீர்சான் றுயரவே நெல்லுயருஞ்— சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரு
மோவா துரைக்கு முலகு.

(ப-ரை.) வார்சான்ற - நீட்சி மிகுந்த, கூந்தல் - கூந்தலை யுடைய பெண்ணே! வைகலும் - நாடோறும், வரம்பு -(வயல்களின்) வரப்பானது, உயர - உயர்ந்திருக்க, (நீர் நிலைத்து நிற்கும்)

(அங்ஙனம்) நீர்சான்று - நீர் மிகுந்து, உயரவே -உயர்ச்சியடையவே, (அந்நீர்வளத்தால்)நெல்உயரும்-நெற்பயிரானது வளர்ந்து உயர்வடையும், (அங்ஙனம் வளர்ந்த நெல் நல்ல விளைவைக்கொடுக்கக் குடியானவர்கள் செழிப்படைவார்கள் அவ்வாறு நிலவளத்தால்) சீர்சான்ற - சிறப்பு மிகுந்த, தாவா - அழியாத, குடி உயர - குடியானவர்கள் உயர்வடைய, தாங்குஅரும் - (பிறரால்) தாங்குதல் அரிதாகிய, சீர் - சிறப்பினையுடைய, கோ உயரும் - அரசன் உயர்வான் (என்று) உலகு-இவ்வுலகமானது, ஓவாது உரைக்கும் - ஒழியாமற் சொல்லா நிற்கும்; (எ-று.)

(ப-பொ-ரை.) வார்சான்ற கூந்தலையுடையாய்! வயலினது வரம்புயரவே, வைகலு நீருயர்ந்து, நாடோறு நெல்லுயரும், சீரமைந்த கெடாத குடியுயரவே, பகைவராற் றாங்குதற்கரிய சீர்மையையுடைய மன்னுயரு மென்றொழியாதே சொல்லாநிற்கு மிவ்வுலகம்.

(க-ரை.) வரம்புயர நீருயரும், நீருயர நெல்உயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோனுயர்வான் என்பதாம்.

வார் - நீட்சி. சான்ற - சால் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம், தாவா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தா - பகுதி. உலகு - இடவாகு பெயராய் உலகோரை யுணர்த்தியது. பதவுரையில் இடையிடையே சிற்சில சொற்கள் பொருள் முடிபுக்கேற்ப இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. (௯௯)

அழியாமை யெத்தவமுஞ் சார்ந்தாரை யாக்கல்
பழியாமை பாத்தல்யார் மாட்டு—மொழியாமை
கன்றுசா வப்பால் கறவாமை செய்யாமை
மன்றுசார் வாக மனை.

(ப-ரை.) எ தவமும் - எவ்வகைப்பட்ட தவத்தினையும், அழியாமை - கெடுக்காமையும், சார்ந்தாரை - தம்மை வந்தடைந்தவரை,

ஆக்கல் - உயரச் செய்தலும், பழியாமை - பிறர் தம்மைப் பழியாமல், யார்மாட்டும் - யாவரிடத்தும், ஒளியாமை - மறைக்காமல், பாத்தல் - பகுத்துண்டலும், கன்றுசாவ - கன்று இறந்துபோன பின், பால் கறவாமை - அதன் (தாய்ப்பசுவின்) பாலைக் கறவாமை யும், மன்று சார்வு ஆக - மன்றை யடுத்திருக்க, மனைசெய்யாமை - மனையெடாமையும், (ஆகிய இவை நன்மையென்று கூறுவர் பெரி யோர்.) எ-று.

(ப-பொ-ரை.) யாதானு மொருதவத்தை யழியாமை யும், தம்மையடைந்தாரை யாக்குதலும், பிறர்தம்மைப் பழியாமை, யாவர் மாட்டு மொளியாமைப் பகுத்துண்டலும், கன்று சாவப் பால்கறவாமையும் மன்றருகு மனையெடா மையுஞ் செய்க.

(க-ரை.) தவத்தை யழிக்காமையும் அடைந்தாரை யாக்குத லும், பிறர் தம்மைப் பழியாமையும் கன்றிறந்த பசுவைப் பால் கறவாமையும் மன்று சார்வாக மனை யெடாமையும் நற்செயல்களா மென்பதாம்.

தவத்தை யழித்தலாவது - தவத்திற்கு இடையூறு செய்தல். பழியாமை - எதிர்மறைவினையெச்சம். மன்று - நீதித்தலம், சபை. மனைசெய்தல் - வீடெடுத்தல்; கட்டுதல். சாவ - என்பதற்கு இறந்து போகும்படி என்றும் கூறலாம். (சஎ)

நகைகொல்லார் நச்சியார்க் கென்றுங் கிளைஞர்
மிகைகொல்லார் வேளாண்மை கொல்லா—ரிகைகொல்லார்
பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய்! நன் [குணர்ந்தார்
என்பெறினுங் கொல்லா ரியைந்து.

(ப-ரை.) நச்சியார்க்கு - தம்மை விரும்பினவாது, நகை - விருப்பதனை, என்றும் - எக்காலத்தும், கொல்லார் - கொல்லமாட் டார், கிளைஞர்மிகை - தம் கிளைஞர் மிகையு(மு)ணவினை, கொல்லார் -

கொல்லமாட்டார், இசை கொல்லார் - தமக்கு வரும் புகழையுங் கொல்லமாட்டார், வேளாண்மை - ஒருவர் மற்றொருவர்க்குச், செய்யும் உபகாரத்தை, கொல்லார் - கொடுக்கமாட்டார், நன்கு உணர்ந்தார் - அறத்தை யறிந்தவர், என்பெறினும் - எவ் வின்பத்தைப் பெறலாயிருப்பினும், இயைந்து - மனம் இசைந்து, கொல்லார் - ஒருயிரையுங் கொல்லமாட்டார், பொன்பெறும் - பொன்னிறத்தைப்பெற்ற, பூ - அழகாகிய, சுணங்கின் - தேமலை யுடைய, மெல் முலையாய் - மெல்லிய முலைகளை யுடையாய்! (எ-று.)

(ப-போ-ரை.) தம்மை நச்சியாருடைய நசையை யென்ஞான்றுங் கொல்லார், தங்கிளைஞர் மிசையும் மிசையைக் கொல்லார், உபகாரத்தைக் கொல்லார், புகழைக் கொல்லார், பொன்போலும் பூஞ்சுணங்கின் மென் முலையாய்! மிகவு முணர்ந்தா ரெல்லாவின்பமும் பெற்றாராயினும் பிறிதோ ருயிரை மேவிக்கொல்லார்.

(க-ரை.) நன்குணர்ந்தார் நசை கொல்லார், கிளைஞர் மிசை கொல்லார், வேளாண்மை கொல்லார், இசை கொல்லார், ஒருயிரையுங் கொல்லார் என்பதாம்.

நசை - விருப்பம். கொல்லல் - கொடுத்தல். மிசை - உண்ணல் முதனிலைத் தொழிற்பெயர். இஃது ஆகுபெயராய் உணவை உணர்த்தியது. வேளாண்மை கொல்லார் என்பதற்குப் பலர்க்கும் பயன்படுவதான பயிர்த்தொழிலைக் கெடுக்கமாட்டார்கள் எனப் பொருளுரைத்தலுமாம். நன்கு - பண்புப்பெயர். (சஅ)

நீண்டநீர் காடு களர்நிவந்து விண்டோயு
மாண்ட மலைமக்க ளுள்ளிட்டு—மாண்டவ
ராய்ந்தன வைந்து மரணு வுடையானை
வேந்தனு நாட்டல் விதி.

(ப-ரை.) நீண்டநீர் - நகரைச்சுற்றி நீண்டுவளைந்த அகழி நீரும், காடும் - காட்டெல்லையும், களர் - சேற்று நிலவெல்லையும்

நிவந்து - உயர்ந்து, விண்தோயும் மாண்டமலை - வானத்தைத் தொடுகின்ற மாட்சிமைப் பட்டமலையும், மக்கள் - குடிமக்களையும், உள்ளிட்டு - அகப்படுத்து, மாண்டவர் - பெரியோர், ஆய்ந்தன ஆராய்ந்தெடுத்தனவாகிய, ஐந்தும் - இவ்வைந்தனையும், அரண் ஆ உடையானை - தனக்கு அரணாக வுடையவனை, வேந்தன் ஆ நாட்டல் - அரசனாக ஏற்படுத்தல், விதி - முறையாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) மிக்க நீரும் காடும் சேறும் கிளர்ந்து விண்டோயு மாண்டமலையும் மக்களுமகப்பட வாய்ந்து சொல்லப்பட்ட வைந்தானுந் தனக்கரணாக வுடையானை வேந்தனா நாட்டத்தகும்.

(க-ரை.) நீரரண் முதலிய ஐந்துவகை அரண் வலிமைகளையும் உடையான் ஒரு நாட்டுக்கு அரசனாக அமைதல் நன்மையாம்.

நீண்டநீர் - அகழி. களர் - சேற்றுநிலம்; பகைவர் கால்வைத்தால் அவர்கள் கால்களை உள்ளிழுத்து நடக்க முடியாதபடி செய்வது. உள்ளிட்டு என்பது சேர்த்து என்னும் பொருளிலும் வரும். காடு - குறுங்காடு, பெருங்காடுகள். மாண்ட என்பதை மக்களுக்கு அடையாக்கிப் போர்த்தொழிலிற் கைவந்த மக்கள் என்க. (சுக)

பொச்சாப்புக் கேடு பொருட்செருக்குத் தான்கேடு
முற்றாமை கேடு முரண்கேடு—தெற்றத்
தொழின்மகன் றன்னோடு மாறாயி னென்று
முழுமகற்குக் கேடி னுரை.

(ப-ரை.) உழுமகற்கு - உழவுத்தொழிலையுடைய மனிதனுக்கு, பொச்சாப்பு கேடு - மறதிகேடாம்; பொருள் செருக்கு- பொருள் மிகுதியாலுண்டாகும் செருக்கு, கேடு - கெடுதியாம், முற்றாமை - அறிவு முதிராமை, கேடு-கெடுதியாம், முரண்கேடு - பிறரோடு மாறு படுதல் கெடுதியாம், தெற்ற-தெளிவாக, தொழில்மகன் தன்னோடு - தனக்கு அடிமைத் தொழில் புரியும் மனிதனோடு, மாறு ஆயின் -

பகைமையானல், என்றும் - எந்நாளும், கேடின் உரை - கேடாகச் சொல்லக் கடவை; (எ-று.)

(ப-பொ-ரை.) கடைப்பிடி யில்லாமை கேடு, பொருள் மிகவுடைமையாற் களிக்குங் களிப்புக் கேடு, தானறிவு முதிராமை கேடு, பிறரொடு பகைகோடல் கேடு, தெளியத் தனக்குத் தொழில் செய்யு மகனேடு மாறுபட்டுச் சீறு வனுயின் உழவினுல் வாழுமகற்குக் கேடாய்விடும்.

(க-ரை.) வேளாளனுக்குப் பொச்சாப்பு முதலியன கேடுதரு வனவாம்.

செருக்குத்தான்—தான்-அசை. முற்றுமை-தொழிற் பெயர். கேடு - முதனிலை திரிந்த தொழிற் பெயர், கேடின் என்பதில் இன் சாரியை. மகன் தன்னெடு - தன் - சாரியை. பொச்சாப்பு - கடைப்பிடியின்மை. கடைப்பிடி-கருமமுடிக்குந் துணிவு. செருக்கு- களிப்பு. உழுமகன் - உழுதொழில் செய்து வாழுமகன். (௬0)

கொல்லாமை நன்று கொலை தீதெழுத்தினைக்
கல்லாமை தீது கதந்தீது—நல்லார்
மொழியாமை முன்னே முழுதுங் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி.

(ப-ரை.) கொல்லாமை -ஒருயிரையும் கொல்லாமை, நன்று- நன்மையாம், கொலை தீது - கொல்லுதல் தீமையாம், எழுத்தினை கல்லாமை தீது - எழுத்தைக் கற்றுக்கொள்ளாமை தீமையாம், கதம் தீது - பிறரைக் கோபித்தல் தீமையாம், நல்லார் மொழி யாமை முன்னே - அறிவுடையார் தனக்குச் சொல்வதற்கு முன்பே, கிளைஞர் முழுதும் பழியாமை — தன்னைச் சேர்ந்தவரெல்லாரும் பழியாதவழி யொழுகுவான், பல்லார் - பலர்க்கும், பதி - தலைவ னுதற் குரியவன் ; (எ-று.)

(ப-பொ-ரை.) ஓருயிரைக் கொல்லாமை நன்று, கொலை தீது, எழுத்தினைக் கல்லாமைதீது, பிறரை வெகுளல் தீது, அறிவுடையார் தமக்கு மொழிவதற்கு முன்னேயும் பழியாத வழியொழுகுவான் பலர்க்கு மிறைவனுவான்.

(க·ரை.) பலர்க்குந் தலைவனுவானெருவன் சான்றோர் அறிவு சொல்லுதற்கு முன்னமேயே தானேயுணர்ந்து கிளைஞரைப் பழியாமை முதலியன அவற்கு நன்மையாம்.

எழுத்தினைக் கல்லாமை - கல்வியைக் கல்லாமை. கதம் - கோபம். பதி - தலைவன். கொலை - தொழிற் பெயர். 'அறவினை யாதெனிற் கொல்லாமை', 'நல்லாறெனப் படுவது...யாதொன்றுங் கொல்லாமை சூழு நெறி" முதலியன கொண்டு, "கொல்லாமை நன்று" என்றார். (௲க)

உண்ணுமை நன்றவா நீக்கி விருந்துகண்மா
றெண்ணுமை நன்றிகழ றீதெளியார்—றெண்ணி
னரியரா வார்பிறரிற் செல்லாரே யுண்ணூர்
பெரியரா வார்பிறர் கைத்து.

(ப-ரை.) அவா நீக்கி - (துறந்து) அவாவினை யொழித்து, உண்ணுமை - உண்ணுது நோற்றல், நன்று - நன்மையாம், விருந்து - விருந்தினரை, கண்மாறு எண்ணுமை - கண்மாறு நினையாமை, நன்று - நன்மையாம், எளியார் இகழல் - தம்மின் எளியாரை இகழ்ந்துரைத்தல், தீது - தீமையாம், எண்ணின் - ஆராயுமிடத்தில், அரியர் ஆவார் - பெறுதற்கரியராவார் (யாரெனின்) பிறர் இல் செல்லாரே - பிறரில்லாளை விரும்பி அவரிடத்திற் செல்லாதவரே, பெரியராவார் (யாரெனின்) பிறர்கைத்து உண்ணூர்-பிறர் பொருளை யுண்ணுதவரே; (எ-று,)

(ப-பொ-ரை.) துறந்தவா நீக்கி யுண்ணுமை நோற்றல் நன்று, மனைவாழ்க்கையின்கண் அறிவாராயின் விருந்தினரைக் கண்மாறுத லினையாமை நன்று, தமக்கெளியாரை

யிகழ்ந்துரைப்பா ராயிற் றீதாம், ஆராயிற் பெறுதற் கரியரா வார் பிறர் மனையாளை விரும்பி யொழுகாதார், பெரியராவார் பிறரை யிரந்துண்ணாதார்.

(க-ரை.) அவாவை யொழித்துத் துறந்து உண்ணாது நோற் றல் நன்மை, விருந்தினரைக் கண்ணோட்டஞ் செய்தல் நன்மை, எளியாரை யிகழ்தல் தீமை, பிறர் மனை நோக்காதவர் அரியர், பிறர் பொருளுண்ணாதவர் பெரியர் என்பதாம்.

உண்ணாமை நோற்றற்கேயாதலால், உண்ணாமை என்பதற்கு உண்ணாது நோற்றல் என்றுரை கூறப்பட்டது. விருந்து-பண்பாகு பெயர், கண்மாறெண்ணாமை - கண்ணோட்டஞ் செய்தல். இல் - இடவாகு பெயர். கைத்து - கையிலுள்ளது; பொருள். விருந்தினர் மீது வெறுப்புறாமையும் பிறர் மனை விரும்பாதிருத்தலும் சிறந்த அறங்களாம். (ருஉ)

மக்கட் பெறுதன் மடனுடைமை மாதுடைமை
யொக்க வுடனுறைத லூணமைவு—தொக்க
வலவலை யல்லாமை பெண்மகளிர்க் கைந்து
தலைமகனைத் தாழ்க்கு மருந்து.

(ப-ரை.) மக்கள் பெறுதல் - தான் மக்களைப் பெறுதலும், மடன் உடைமை-அடக்க முடைமையும், மாது உடைமை-அழகுடை மையும், ஒக்க உடன் உறைதல் - (கணவனது) கருத்துக்கு இசைய அவனோடுறைதலும், ஊண் அமைவு - (அவனுண்ணும்) உணவின் மிகுதியை விரும்புதலும், தொக்க - கூடிய, ஐந்து - ஐந்து குணங் களும், அலவலை அல்லாமை - அற்ப காரியங்களல்லாமையால், பெண் மகளிர்க்கு-பெண்டிர்க்கு, தலைமகனை - தம் கொழுநனை, தாழ்க்கும் - தம்மிடத்தில் வணக்குகிற, மருந்து - மருந்தாகும் ; (எ-ம்.)

(ப-பொ-ரை.) தான் மக்களைப் பெறுதல், அடக்க முடைமை, அழகுடைமை, அவனினைவிற் கொக்க உடனுறை பு

குதல், அவனுண்ணும் உணவுக்கு விரும்புதலென இத் தொக்க ஐந்து குணமும் பிறரையொத்தலே தனக்கொழுக்கமாகவுடையளல்லளாயிற் றங்கொழுநனைத் தம்பாற் பெண்டிர் வணக்கும் மருந்தாவாள்.

(க-ரை.) மக்கட்பேறும், அடக்கமுடைமையும், அழகுடைமையும், கணவனுடைய கருத்துக்கிசைய அவனோடுடனுறைதலும், அவனுண்ணும் உணவை விரும்புதலும் ஆகிய இவ்வைந்து குணங்களும் பெண்டிர்க் கிருக்குமாயின் அவை அவர் கணவரை வணக்கு மருந்தாகும் என்பதாம்.

மகளிர்க்கு மக்கட்பேறே சிறந்ததாதலின், 'மக்கட்பெறுதல்' என்றார். மடன் - மடம் என்பதன் போலி. ஈண்டு அடக்கம் என்னும் பொருளது. ஊண் அமைவு என்பதற்குக் கணவனுக்குப் பிரியமான உணவைச் சமைக்குந்தொழிலில் பொருத்தமுடைமையும் எனப் பொருளுரைப்பினும் அமையும். மாது - விருப்பம், இங்கு விருப்பத்தைத் தரும் அழகையுணர்த்திற்று. தலைமகன்-கணவன் ஒரு சொல். அலவலை - அற்ப காரியம். (ருரு)

கொண்டான் கொழுந னுடன்பிறந்தான் றன்மாமன்
வண்டார்பூந் தொங்கன் மகன்றந்தை—வண்டாராய்!
யாப்பார்பூங் கோதை யணியிழையை நன்கியையக்
காப்பார் கருது மிடத்து.

(ப-ரை.) கொண்டான் - கணவனும், கொழுநன் உடன் பிறந்தான் - கணவனுடன் பிறந்தவனும், தன்மாமன் - தன்மாமனும், வண்டு ஆர் - வண்டுகள் மொய்க்கின்ற, பூ தொங்கல் - பூமாலையை அணிந்த, மகன்-மகனும், தந்தை - தகப்பனும், யாப்பார்-கட்டுதலமைந்த, பூகோதை - பூமாலையை யணிந்த, அணியிழையை-அழகிய நகையை அணிந்த ஒரு பெண்ணை, கருதும் இடத்து-நினைக்குமிடத்து, நன்கு இயைய - நன்மை யுண்டாக, காப்பார் - காப்பவராவார், வண்தாராய் - வளவிய பூமாலையை யுடையவனே; (எ-று.)

(ப-பொ-ரை.) தன்னைக்கொண்ட கொழுநனும், உடன் பிறந்தானும், மாமனும், வண்டார் பூந்தொங்கல் மகனும், தந்தையுமென இவ்வைவரும் யாப்பார் பூங்கோதை யணியிழையை மிகவுஞ் செறியக் காப்பார்கள்; வண்டாராய்.

(க-ரை.) ஒரு பெண்ணின் கற்புக் கழிவுவராமல் காக்கத் தக்கவர், கணவன், கணவனுடன் பிறந்தவன், மாமன், மகன், தந்தை இவ்வைவரும் என்றபடி.

வண்டாராய்! என்றது மகடூஉ முன்னிலை. அணியிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். நன்கியையக் காத்தலாவது கற்பாகிய நன்மையமையக் காத்தல். யாப்பு - தொழிற்பெயர்; கட்டுதல், கோதை - மாலை. (௫௪)

ஆம்பல்வாய் கண்மனம் வார்புருவ மென்றைந்து
தாம்பல்வா யோடி நிறைகாத்த—லோம்பார்
நெடுங்கழைநீண் மூங்கி லெனவிகழ்ந்தா ராட்டுங்
கொடுங்குழை போலக் கொளின்.

(ப-ரை.) ஆம் - உண்டாகிய, பல் - பல்லும், வாய் - வாயும், கண் - கண்ணும், மனம் - மனமும், வார்புருவம் - நீண்டபுருவமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட உறுப்பைந்தையும் (கண்டு) தாம்பல்வாய் ஓடி - தம் மனம் பலவிடங்களிலோடி, நிறைகாத்தல் ஓம்பார் - தமது நிறையைக் காக்கவியலாத ஆடவர், ஆட்டும் - அசைவிக்கிற, கொடுங்குழை - கொடுங்குழை யணிந்த பெண்ணை, நெடும் கழை நீள் மூங்கில் என - நெடிதாய்த் திரண்ட நீண்மூங்கில்போலக் கருதி, இகழ்ந்தார் — இகழ்ந்தாராய், போல - அம்மூங்கிலைப் போல, கொளின் - மனத்தகத்தே கொள்வாராயின், (அவ்வாடவர் நிறைகாத்த லோம்புவர்) (எ-று.)

(ப-பொ-ரை.) பல்லும் வாயும் கண்ணும் மனமும் புருவமுமாகிய உறுப்பைந்தையுங் கண்டு அரிவையர்க் கன்

பாய்த் தாம் பல இடங்களினுடித் தங்கள் நிறையைக் காக்க மாட்டாதார் குவளையையுந் தாமரையையு மசைவிக்கின்ற காதிற் கொடுங் குழையையுடைய அரிவையை நெடி தாய்த் திரண்ட நீள்மூங்கிலைப் போலக் கருதி யிகழ்வாராயின் அவர்க்கு நிறைகாக்கலாம்.

(க-ரை.) மனவுறுதியின்றிப் பெண்ணாசையால் ஓடித்திரி பவர், பெண்களின் பல்வாய் முதலிய ஐந்தையும் மூங்கிலின் தன் மையையுடையன எனக் கொண்டால், மூங்கிலே என்று பெண் தன்மையை இகழ்ந்து, பெண்விருப்பை நீக்கியவராய் விடுவர்.

அரிவையை மூங்கில் போலக் கொண்டிகழ்தலாவது, மூங்கிலிலுள்ள முத்து அவள் பல்லாகவும், மூங்கிலின் குழல் அவள் வாயாகவும், மூங்கிலின் கணு அவள் கண்ணாகவும், பொய்ப் பட்ட உள்ளம் அவள் மனமாகவும், மூங்கிலின் வில் அவள் புருவ மாகவும், கொண்டிகழ்தல். இவ்வகைக் கருதலால் அவள் மேலன்பு நிகழாதெனக் கொள்க. கழை - மூங்கில். தாம் - அசை. கொடுங்குழை - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. முத்து, மூங்கில் முதலிய இருபது பொருள்களிடத்தும் பிறக்கும். (ருரு)

பொன்பெறுங் கற்றான் பொருள்பெறு நற்கவி
யென்பெறும் வாதி யிசைபெறு—முன்பெறக்
கல்லார்கற் றாரினத்த ரல்லார் பெறுபவே
நல்லா ரினத்து நகை.

(ப-ரை.) கற்றான் - கற்றுவல்லவன், பொன்பெறும் - பொன் னைப் பெறுவான், நல்கவி - பாடவல்லவன், பொருள்பெறும் - (அரசனால்) எல்லாப் பொருள்களையும் பெறுவான், வாதி - வாது செய்து வெல்ல வல்லவன், என்பெறும் - ஏது பெறுவானெனின், இசைபெறும் - (வென்றனன் என்னும்) இசையைப் பெறுவன், முன் பெற - காலமுண்டாக, கல்லார் - கல்வி கல்லாதாரும், கற்றார் இனத்

தர் அல்லார் - கற்றாரினத்தரல்லாதாரும், நல்லார் இனத்து - நல்லோர் கூட்டத்தினடுவே, நகைபெறும்-அவரால் நகைக்கப்படுதலைப் பெறுவர்; (எ-று.)

(ப-போ-ரை.) கற்றுவல்லவன் பொன்னைப் பெறும், நற்கவி செய்யவல்லவன் அரசனாலே யெல்லாப் பொருளும் பெறும், வாதம் பண்ணி வெல்ல வல்லவன் யாது பெறுமெனின் வென்றானென்னும் புகழைப்பெறும், முன்னே இளமைக் காலத்திலே கல்லாதாரும், கற்று வல்லாரினத் தல்லாதாரும் நல்லாரினத்தினடுவே இகழ்ச்சி பெறுவர்.

**(க-ரை.)** கற்றான் பொன் பெறுவான், கவி பொருள் பெறுவான், வாதி இசை பெறுவான், கல்லாரும், அவரைச் சாராதவரும் இகழப்பெறுவர் என்பதாம். (௫௬)

நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்
தொல்லை யுயிர்க்கூற்றங் கோலாகி—ஒல்லுமெனின்
மாயம் பிறர்பொருட்கண் மாற்றுக மானத்தா
னாயி னழித லறிவு.

(ப-ரை.) (ஒருவன்) நல்ல - (பிறர் தனக்குச் செய்த) நல்லவற்றை, வெளிப்படுத்து - பலர்க்கும் வெளியிட்டுச் சொல்லி, தீய - தீயவற்றை, மறந்து ஒழிந்து - நிலையாக அவற்றின் எண்ணத்தை விட்டு நீங்கி, ஒல்லும் எனின் - தன்னால் இயலுமேயானால், உயிர்க்கு - இடையூற்றுக் குட்பட்ட பிற உயிர்கட்கு, ஒல்லை - விரைவில், ஊற்றங்கோல் ஆகி - ஊன்றுகோல் போல் நின்று உதவி, பிறர் பொருட்கண் - பிறர்க்குரிய பொருளில், மாயம் மாற்றுக - வஞ்சனைச் செயலை நீக்குக, மானத்தான் ஆயின் - மானமுடையான் ஆனால், அழிதல் - குற்றம் வந்த விடத்து உயிர்விடுதலே, அறிவு - அறிவுடைமையாம்; (எ-று).

(ப-பொ-ரை.) பிறர் செய்த நன்மைகளை வெளிப் படப்பண்ணி, பிறர் செய்த தீமைகளை நினையாது மறந் தொழிந்து, பிறவுயிர்கட் கிடையூறு வந்தால் அவ்வுயிர்கட்கு விரைந்து ஊற்றங்கோலாகி, தனக்கியலுமாகிற் பிறர் பொருட்கண் வஞ்சனையைத் தவிர்ந்து, பெரிய மானங் காத்தற் பொருட்டாகத் தான் சாதல் தனக்கு அறிவாவது ஆராயின்.

(க-ரை.) நல்லன வெளிப்படுத்தல் முதலியவற்றை ஒருவன் செய்யக்கடவன்.

மறந்து என்னாது 'மறந்தொழிந்து' என்றமையால் மனத்து நினைததலுமாகாது என்றதாயிற்று. நல்ல, தீய - குறிப்பு வினையாலணையும் பெயர்கள். ஊன்றுகோல் என்பது வலித்து அம் சாரியைபெற்று ஊற்றங்கோல் என்றாயிற்று. ஆய்தல் - ஆராய்தல். மானத்தான் - ஆன் உருபு நான்காவதன் பொருட்டுப் பொருளில் வந்தது. 'மானமழிந்த பின் வாழாமை முன்னினிது' என்ற இனியவை நாற்பதின் அடி கருதத்தக்கது. (௬௭)

தன்னிலையுந் தாழாத் தொழினிலையுந் துப்பெதிர்ந்தா
ரின்னிலையு மீடி லியனிலையுந்—துன்னி
யளந்தறிந்து செய்வா னரசமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்ற லான்.

(ப-ரை.) தன்னிலையும் - தனது நிலைமையினையையும், தாழா - தாழ்தலில்லாத, தொழில் நிலையும் - தான் தொடங்கிச்செய்யும் வினையினது நிலைமையினையும், துப்பு - வலியினால், எதிர்ந்தார் - (தன்னோடு) எதிர்த்தவராகிய பகைவரிடத்துளதாகிய, இன்னிலையும் - இனிய நிலைமையினையும், ஈடு இல் - கேடில்லாத, இயல்நிலையும் - உலகவழக்கு நிலைமையினையும், துன்னி - நெருங்கி, அளந்து அறிந்து - ஆராய்ந்தளவிட்டுத் தெரிந்து, செய்வான் - (போர்முத

லிய அரசுக்குரிய தொழிலைச் செய்பவன், அரசன் - அரசனாவான், யாதும் - எல்லாவற்றையும், பிளந்து அறியும் - பாகுபடுத்தறிகின்ற, பேராற்றலான் - பெரிய ஆற்றலையுடையவன், அமைச்சன் - அமைச்சனாவான்; (எ-று.)

(ப-பொ-ரை.) தன்னுடைய நிலைமையினையும், தாழ்வின்றித் தான் செய்யும் வினையது நிலைமையினையும், வலியினாற் றன்னுடனெதிர்ந்த மாற்றார் மாட்டுள்ள இனிய நிலைமையினையும், கேடில்லாத வுலக வழக்கு நிலைமையினையும், முன்புக் காராய்ந்தறிந்து செலுத்துவான் அரசனாவான், அந் நான்குமன்றி மற்றுமெல்லாம் வேறு பகுத்தறியும் பெரிய வாற்றலையுடையான் அமைச்சனாவான்.

(க-ரை.) தன்னிலை, தன்வினைநிலை, பகைவர்நிலை, உலகியனிலை என்பவற்றை யாராய்ந்து செய்பவனே அரசனாவான். இவற்றையே யன்றி மற்றெல்லாக் காரியங்களையும் பகுத்தறிய வல்லவனே அமைச்சனாவான்.

தாழ்தல் - தாமதித்தல். துப்பு - வலி. ஈடு-அழிவு. இயல் - உலகியல். ஆற்றல் - வினைமுடிக்குந் திறம். உலகியல் எல்லாவற்றினுஞ் சிறந்ததாதலின் 'ஈடில் இயல்' எனப்பட்டது. (௩௪)

பொருள்போக மஞ்சாமை பொன்றுங்காற் போந்த
அருள்போகா வாரறமென் றைந்து—மிருடீர்க்
கூறப் படுங்குணத்தான் கூர்வேல்வல் வேந்தனாற்
றேறப் படுங்குணத்தி னன்.

(ப-ரை.) பொருள் - பொருளும், போகம் - இன்பமும், அஞ்சாமை - (இடுக்கண் வந்தால் அதற்கு) அஞ்சாமையும், பொன்றுங்கால் - பிறிதோருயிர் அழிய வந்தவிடத்து, போந்த அருள் - மிக்க அருளும், போகா - நீங்காத, ஆர் - அரிய, அறம் - அறமும், என்ற ஐந்தும் - என்று சொல்லப்பட்ட இவ்வைந்தும், இருள் தீர -

குற்றந் தீர, கூறப்படும் - சொல்லப் படுகின்ற, குணத்தான் - தன் குணங்களை யுடையவன், கூர் - கூரிய, வேல் - வேற்படையை யுடைய, வல் வேந்தனால் - வலிய அரசனால், தேறப்படும் - (ஒரு கருமத்தின் மேற் செலுத்தத் தக்கவனென்று) தெளியப்படுகிற, குணத்தினன் - குணத்தை யுடையவனென்று சொல்லப்படு வான் ; (எ-று.)

(ப-போ-ரை.) பொருளும், இன்பமும், இடுக்கண் வந் தாலஞ்சாமையும் பிறிதோருயிர் பொன்றவந்தவிடத்து மிக்க வருளும், நீங்காத வரியவறமுமென்று சொல்லப்பட்ட இவ்வைந்துங் குற்றந்தீரச் சொல்லப்படுங் குணத்தான் கூர்வேலை வல்ல வேந்தனுலொரு கருமத்தினின்றுய்த் துத் தேறப்படுங் குணத்தினன்.

(க-ரை.) பொருளும், இன்பமும், இடுக்கண் வந்த காலத்து அதற்கஞ்சாமையும், பிறிதோருயிர் அழிய வந்தவிடத்து அதற்கிரங் கும் அருளுடைமையும், அருமையாகிய அறமும் என்று சொல்லப் பட்ட இவ்வைந்தனையு முடையவன் அரசனுலொரு கருமத்தின் மேற் செலுத்துதற்குரியனுவான்.

இன்பம் முதலியவற்றை நுகர்தல் பொருளில் வழிகூடாமை யின் பொருளை முன்வைத்தார். அறம்போலச் சிறந்தது மக்க ளுயிர்க்குப் பிறதொன்றின்மையான் ஆரறம் என்முர். என் றைந்தும் - என்பதில் என்ற என்பதின் ஈற்றகரந் தொகுத்தல். தேறல் - தெளிதல்; நம்புதல். போந்த என்பது வந்த என்னும் பொருளில் நின்றது. (ருக)

நன்புலத்து வையடக்கி நாளுமா டோபோற்றிப்
புன்புலத்தைத் செய்தெருப் போற்றியபி—னின்புலத்தின்
பண்கலப்பை யென்றிவை பாற்படுப் பானுழவோன்
நுண்கலப்பை நூலோது வார்.

(ப-ரை.) நன்புலத்து - விளை நிலத்திலுள்ள, வை - வைக்கோலை, அடக்கி - (தன்னிடத்துள்ளதாகத்) திரட்டி, நாளும் - நாடோறும்; மாடு - உழுமாடுகளை, போற்றி - காப்பாற்றி, புன்புலத்தை - புல்லிய நிலத்தை, செய்து - நன்செய்யாகத் திருத்தி, எரு போற்றியபின் - எருவினால் அதனைப்போற்றின பின்பு, பண் - பண்படுத்தல், கலப்பை - கலப்பையால் உழுதல், என்ற இவை - என்ற இவைகளை, இன்புலத்தின் பால் படுப்பான் - (உரமேற்றிய அந்த) நிலத்தினிடத்தே செய்பவன், உழவோன் - உழுதொழிலிற் சிறந்தவனாவான், (இங்ஙனம் பெரியோர்) நுண் - நுட்பமாகிய, கலப்பை நூல் - உழவு நூலை, ஓதுவார் - சொல்லுவார்கள்; (எ-று.)

(ப-போ-ரை.) விளைபுலத்திலுள்ள வைக்கோலினைத் தன் பாலுள்ளதாகத் திரட்டி, நாடோறும் உழும் பகடுகளைப் பாதுகாத்து, புன்புலத்தை நன்புலமாகத் திருத்தி எருவினாலதனைப் போற்றிய பின்பு, பண்ணுங்கலப்பைகளை இன்புலத்தின்கட் பகுதிப்படுப்பானுழவனாவானென்று சொல்லுவார் நுண்ணிய உழவு நூலோதிய அறிவார்.

(க-ரை.) வைக்கோலைச் சேர்த்து, அதனால் உழவெருதுகளைப் போற்றிப் புன்செய்யை எருவிட்டு நன்செய்யாகத் திருத்திப்பின், அந்த நன்செய்யைப் பண்படுத்தல் உழுதல் முதலியவற்றைச் செய்பவனே உழுதொழிலாளன் என்று சொல்லுவர் உழவு நூலோதியுணர்ந்தோர்.

புலம் - இடம், வயல். அடக்கல் - தன்னிடத்திற் சேர்த்தல். மாடோ என்பதில் ஓகாரம் இசை நிறை. இன்புலம் - நன்செய். எருவில்லாமையால் வன்மையற்றிருக்கும் நிலம் புன்புலம் எனப்படும். பண் - முதனிலைத் தொழிற் பெயர். கலப்பை - கருவியாகு பெயராய் அதன் காரியமாகிய உழவை யுணர்த்தியது. (௯௦)

ஏலாமை நன்றீத றீதுபண் பில்லார்க்குச்
சாலாமை நன்றுநூல் சாயினுஞ்—சாலாமை

நன்று தவநனி செய்தறீ தென்பாரை
யின்றுகா றியாங்கண் டிலம்.

(ப-ரை.) ஏலாமை - (ஒரு பொருளை ஒருவனிடத்துச் சென்றிரந்து அவர்கொடுக்க) ஏற்றுக்கொள்ளாமை, நன்று - நன்மையாம், பண்பு இல்லார்க்கு - நற்குணம் இல்லார்க்கு, ஈதல் - (அவர் வேண்டிய தொருபொருளை) கொடுத்தல், தீது - தீமையாம், நூல் சாலாமை - (நற்குண மில்லாதவர்க்கு) நூற்கல்வி நிரம்பாதிருத்தல், நன்று - நன்மையாம், சாயினும் - (ஒருவன்) கெடுவதாயிருந்தாலும், சாலாமை - நற்குணங்களால் உயர்வடையாதிருத்தலே, நன்று - நன்மையாம், நனி-மிகுதியாக, தவம் செய்தல் - தவத்தை இயற்றுதல், தீது - கெட்டதாம், என்பாரை - என்று சொல்பவர்களை, யாம் - நாம், இன்று காறு - இன்றளவும், கண்டிலம் - பார்த்திலம், (இவ்வாறு ஒருவரும் சொல்லமாட்டார்கள் என்றபடி); (எ-று.)

(ப-போ-ரை.) ஒருவர் மாட்டுச் சென்றிரந் தேலாமையுநன்று, குணமில்லாதார்க்கு ஒன்றையீதலுந் தீது, குணமில்லாதார்க்கு நூல் நிரம்ப அறிவியாமையும் நன்று, ஒருவன் சால்புடையனல்லாமை நன்று, மிகத்தவஞ் செய்தல் நன்றன்றென்று தாஞ்சாயினுஞ் சொல்லுவாரை இன்றளவும் யாங்கண்டிலேலம்.

(க ரை.) ஈயாமை முதலியன நன்மையாம், ஈதல் முதலியன தீமையாம் என்பவர் எவருமிலர்.

ஏலாமை, சாலாமை என்ற எதிர்மறைத் தொழிற்பெயர்கட்குப் பகுதிகள் முறையே ஏல், சால் என்பன. 'இன்றுகாறியாங்கண்டிலம்' என்றமையால் இனிக் காண்டுமோ வென்னுமையம் நிகழ்தற்கிடமாயிற்றெனக. சாயினும் என்பதன் உம்மை - உயர்வு சிறப்புப் பொருட்டு.

(௬௧)

அரம்போற் கிளையடங்காப் பெண்வியக்கத் தொண்டு
மரம்போன் மகன்மாருய் நின்று—கரம்போலக்

கள்ளநோய் காணு மயலைந்து மாகுமே
லுள்ளநோய் வேண்டா வுயிர்க்கு.

(ப-ரை.) அரம்போல் - அரம்போல் தன்னைத் தேய்க்கின்ற, கிளை - உறவும், அடங்கா - தனக்கடங்காத, பெண் - மனைவியும், வியக்கத்தொண்டு - அடங்காதன செய்யும் அடிமையும், மரம்போல் மகன் - மரம்போன்ற தன்புதல்வனும், மாறு ஆய் நின்று - மாறு பட்டு நின்று, கரம்போல - நஞ்சுபோல, கள்ளம் நோய் காணும் - வஞ்சனையாகிய நோயைச் செய்கிற, அயல்-அயலிருப்பும், ஐந்தும் - ஆகிய இவ்வைந்தும், ஆகும் எல் - உளவாயின், உயிர்க்கு - உயிர்களுக்கு, உள்ளநோய் - மற்றொரு மனப்பிணி, வேண்டா - வேண்டப்படாது; (எ-று.)

(ப-பொ-ரை.) அரம்போலத் தன்னைத் தேய்க்குங் கிளையும், தனக்கடங்காத மனைவியும், அடங்காதனவே செய்யுந் தொழும்பும், அறிவில்லாத தன்புதல்வனும், மாறாய்த் தமக்கிடமாய் நோயைச் செய்யுமயலிருப்பு மென இவ்வைந் தும் உளவாயினுயிருடையா ருள்ளத்திற்கு மற்றுநோய் வேண்டா.

(க-ரை.) அரம்போலுஞ் சுற்ற முதலிய ஐந்துமே மக்கட்கு, உள்ளக் கவலையை விளைத்தற்குப் போதும்.

காணும் மயல் எனைக்கொண்டு, ஏற்படத்தக்க அன்னியமாதரின் மயக்கம் என்றலும் ஒன்று. வியக்கத்தொண்டு என்பதற்குப் பாராட்ட அதன் பொருட்டுப் பணிபுரியும் அடிமையாளும் என்பது மாம். கிளை - தல்லீறு கெட்டதொழிற்பெயர், கிளைத்தல் - நெருங்கல்; இஃது ஆகுபெயராய் நெருங்குதலையுடைய உறவினரை யுணர்த்தி நின்றது. பெண் மகன் முதலிய உயர்திணைப் பெயர்கள் அஃறிணையோடு கலந்து இழிவினால் அஃறிணை முடிபையேற்றன. கிளை முதலியவற்றினிறுதியில் எண்ணும்மைகள் தொக்கன. (கா)

நீரற நன்று நிழனன்று தன்னில்லுட்
பாரற நன்றுபாத் துண்பானேற்—பேரற
நன்று தளிசாலை நாட்டற் பெரும்போக
மொன்றுமாஞ் சால வுடன்.

(ப-ரை.) நீர் அறம் - நீர் அறஞ்செய்தல், நன்று - நன்மையாம், நிழல் நன்று - நிழலறஞ் செய்தல் நன்மையாம், தன் இல்லுள் - தன் வீட்டில், பார் அறம் நன்று - பிறர் உறைய இடங் கொடுத்தலாகிய அறம் நன்மையாம், பாத்து - பிறவுயிர்கட்குப் பகிர்ந்து, உண்பானேல் - உண்பானாயின், பேர் அறம் - (அது) பெரிய அறமாம், தளிசாலை - கோவிலொடு மரங்கள் கவிந்த சாலையையும், நாட்டல் - அழியாது நிலைபெறச் செய்தல், நன்று - நன்மையாம், (இவ்வைந்தனையுஞ் செய்தவர்க்கு) பெரும்போகம்-பேரின்பம், உடன் - உடனே, சால - மிகுதியாக, ஒன்றும் - உண்டாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) நீரறஞ் செய்தனன்று, நிழலறஞ் செய்தனன்று, தன்மனையுட் பிறருறைய விடங்கொடுத்தனன்று, பகுத்துண்பானாயிற் பேரற நன்று, தளியுஞ்சாலையும் நிலைபெறச் செய்தல் நன்று, இவ்வைந்துஞ் செய்தார்க்குப் பெரும் போகம் பொருந்தும்.

(க-ரை.) தண்ணீர் அறம் முதலியன செய்தார்க்குப் போகப் பேறுகள் உண்டாகும்.

நீர் அறம் - தண்ணீர் வார்த்தலாகிய அறம். ஒன்றுமாம் என்பதில் ஆம் அசையிடைச் சொல். சால - உரிச்சொல் லடியாகப் பிறந்த வினையெச்சம். பார் அறம் - இடமில்லாது வருந்துவோர்க்கு இடம் உதவுதல். (கூரு.)

பிடிப்பிச்சைப் பின்னிறை யையங்கூழ் கூற்றோ
டெடுத்திரந்த வுப்பித் துணையோ—டடுத்துச்

சிறுபய மென்னார் சிதவலிப் பீவார்
பெறுபயன்பின் சாலப் பெரிது.

(ப-ரை.) பிடிப்பிச்சை - ஒரு பிடியுளடங்கும் பிச்சைச் சோறும், பின் இறை - பின்னர் விரலிறை யளவு பிச்சைச்சோறும், ஐயம் - உண்டோ இல்லையோ என்றையப்படும் பிச்சைச் சோறும், கூழ் - கூழும், கூற்று ஓடு எடுத்து - இல்லையென்று கூறுஞ்சொல் லையும் ஏற்கும் ஓட்டையும் மேலே தூக்கி, இரந்த - இரக்கலான, உப்பொடு - உப்பும் (ஆகிய), இத்துணை - இவ்வளவும், சிறு பயம் - சிறு பயனுடையன, என்னார் - என்று கருதாதவர்களாய், அடுத்து - (இரப்பவரிடத்தே) நெருங்கி, சிதவலிப்பு - குறைவுபட்ட பிச்சையை, ஈவார் - கொடுப்பவர், பின் - பின்பு, பெறு பயன் - அடையும் பயன், சால பெரிது - மிகப்பெரியது ; (எ-று.)

(ப-போ-ரை.) ஒரு பிடியுளடங்கும் பிச்சை, விரலிறை யுளடங்கும் பிச்சை, உண்டோ இல்லையோ என்றையப்படும் பிச்சை, கூழ்வார்த்தல், ஒருவன் சொல்லோடுக் கிரந்த உப்பு இத்துணையும் பொருந்திய பயன் சிறியவென்று கருதாராய்ச் சிதவலிப்பினை யீவார் பின்பு பெறும்பயன் மிகப் பெரிது.

(க-ரை.) பிடிப்பிச்சை முதலியவை சிறியவை இவைதரும் பயனும் சிறியனவென்று நினையாது கொடுப்பவர் பின்பு பெறும் பயன் மிகப்பெரிது என்பதாம்.

பிடிப்பிச்சை - கைப்பிடியுள்ள பிச்சைச் சோறு, கூழ் - மாவி னலாக்கப்படும் உணவு. கூற்று ஓடு எடுத்து இரந்த உப்பாவது - உப்பில்லாத ஒருவன் உப்பிடுங்கள் உப்பிடுங்கள் என்று கூவி ஓட்டையெடுத்துக்கொண்டு கேட்கும் உப்பு. சித வலிப்பு - சித்தம் வலிப்பு - மன உறுதி யென்றலுமாம். "இறப்பச் சிறிதென்னா தில்லென்னா தென்றும், அறப்பயன் யார்மாட்டுஞ் செய்க - முறைமையாற் புதவின், ஐயம் புகூஉந் தவசி கடிஞைபோல், பையநிறைத்து விடும்."

என்பதற்கு இணங்க இம்மித் துணையானும் இயைந்த கொடுத்துண வேண்டும். இறை, ஐயம் - அளவை யாகுபெயர்களாய்ப் பிச்சையை யுணர்த்தின. சிதவல் - குறைவுபட்டது. சிறுபயம் என்றது ஆகு பெயராய் அதனையுடைய பொருளை யுணர்த்தியது. (கச)

வெந்தீக்காண் வெண்ணெய் மெழுகுநீர் சேர்மண்ணுப்
பந்தன் மகற்சார்ந்த தந்தையென் — றைந்தினு
ளொன்றுபோ லுண்ணெகிழ்ந் தீயிற் சிறிதெனினுங்
குன்றுபோற் கூடும் பயன்.

(ப-ரை.) வெம் தீ - வெப்பமாகிய நெருப்பை, காண் - கண்ட, வெண்ணெய் - வெண்ணெயும், மெழுகு - மெழுகும், நீர் சேர்மண் - நீர் சேர்ந்த மண்ணும், உப்பு - உப்பும், அந்தம் - அழகை யுடைய, மகன் சார்ந்த-மகனைத்தழுவிய, தந்தை-தகப்பனும், என்ற ஐந்தினுள் - என்று சொல்லப்பட்ட ஐந்தினுள்ளே, ஒன்றுபோல் - ஒன்று போல, உளநெகிழ்ந்து - (இரவலரைக்கண்டு) மனமிரங்கி, ஈயின் - ஒருவன் கொடுப்பானாயின், பயன் - (அதனாலுளதாகும்) பயன், குன்றுபோல் கூடும் - மலைபோல மிகப் பெரியதாய் வந்து சேரும் ; (எ-று.)

(ப-போ-ரை.) வெவ்விய தீயைக்கண்ட வெண்ணெயும் மெழுகும், நீர்சேர்ந்த மண்ணும், உப்பும், தன்னழகிய குளிர்ந்த மகனைத் தழுவிய தந்தையுமென்று சொல்லப்பட்ட ஐந்தினுளொன்று போலே இரவலரைக் கண்டால் உள் நெகிழ்ந்து ஈதலினையந்த பொருள் சிறிதாயினு மதனால் வரும் பயன் குன்றுபோலப் பெரிதாய்க் கூடும்.

(க-ரை.) நெருப்பைக் கண்ட வெண்ணெய் முதலிய பொருள் களிலொன்றைப் போல மன முருகி இரவலர்க்கு வேண்டும் பொருள் சிறிதாய் இயைந்தவளவிற் கொடுத்த வொருவனுக்கு அச்சிறு கொடையாலுண்டாகும் பயன் மலைபோல மிகப்பெரிதாம்.

வெண்ணெய் முதலியவற்றினிறுதியில் எண்ணும்மைகள் தொக்கு நின்றன. காண் வெண்ணெய் - வினைத்தொகை. (கூடு)

குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்
துளந்தொட் டுழுவய லாக்கி—வளந்தொட்டுப்
பாகு படுங்கிணற்றோ டென்றிவ்வைம் பாற்படுத்தா
னேகுஞ் சுவர்க்கத் தினிது.

(ப-ரை.) குளம் தொட்டு - குளத்தைத் தோண்டி, கோடு பதித்து - (சுற்றிலும்) மரக்கிளைகளை வெட்டி நட்டு, வழி சீத்து - மக்கள் நடக்கும் வழியைச் செதுக்கி, உளம் - (தரிசு நிலத்தின்) உள்ளிடத்தை, தொட்டு - வெட்டி (செப்பஞ் செய்து), உழுவயல் ஆக்கி - உழுகின்ற கழனியாகச் செய்து, வளம் தொட்டு - (அவற்றுடனே) வளமாகத் தோண்டி, பாகுபடும் - (சுற்றிலும்) கரையுண்டாகும், கிணறு ஒடு - கிணற்றை யுண்டாக்குதலும், என்ற - என்று சொல்லப்பட்ட, இ ஐம்பால் படுத்தான் - இந்த ஐந்து பகுதிகளையும் உண்டாக்கியவன், சுவர்க்கத்து - சுவர்க்க லோகத்திலே, இனிது - இனிதாக, ஏகும் - செல்வான்; (எ-று.)

(ப-பேர்-ரை.) குளத்தைக் கல்லி, மரக்காவை நட்டு, வழி சீத்துத் திருத்தி, மேடாயின நிலங்களை யுட்டோண்டி, யுழு வயலாக்கி வளம் படத்தோண்டி, வகுப்புப் படக் கிணற்றொடு சொல்லப்பட்ட இவ்வைந்தும் மிகுதிபடச் செய்தான் சுவர்க்கத்திற்குச் செல்லு மோரிடையூறின்றி.

(க-ரை.) குளம் வெட்டுதல் முதலிய அறங்களைத் தினையும், செய்தவன் துறக்கம் புகுவன் என்பதாம்.

தொடுதல் - தோண்டுதல். கோடு - மரக்கிளை; அது சினையாகு பெயராய் மரத்தை யுணர்த்திற்று. உள்ளம் - உள்ளிடம். பாகு படுதல் - பகுக்கப்படுதல் என்றுமாம். ஒடு - ஒடு என நீண்டு, எண்ணி னிற்றற் பொருளில் வந்தது. பால் - பகுப்பு. இனிது

ஏகும் என்றது இடையூற்றுநிலத்துப் பெரும் பாம்பாய் வீழ்ந்த நகுடன் போலாது இடையூறின்றிச் செல்வான் என்றபடி. (கூகூ)

போர்த்து முரிந்திட்டும் பூசியு நீட்டியு
மோர்த்தொரு பான்மறைத் துண்பான்மே—யோர்த்த
வறமாமேற் சொற்பொறுக்க வன்றேற் கலிக்கட்
டுறவறம்பொய் யில்லறமே வாய்.

(ப-ரை.) போர்த்தும் -முழுமெய்யும் தோன்றாமற் போர்த்தும், உரிந்திட்டும் - உடுத்த உடையைக் களைந்தும், பூசியும்-உடம்பு முழுதும் நீறு பூசியும், நீட்டியும் - சடையை நீட்டியும், ஓர்த்து - ஆராய்ந்து, ஒருபால் மறைத்து - உடம்பில் ஒரு பக்கத்தை மறைத்தும், உண்பான் - உண்டற்கு, மேய் ஓர்த்த - மேவியாராய்ந்து கொண்டனவாகிய இவ்வேடங்களைந்தும், மேல் சொல் அறம் ஆம்-மேலோர் சொல்லிய துறவறமே, பொறுக்க - (துறவறமாயின் பிறர் சொல்லிய கடுஞ்சொற்களைப்) பொறுத்துக் கொள்க, அன்றேல் - பொறாராயின், கலிக்கண் - இக்கலிகாலத்தில், துறவறம் பொய் - துறவறம் பொய்யாம், இல்லறமே வாய் - இல்லறமே மெய்யாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) முழுமெய்யுந் தோன்றாமற் போர்த்தும், உடம்படைய நீறு பூசியும், சடையை நீட்டியும், உடம்பிலொரு கூற்றினை மறைத்தும் உண்டற்கு மேவியாராய்ந்து கொண்டன இவ்வேடங்களைந்தும் பண்டுள்ள நல்லார் சொல்லிய துறவறமே. துறவறமாயிற் பிறர் சொல்லிய கடுஞ்சொற்களைப் பொறுக்கப்பொறாராயிற் கலிகாலத்தின் கண் நிகழும் துறவறம் பொய்யாம், இல்லறம் மெய்யாவது.

(க-ரை.) உலகவர் பழியைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்வதாயின், துறவறம் கொள்க, அன்றேல் இல்லறமே கொள்க என்பது.

போர்த்தும் முதலிய உம்மைகள் எண்ணும்மைகளாதலின், மறைத்து என்பதனீற்றிலும் அவ்வும்மை சேர்க்கப்பட்டது. உண்பான் - பானீற்று வினையெச்சம். மேவி என்பது மேய் என்று யது. வாய்மை - மெய்: இதுவாய் என ஈறு தொகுத்தல். தவ வடிவங்கொண்டவர்களில் உண்மையுடையவர்களையும் போலித் தவசிகளையும் பகுத்தறியும் ஆற்றல் பொதுமக்கட் கின்மையான் அவர்கள் எல்லாத்துறவிகளையும் பழிப்பார்கள். துறவுக்கு முதலிலக்கணம் பொறுத்தல். இப்பொறை கொள்ளாதவன் துறவற மேற்கொள்ளல் தகாது என்றபடி. கலிகாலத்தில் போலித் துறவிகளே பெரும்பான்மையர் என்பது குறிப்பு. உரிந்திட்டு - இடு - துணைவினை. (அஎ)

**தான்பிறந்த வின்னினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்**
**தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து—தான்பிறராற்**
**சாவ வெனவாழான் சான்றோரா் பல்யாண்டும்**
**வாழ்க வெனவாழ்த னன்று.**

(ப-ரை.) தான்பிறந்த இல் நினைந்து - தான்பிறந்த குடியை நினைத்து, தன்னை கடைப்பிடித்து - தன்னை நல்லொழுக்கத்தில் வழுவாதபடி கடைப்பிடித்து, தான் பிறரால் கருதற்பாடு உணர்ந்து - தான் பிறராலே மதிக்கப்படுதற்குரிய செய்கைகளை அறிந்து, தான் பிறரால் சாவ என வாழான் - பிறராலே இவன் செத்தொழிக வென்று சொல்லும்படி யொழுகாது, சான்றோரால் - பெரியோரால், பல்யாண்டும் - பலயாண்டளவும், வாழ்க என - வாழ்கவென்று சொல்லும்படி, வாழ்தல் - ஒருவன் உயிர் வாழ்ந்திருத்தல், நன்று - நன்மையாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) தான்பிறந்த குடியை நினைத்து, தன்னை நல்லொழுக்கத்தின் வழுவாதவகைக் கடைப்பிடித்து, தான் பிறரால் மதிக்கப்படுஞ் செய்கையையுணர்ந்து, தான் பிறராற் சாகவென்று சொல்லும்படி யொழுகாது சான்றோராலே

பல்யாண்டும் வாழ்வானாக என்று சொல்லும்படி யொழுகுத னன்று.

(க-ரை.) ஒருவன் தான்பிறந்த குடியின் பெருமையை நினைத் தல் முதலியவற்றை யுடையவனாய் உயிர்வாழ்தல் நன்மையா மென்பதாம்.

இல் - குடி. இது முதலாகுபெயராய்த் தன்பெருமையை யுணர்த்தி நின்றது. கடைப்பிடித்தல் - தெளிவாயறிதல்; உறுதி யாய்ப் பற்றுதல். பாடு - பெருமை. வாழான் - முற்றெச்சம். சான்றோர் - நிறைவுடையவர். பெரியோர் ஒருவனது நல்லொழுக் கங்கண்டு மனமகிழ்ந்து இவன் இவ்வுலகத்தில் பல்யாண்டும் இனிது வாழ்ந்திருப்பானாகவென்று ஆசி கூறவேண்டுமென்பார், "சான்றோ ராற் பல்யாண்டும் வாழ்கவென," என்றார். (சுஅ)

நெடுக்கல் குறுக்கல் துறைநீர்நீ டாடல்
வடுத்தீர் பகல்வா யுறையே—வடுத்தீரா
வாகுமந் நான்கொழித் தைந்தடக்கு வானாகின்
வேகும்பம் வேண்டான் விடும்.

(ப-ரை.) (ஒருவன்) நெடுக்கல் - மயிரைச் சடையாக நீட்டு தலும், குறுக்கல் - மயிரைக் குறைத்தலும், துறைநீர் - கங்கை முத லிய தூய நீர்த்துறைகளில், நீடு ஆடல் - நெடிதாகப் போயாடுதலும், வடுதீர்பகல் - குற்றம் நீங்கின பகற்காலத்தில், வாயுறை - உண்ணு தலும் என்று சொல்லப்படுகிற, வடுதீரா ஆகும் - குற்றம் நீங்காதன வாகிய, அ - அந்த, நான்கும் ஒழித்து - நான்கையு மொழித்து, ஐந்து அடக்குவானாயின் - ஐம்புலன்களையும் அடக்குவானாயின், (அவன்) வே - சுடுகாட்டில் வேதற்குரிய, கும்பம் - குடம்போன்ற உடம்பினை, வேண்டான்விடும் - விரும்பாதவனாகி விட்டொழி வானெ; (எ - று.)

(ப-போ-ரை.) மயிரைச் சடையாக நீட்டுதலும், மயி ரைக் குறைத்தலும், தீர்த்தங்கள் நெடிதாகப் போயாடு

தலும், வடுத்தீர்ந்த பகலின்கண் உண்ணுதலென்கின்ற குற்றமுந் தீராவாகின்ற அந்நான்கினையு மொழித்தலும், ஐந்து புலன்களையு மடக்குவானாகிற் சுடலைத் தீயுள் வேகக்கடவ கும்பமாகிய உடம்பினை வேண்டான் விடும்.

(க-ரை.) சடையை வளர்த்தல் முதலியவற்றால் இப்பிறவி யொழியாது; ஐம்புலன்கள் அடக்கு மாற்றால் நீங்கும். புலன்களை யொடுக்காதவர்களுக்குச் சடைவளர்த்தல் முதலியன பயன்தரா.

நெடுக்கல் குறுக்கல் என்பன பிறவினைகள். உறை - உணவு. சுவை பார்த்தலின்றி ஆவைப்போல் உண்ணுதலென்றற்கு வாயுறை என்றார். ஏகாரம்-எண்; பிறவற்றிற்குங் கூட்டுக. வேகும்பம்-வினைத் தொகை. கும்பம் — குடம்; உடம்பிற்கு உவமையாகுபெயர். குடம் உடைந்தொழிதல் போன்று உடம்பொழிதலால் அது குடமெனப் பட்டது. வேண்டான் - முற்றெச்சம். வேகும்பம் வேண்டான் விடும் - பிறவியில்லாதவனாவா னென்றபடி. "மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்," என்ற குறட்கருத்து இச்செய்யுளிற் காணப்படும். (அசுக)

கொன்றான் கொலையை யுடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்காற்-கொன்றதனை
அட்டா னிடவுண்டா னைவரினு மாகுமெனக்
கட்டெறிந்த பாவங் கருது.

(ப-ரை.) கொன்றான் - ஒருயிரைக் கொன்றவன், கொலையை உடன்பட்டான் - பிறன் செய்யுங் கொலைக்கு உடன்பட்டு நின்ற வன், கோடாது - நாணுமல், கொன்றதனைக் கொண்டான் - கொன்ற தசையை விலைக்குக் கொண்டவன், கொழிக்குங்கால் - ஆராயுமிடத்து, கொன்றதனை அட்டான் - அங்ஙனங் கொல்லப் பட்டதன் ஊனைச்சமைத்தவன், இட உண்டான் - சமைத்ததனை இட உண்டவன் (என்று சொல்லப்படுகிற), ஐவரினும் - இந்த ஐவ ரிடத்தும், கட்டு எறிந்த பாவம் - வரம்பழித்ததினுலுண்டாகிய

பாவமானது, ஆகும் என - நிகழும் என்று, கருது - நீ கருதுவா யாக ; (எ-று.)

(ப-போ-ரை.) உயிரைக் கொன்றவன், கொலைக்குக் கோடாதே யுடன்பட்டவன், கொல்லப்பட்டதனுடைய ஊனைக்கொண்டவன், ஆராயுங்காற் கொல்லப்பட்டதனுடைய ஊனை அட்டான், அதனையிடவுண்டான் என இவ்வைவர் மாட்டு முளவாய் நிகழுமென்று வரம்பழித்துச் செய்த பாவத்தைக் கருது.

(க-ரை.) கொலை செய்தவன்முதல் உண்டவன் ஈறாக எல்லார்க்குமே கொலைக்குற்றமுண்டு.

கொன்றான், உடன்பட்டான், கொண்டான், அட்டான், உண்டான் - வினையாலணையும் பெயர்கள். ஊன் தின்பவர்களே கொலைக்குரிய எல்லாச் செயல்கட்கும் காரணராவரென்பதை, "தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்,விலைப்பொருட்டால் ஊன்தருவா ரில்," என்ற திருக்குறளால் உணர்க. கொலையை - உருபுமயக்கம். கட்டு - உயர்ந்தோர் உயிர்கொல்லலாகா தெனக்கூறிய நீதிவரம்பு. (எ௦).

சிறைக்கிடந்தார் செத்தார்க்கு நோற்பார் பலநாள்
உறைக்கிடந்தா ரொன்றிடையிட் டுண்பார்—பிறைக்கிடந்
முற்றனைத்து முண்ணு தவர்க்கீந்தார் மன்னவராய்க் [து
கற்றனைத்தும் வாழ்வார் கலந்து.

(ப-ரை.) சிறை கிடந்தார் - சிறைக்கூடத்தி லிருந்தவர்க்கும், செத்தார்க்கு - இறந்தவர்கட்கு (நற்பதவி கிடைக்கும்பொருட்டு), நோற்பார் - உண்ணாது நோன்பியற்றுவோருக்கும்: பலநாள் - பல நாளும், உறைகிடந்தார் - மருந்தில் கிடந்தார்க்கும், ஒன்று இடை இட்டு - ஒருநாள் (உணவில்லாமல்) இடையில் விட்டு, உண்பார் - (மறுநாள்) உணவுண்பவர்க்கும், பிறைகிடந்து - முதற்பிறையி

விருந்து, முற்றனைத்தும் - அது முடியும்வரையிலும், (பூரணமை வரையிலும்), உண்ணாதவர்க்கு - உணவு உண்ணாதவர்க்கும், ஈந்தார் - உணவளித்தவர்கள், அனைத்தும் கற்று - எல்லா நீதிகளையும் படித்து, மன்னவராய் - அரசராகி, கலந்து - உயர்ந்த பதவியிற்சேர்ந்து, வாழ்வார் - வாழ்வார்கள்; (எ-று.)

(ப-போ-ரை.) சிறையின்கட் கிடந்தார், செத்தவர்க்கு நன்மை வேண்டி யுண்ணாது நோற்பார், பலநாளுந் தான் கொண்டபிணிக்கு மருந்தாயுண்ணாது கிடந்தார், ஒருநா ளிடையிட் டுண்பார், பிறைக்கிடந்து நிரம்புமளவும் உண்ணாத தவசிகளென இவ்வைவர்க்கும் உணவு கொடுத்தவர்கள் அனைத்து நூல்களுங் கலந்து கற்ற மன்னராய் வாழ்வார்.

(க-ரை.) சிறைக்கிடந்தார் முதலிய ஐவருக்கும் உணவு கொடுத்தவர்கள் கல்வியறிவுள்ள அரசராய் நீடுவாழ்வார்.

சிறைக்கிடந்தார் - சிறைவாசம் புரிவோர், வெளியேறிப் பொருள்தேடமுடியாது அந்தப்புரத்திலிருக்கும் மாதரெனலுமாம். உறை - மருந்து. உறைக்கிடந்தார் - மருந்துண்டு பத்தியத்திலிருப் பவர். ஒருநாள் இடையிட்டுண்ணுதல் - ஒருவகை நோன்பு. ஈற்றில் விரித்துக் கூறப்பட்ட நான்கனுருபு மற்றைய நான்கிடங்களிலுங் கூட்டியுரைக்கப்பட்டன. (எக)

ஈன்றெடுத்தல் சூல்புறஞ் செய்தல் குழவியை
யேன்றெடுத்தல் சூலேற்ற கன்னியை—யான்ற
வழிந்தாளை யில்வைத்தல் பேரறமா வற்ற
மொழிந்தார் முதுநூலார் முன்பு.

(ப-ரை.) ஈன்று எடுத்தல் - தாய் தானீன்ற குழவியை யோம்பி வளர்த்தல், சூல்புறம் செய்தல் - தான் கொண்ட சூலை யழியாது புறப்படுத்தல், குழவியை - வளர்ப்பாரில்லாத குழவியை, ஏன்று எடுத்தல் - கண்டெடுத்து வளர்த்தல், சூல் ஏற்ற கன்னியை-

சூல்கொண்ட கன்னியையும், ஆன்ற அழிந்தாளை - மிகவும் அழிந்த வளையும், இல் வைத்தல் - தன் வீட்டில் வைத்துப் போற்றலும், (ஆகிய இவ் வைந்தும்) முதுநூலார் - பழைய நூலறிவுள்ள பெரியோர், முன்பு - முற்காலத்தில், பேர்அறம் ஆ - பெரிய அறமாக, ஆற்றமொழிந்தார் - மிகவும் சொன்னார்கள் ; (எ-று.)

(ப-பொ-ரை.) ஈன்ற தாய் குழவியைத் துறவாதோம்பி வளர்த்தல், தான்கொண்ட சூலைத் தானழியாது புறஞ்செய்தல், வளர்ப்பாரில்லாத குழவியைக் கண்டாலென்று வளர்த்தல், சூலேற்ற கன்னியையும் அழிந்த மனையாளையும் நீக்காது தன்னில்வைத்துப் புறந்தருதல் என இவ்வைந்தும் பெரிய அறமாக மிகவுமொழிந்தார் முதிய நூலையுடையவர் பண்டு.

(க-ரை.) ஈன்றெடுத்தல் முதலிய ஐந்தும் பெரிய அறமாக முற்காலத்தில் நூலறிவையுடைய பெரியோர் சொன்னார்கள்.

குழவியைப் பெற்ற தாயே வளர்த்தல் சிறந்தது. பிள்ளைகளை வளர்த்தலும், மருத்துவம் பார்த்தலும், கருப்பவதிகளையும் கைம்பெண்களையும் பேணுதலும் பெரும்பாலும் பெண்களே செய்யத்தக்கனவாதலின் இச் செயல்கள் இல்லறப் பெண்களுக் குரியன என்றபடி. இச்செய்யுளில் குழந்தைகளைப் பேணி வளர்க்கும் பொறுப்புப் பெண்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பது கருதத்தக்கது. இதனை யறியார் பிறரைக் கொண்டுகுழவியை வளர்ப்பித்தல் நல்ல நாகரிகம் என்பார். எடுத்தல் - தூக்குதல் ; இங்கு வளர்த்தற் பொருளில் வந்தது. அற்ற மொழிந்தார் என்பதை அற்றம் மொழிந்தார் என்று கொண்டு உண்மையிற் சொன்னார்கள் என்பதுமாம். ஆற்ற - மிகவும் என்றவிடத்து முதல் குறுகியது. என்று - எல் பகுதி. (எஉ)

வலியழிந்தார் மூத்தார் வடக்கிருந்தார் நோயால்
நலியழிந்தார் நாட்டறைபோய் நைந்தார்—மெலிவொழிய

வின்னவரா மென்னரா யீந்த வொருதுற்று
மன்னவராச் செய்யு மதித்து.

(ப-ரை.) வலி அழிந்தார் - வலியழிந்தவர், மூத்தார் - முதியர், வடக்கு இருந்தார்-வடக்கு நோக்கியிருந்து நோற்பவர், நோயால் நலிபு அழிந்தார் - பிணியினால் நலிந்தழிந்தவர், நாட்டு அறைபோய் நைந்தார் - தமது நாடுவிட்டுப் போய்த் தளர்ந்தவர், (என்று சொல்லப்படுகிற இவ்வைவருடைய) மெலிவு ஒழிய - தளர்ச்சி நீங்கும்படி, இன்னவர் ஆம் என்னார் ஆய் - இன்னாராவாரென்று ஆராயாமல், ஈந்த - கொடுத்த, ஒரு துற்று - ஒருகவளவுணவு, (கொடுத்தவரை அடுத்தபிறவியில்) மதித்து-கணித்து, மன்னவர் ஆ செய்யும் - அரசராகச் செய்யும்; (எ-று.)

(ப-பொ-ரை.) வலிகெட்டவர், மூத்தவர், வழிபட்டுண்ணாது வடக்கிருந்தார், பிணியானலியப்பட்டழிந்தார், தமது நாடுவிட்டுப் போய்த் தளர்ந்தாரென இவ்வைவரும் தளர்வொழியும்படி உற்றாரயலாரென் றாராயாதே யீயப்பட்டதோ ருணவு மன்னவராகச் செய்யு மதித்து.

(க-ரை.) வலியழிந்தார் முதலிய ஐவருக்கும் ஒரு துற்றுணவு கொடுத்தவர் அவ்வறப்பயனால் அரசராய்ப் பிறப்பார் என்பது.

வடக் கிருத்தல் - வடக்கு நோக்கியிருந்து நோற்றல் வடபானோக்கித் தியானித்தலுமாம். நாட்டறை போதல் - நாட்டைவிட்டு நீங்கிப்போதல். அறை - அறுதல்; தொழிற்பெயர். நலிபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். துற்று - சிறிதுணவு. 'நம்மவர் அயலார்' என்னும் பாகுபாடின்றி எல்லோருக்கும் ஒரு தன்மைத்தாகச் செய்யுமறமே சிறந்ததாதலின் "இன்னவரா மென்னாரா யீந்த" என்றார். (எ௯).

கலங்காமை காத்தல் கருப்பஞ் சிதைந்தா
விலங்காமை பேரறத்தா லீற்றம்—விலங்காமைக்

கோடல் குழவி மருந்து வெருட்டாமை
நாடி னறம்பெருமை நாட்டு.

(ப-ரை.) கருப்பம் - வயிற்றுட் கருவானது, கலங்காமை - அழியாமல், காத்தல் - காத்தலும், (கருப்பம்) சிதைந்தால் - கருப்பம் சிதைந்து விட்டால், பேர் அறத்தால் - பெரிய அறத்தன்மையால், இலங்காமை - (பிறர்க்கு) வெளிப்படாமல், ஈற்றம் - மறையப் பெயர்த்து வாங்குதலும், குழவி - குழவியை, விலங்காமை கோடல் - இடை விலங்காமற்செய்து கொள்ளுதலும், மருந்து - (குழவி பிறந்து நோய் கொண்டால் அதற்கு) மருந்தும், வெருட்டாமை - (அக்குழவியை) அச்சுறுத்தாமையும், (ஆகிய இவ்வைந்தினையும்) நாடின் - ஆராயின், பெருமை அறம் - பெரிய அறமென்று, நாட்டு - நிலைபெறுத்துவாயாக; (எ-று.)

(ப-பொ-ரை.) வயிற்றுட் கருவழியாமை காத்தலும், கருப்பஞ் சிதைந்தாற் பிறர்க்கு வெளிப்படாமை மறையப் பெயர்த்து வாங்குதலும், குழவியை இடைவிலங்காதபடி இயற்றிக் கோடலும், குழவி பிறந்து பிணிகொண்டால் அதற்கு மருந்தும், அக்குழவியை அச்சுறுத்தாமையும் என்னுமிவ்வைந்தினையும் பெரிதாய அறமாக நாட்டுவாயாக.

(க-ரை.) கருப்பங் கலங்காமை காத்தல் முதலிய ஐந்தும் பேரறமாக நாட்டுவாயாக என்பதாம்.

கலங்காமை இலங்காமை விலங்காமை என்பன எதிர்மறை வினையெச்சங்கள். வெருட்டாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். வெருட்டு - பகுதி. ஈற்றல் - ஈன்றல்; விலங்காமை - விலகாமை. அறம் பெருமை என்பன முன்பின்னாய் மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டன. (எச)

சூலாமை சூலிற் படுந்துன்ப மீன்றபி
னேலாமை யேற்றால் வளர்ப்பருமை—சால்பவை

வல்லாமை வாய்ப்ப வறிபவ ருண்ணாமை
கொல்லாமை நன்றாற் றொழித்து.

(ப-ரை.) சூலாமை-சூல் கொள்ளாமையால் வருந்துன்பமும், சூலின்படும் துன்பம் - சூலினாலுண்டாகுந் துன்பமும், ஈன்றபின் ஏலாமை - குழவியைப் பெற்றபின்பு அதனை ஏற்றுக்கொள்ளாமை, ஏற்றால் வளர்ப்பு அருமை - ஏற்றுக்கொண்டால் அதனை வளர்த்தல் அருமை, சால்பவை வல்லாமை - (வளர்த்தபிள்ளை) சால்பு குணங்களை மாட்டாமையும், ஆகிய இவ்வைந்தினையும், வாய்ப்ப அறிபவர்-வாய்ப்ப உணர்வோர், தொழித்து - ஆராய்ந்து, கொல்லாமை - ஓருயிரைக் கொல்லாமையும், உண்ணாமை - (அதன் தசையை) உண்ணாமையும், நன்று - நன்மையாம்; (எ-று.)

(ப-பொ-ரை.) சூற் கொள்ளாமையால் வருந்துன்பம், சூற் கொண்டால் வருவதொரு மெய் வருத்தம், பிள்ளை பெற்று வைத்தும் பிள்ளையைக் கொள்ளாமை, பிள்ளையைப் பெற்றுக்கொண்டால் வளர்க்குமருமை, வளர்ந்த பிள்ளை சால்பு குணங்கள் மாட்டாமை, இவ்வைந்தினையும் வாய்ப்ப அறிந்தவர் ஆராய்ந்து ஓருயிரைக் கொல்லாமையும் அவ்வூனை யுண்ணாமையும் நன்று.

(க-ரை.) பிறப்பினாலுண்டாகும் ஐவகைத் துன்பங்களையும் ஆராய்ந்துணர்வோர் உயிர் கொல்லாமையும் புலாலுண்ணாமையும் நன்று என்பதாம்.

சூலாமை - எதிர்மறைத் தொழிற்பெயர், சூலல் - உடன்பாட்டுத் தொழிற் பெயர். அஃது அல்விகுதி குன்றிச் சூல் என முதனிலைத் தொழிற் பெயராய் நின்றது. நன்றால் - ஆல் அசை. (எகு)

சிக்கர் சிதடர் சிதலைப்போல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கால்—தொக்க

வருநோய்கள் முன்னுளிற் றீர்த்தாரே யிந்நா
ளொருநோயு மின்றிவாழ் வார்.

(ப-ரை.) தூக்குங்கால் - ஆராயுமிடத்து, சிக்கர் - தலைநோ யுடையாரும், சிதடர் - பித்துடையாரும், சிதலைப்போல் வாய் உடையார் - வாய்ப் புற்றுடையாரும், தூக்கர் - சய நோயுடையாரும், துருநாமர் - மூலநோய் கொண்டாரும், தொக்க - கூடி வருந்து கின்ற, அருநோய்கள் - தீர்த்தற்கரிய நோய்களை, முன்நாளில் - முற்காலத்தில், தீர்த்தாரே - தீர்த்தவரே, இந்நாள் - இக்காலத்தில், ஒருநோயும் இன்றிவாழ்வார் - ஒரு பிணியுமில்லாமல் சுகமாய் வாழ்ந்திருப்பார்; (எ-று.)

(ப-பொ-ரை.) தலைநோயுடையாரையும், பித்துற்றாரை யும், வாய்ப்புற்றுடையாரையும், கயநோய் கொண்டாரையும், மூலநோய் கொண்டாரையும், அடைந்து வருந்துன்பங்களை முற்பிறப்பிற் றீர்த்தவர்க ளிப்பிறப்பின்கண் ஒரு நோயு மின்றி வாழ்வார்.

(க-ரை.) தலை நோயுடையார் முதலிய ஐவரையும் அவர் படுந்துன்பங்களினின்று முற்காலத்தில் ஒழித்தவரே இக்காலத்தில் ஒரு நோயுமில்லாமல் வாழ்ந்திருப்பர் என்பது.

சிதல் - கறையான்; இங்கு அஃது உறையும் புற்றைக் குறித்தது. தூக்கம்-சயநோய். துரு நாமம் - மூலநோய். முன்னுள், இந்நாள் - முற்பிறப்பு, இப்பிறப்பு. அருமை - முடியாமைமே னின்றது. ஒரு நோயும் - உம்மை முற்றுப்பொருள். (எகா)

பக்கம் படாமை யொருவர்க்குப் பாடேற்றல்
தக்கும் படாமை தவமல்லாத்—தக்கா
ரிழிபினர்க்கே யானும் பசித்தார்க ணீதல்
கழிசினங் காத்தல் கடன்.

(ப-ரை.) ஒருவர்க்கு பக்கம் படாமை - எல்லா வுயிர்க்கும் ஒத்தலும், பாடு ஏற்றல் - படுந்துன்பம் ஆற்றுதலும், தக்கம் படாமை - ஒரு பொருளினிடத்தும் பற்றுப்படாமையும், ஆகிய இம்மூன்றும், தவம் - தவத்தார்க்குரிய குணங்களாம், தவம் அல்லா - தவஞ் செய்தலில்லாத, தக்கார் - தகுதியாகிய இல்வாழ்வார்க்கு, இழி இனர்க்கேயானும் - இழி குலத்தார்க்கே யாயினும், பசித்தார் கண் - பசித்தவர்க்கு, ஈதல் - உணவு கொடுத்தலும், கழிசினம் காத்தல் - மிகு கோபத்தைத் தடுத்தலும், கடன் - கடமைகளாம்; (எ-று.)

(ப-போ-ரை.) எல்லா வுயிர்க்கும் ஒத்தலும், படுந் துன்பம் ஆற்றுதலும், ஒரு பொருளின் கண்ணும் பற்றுப் படாமையும், இம்மூன்றுந் தவஞ்செய்வார் குணமாவன. அவர்களல்லா இல்வாழ்வார்க்குக் குணமாவன: கீழ்க்குலத் தார்க்கே யாயினும் பசித்தவர்க்கு உண்டி கொடுத்தலும் மிக்க வெகுளிகாத்தலும்.

(க-ரை.) நடுவுநிலைமை முதலிய மூன்றும் துறவறத்தார்க்கும், பசித்தவர்க் குணவளித்தல் கோபம் காத்தல் ஆகிய இரண்டும் இல்லறத்தார்க்கு முரிய குணங்கள்.

பக்கம் படுதல்-ஒருபாற் கோடல்; நடுவுநிலை பிறழ்தல். தக்கம்-பற்று; பயனின்றி வீணே யிருப்பதுமாம். ஆயினும் என்பது ஆனும் எனத்தொக்கது. பசித்தார் கண் - உருபு மயக்கம். (எஎ)

புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டு மில்லாதார்—கண்கண்பட்
டாழ்ந்து நெகிழ்ந்தவர்க் கீந்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார் மகிழ்ந்து.

(ப-ரை.) புண்பட்டார்கண் - போரின்கண் [illegible] புண்பட்டவரிடத்தும், போற்றுவார் இல்லாதார்கண் - காக்குந் [illegible]ணில்லாதவரிடத்தும், போகு உயிரார்கண் - உயிர்போகுந் தன்

மையை யுடையவரிடத்தும், கண்கெட்டார்கண் - குருடரிடத்தும், கால் இரண்டும் இல்லாதார்கண் - இரண்டு கால்களு மில்லாதவரா கிய முடவரிடத்தும், கண்பட்டு - கண்ணோடி, ஆழ்ந்து நெகிழ்ந்து - மனமுருகி நெகிழ்ந்து, அவர்க்கு - (புண்பட்டார் முதலிய) அவ் வைவருக்கும், ஈந்தார் - அவர் வேண்டுவனவாகிய உணவு முதலிய வற்றைக் கொடுத்தவர், கடைபோக மகிழ்ந்து வாழ்ந்து கழிவார் - இடையூறு பட்டொழியாமல் கடைபோக மகிழ்ந்து வாழ்ந்து கழி வார்; (எ-று.)

(ப-பொ-ரை.) போரின்கண் புகுந்து புண்பட்டார், பாதுகாக்குங் கிளைகளில்லாதார், உயிர்போந் தன்மையை யடைந்தோர், குருடர், முடவர் என்று சொல்லப்பட்டா ருடைய கண்ணிலே தங்கள் கண்கள் பட்டிரங்கி மன நெகிழ்ந்து வேண்டுவன கொடுத்தார் இடையூறு பட்டொழி யாதே கடைபோக மகிழ்ந்து வாழ்ந்து போவார்.

(க-ரை.) புண்பட்டவர் முதலிய ஐவருக்கும் மனமிரங்கி அவர் வேண்டுவன கொடுத்துப் போற்றியவர் இடையூறின்றி மகிழ்ந்து வாழ்ந்து கழிவார் என்பது.

வேண்டுவன-உணவு முதலியன. கடைபோக வாழ்தல்-முடிவு போக வாழ்தல்; மனிதனுக் கேற்பட்ட வாழ்நாள் அளவும் வாழ்தல். கண் என்னும் ஏழனுருபு ஐந்திடங்களிலும் கூட்டப்பட்டது. கண்படல் - கண்பார்வை செலல். (எஅ)

பஞ்சப் பொழுதகத்தே பாத்துண்பான் காவாதான்
அஞ்சா துடைபடையுட் போந்தெறிவான்—எஞ்சாதே
உண்பது முனீவான் குழவி பலிகொடுப்பான்
எண்பதின் மேலும்வாழ் வான்.

(ப-ரை.) பஞ்சப்பொழுதகத்தே - சிறுவிலைக் காலத்தில், பாத்து - (தன்னிடமிருக்கும் உணவுப் பொருள்களை பலர்க்கும்)

அத்திரமனுவையுன்னியலையெறிபுனலினுடி
மெத்தியபிராணயாமம்விதியுளியியற்றிநூறறெட்
டுத்தமசிவாத்திரத்தைபுறககணிததிரதயதநதைப்
பததியினுரைததுகொெண்டுபோணியஞசலியராகி (௧0௪)

நின்றுழிவினரேதன்னுண்ணிநறினமலனைமுக்கா
லொன்றுறவலமாவந்திட்டு*ததாபநமஇனிதுசெய்த
லன்றியவினைகாலசியகருமததிரசந்தியாகும
வெனறியிற்கிளருந்திணடோள்விறலுடைவேந்தாவேந்தே (௧0௫)

மொழிதருமறையோராதிமூவாககுமுறையேதேசு
பொழியிளவேனிலவெயபடபடனனமுதிரவேனில்கூடிா
பழியறுகாலமாகுமபகாந்தமுன்றளேநாணமாா
கழிசிவத்துவிசன்மைந்தாக்காதிரையுததமந்தான் (௧0௬)

மறுவறுதிருவோணந்தானவைகாநசனுககுநனரு
மறையும்நதிரநாணமனறவாருசவுமணசனுக்குக
குறைவில்வாருணநாளாகுமகுணடகாகோளகாகரு
வறைதருசனனநாளுநிகழ்சிலவினைகருககூடும் (௧0௭)

அனனசெயவினைகள்யாவையெனறிடலனனசூட்டன்
மன்னியசவுளநீககுவருமுபநயநமவேறே
பன்னிடப்படடபடடபநதனநான்குமாகு
முன்னுறுபசகனன்றமபினனதுமுனியாாநல்லோா (௧0௮)

வேறு.

உத்தமஞ்சததமிதிரையோதசிதசமிசட்டியுறுதுதிகைதிரிதிகைபஞசமி யிவையோரேழு,மததிமமேகாதசிதுவாதசியோரிரணடும்வளாபககத்தாமதி தேயபககததுககிரணக, கொததுறுசநதிரபலநுயிருப்பின் முதறறிதியுங கொணடசதுர்த்தசிபுமாஙகொழுநதிரையோதசிமுன, வைத்ததிதியொரு மூன்றுமறவேனைத்திதியும் வகுததனாகவொருசாராா மதிக்குடைமன்ன வனே (௧0௯)

விடைமிதுனஙகன்னிகடகந்தனுசுமீனமேவுமஙகுராறபணததுக்ேகா ரேழாநாளு, மடைவுறுமைந்தாநாளுமெனுமிவைபுமாகுமறையுமுபநயநத் தோரைந்துறுப்புசசிறநத, தொடருமுபவீத ‡ முட்டிநீடம் உததரீயஞ் சூழுமேகலைதெண்டமிவையவைகளாகும, படாசிவததுவிசனுக்கேபகரு முட்டிநீடமபன்னுமுததரீயமேகலையும்பினனோக்காகா (௧௧0)

அவற்றுளுபவீதமுறையாறகொணாபஞ்சினைநூறறஙகுல நான்கிடை த்தொணனூற்றுறுசுறறியதனே, டிவற்றிழைவேறிரணடிணககிபபுனனீற நிற்கமுவியெழிறசததியோசாதத்திடசகரஙகீழாசக். கவறறுவினைதீாகிழக குமேறகுமுகமாககலந்திருவாதிரிததுவலககரஙகீழாலதனைத.தவற்றகன் முப்புரியாக்கியிலைமலாபைந்தருபபைதமமுளொன்றிற கிழககிருந்தோன் சாாநதுமுன்னர்வைகக (௧௧௧)

---

* உததாபனம் - நின்றுதோத்திரஞ்செய்தல்.

‡ உட்டிநீடம் - தலைக்குத் தரித்துக்கொளளும் பட்டை.

யாயினும், சிறுவிலைக்காலத்தில் அது செய்தல் மிகச் சிறந்து காட்டும் என்பது தோன்ற, 'பஞ்சப்பொழுதகத்தே பாத்துண்பான்,' என்றும் அச் சிறப்பு நோக்கியே அதனை முன்னெடுத்தும் கூறினர்.

வரைவில்லாப் பெண்வையார் மன்னைப்புற் றேறார்
புரையில்லார் நள்ளார்போர் வேந்தன் - வரைபோற்
கடுங்களிறு விட்டுழிச் செல்லார் வழங்கார்
கொடும்புலி கொட்கும் வழி.

(ப-ரை.) வரைவு இல்லா - மணஞ் செய்தல் இல்லாத, பெண் - பொதுப் பெண்டிரை, வையார் - (தமக்கு மனைவியாகத் தமது வீட்டில்) வைத்துக்கொள்ளமாட்டார்கள், மன் - நிலைபெற்ற, னை - மழுங்குதலையுடைய, புற்று - பாம்பின் புற்றின்மேல், ஏறார் - ஏறமாட்டார்கள், புரை இல்லார் - தமக்கு நிகரில்லாதவரோடு, நள்ளார் - நட்புக்கொள்ளார், போர்வேந்தன் - போர்த்தொழிலில் வல்ல அரசனது, வரைபோல் - (உருவத்தால்) மலைபோன்ற, கடும் - கடுமையான குணம் பொருந்திய, களிறு - யானையை, விட்டுழி - விட்ட இடத்தில், செல்லார் - போகமாட்டார்கள், கொடும்புலி - கொடுமையான செயலையுடைய புலியானது, கொட்கும் - சுழன்று திரிகின்ற, வழி - காட்டு வழியில், வழங்கார் - நடக்கமாட்டார்கள்; (எ-று.)

(ப-பொ-ரை.) பொது மகளைத் தமக்கு மனையாளாக மனையின்கண் வையார், பழையதாய்த் தலைமழுங்கியிருந்த புற்றின்மே லேறார், தம்மோடு நிகரில்லாதாரோடு நட்புக் கொள்ளார், போர்வேந்தனுடைய வரைபோலும் கடுங்களிறு விட்டுழிச் செல்லார், கொடும்புலி சுழலும் வழியின்கண் நடவார்.

(க-ரை.) அறிஞர்கள் வேசையரை வீட்டில் வைத்துக் கொள்ளுதல் முதலியன செய்யமாட்டார்கள்.

வரைவு - வரைதல்; தொழிற்பெயர். இது மணஞ் செய்தல் என்னும் பொருளது. வரைவிலாப் பெண்களுக்கு, அவர் ஒருவரையே

ஒககவுபமந்திரமந்திரமிரணடுகலைக்காமுறையைந்திருககுமனுமேக லைக்கததிரந்தான். றககநெடுந்தணடினுக்குமுப்புரிநூறனக்குசசாறறுமது வேயுததரீயததுக்காகுந். கொக்க ... பிலகாலலமபிமுக ... வுமுக... தஙகவலஞும்சயது, மககுவளாபிரமகூாசசத தினமுறைபுரிநதவிளஙகியவானைந்துநுகாந்தாசமநமபுரிக (௧௧௯)

பிரமாஙகமந்திரததாற * சம்பாதவோமமபேணுகுரவனபிரமவுபதே சஞ்செய்துபுரைதீரமனுநூறறெட்டெணணெலரிவலமாயப்போநதிறைஞ சலசெய்விததுசசிவாததிரததாகுதிநாஞெருவாதுபுரிந்தீசானுதியொன்பா ன்மனுவாலொனபதிற்றுசமிதையினேமமபுரிவிததறலா.லெரிகாயததிரியி ன்வியாகிருதியின்வட்டிப்பிததேழோமந்தனிததனிசெய்விததலபிரமாஙக ம். (௧௨௦)

தேவதேவனைவணஙகியாசிரியன்பூசைசெய்தவாக்குததனக்கியன்ற செழும்பொருள்களுறுததி மேவுகாணுசனமாதியாலியலபாததிரததைவிய ன்புருடமந்திரததாலவாஙகிவலக்கரத்திற், பாவுநீடணட மிடககரததேந்தி யன்னைபயந்தவளோடென்பிறந்தாடன்ஞெடுடனபிறநத, பூவைமாரிவரு னொருவரையடுதது பிசசைபுகரின் மொழிமொழிந்தேற்றனமூவருக்குமு ரித்தே (௧௨௧)

பவதிமொழிமுன்மொழிதல்பிராமணனுக்குரிததாம்பாாததிபனுக்கி டைமொழிதலவணிகனுககுப்பின்னுந், தவறறுமுததினமிஙவாறிரந்திரண டுபோதுந்தழலோம்பிசசமிதையினுநெய்யினுமாகுதிசெய், தவமறநாலாநா ளிறபலாசவோமஞசெயதகற்றியுபவீதமுதல்வேறணிதன்முறையா ரிவறு சததியோசாதத் தானூற்றெட்டோம மியற்றிமொழியாமைமுதலாம்விரத மொழிகக. (௧௨௨)

விளஙகழலைமுன்போலப்புனலிஞலவளைத்துவியோமவியாபியினூறு ஙகாணடரிடியோஙகளஙகமறவொருநூறுஙகாதலொடுபுரிதல்கரணட ா பக்கிரமணந்தான்பிரமசரியதனுள, வளஙகுலவுநயிட்டிகததைவேட்டவன றன்குருவைவணஙகிரந்ததுநிலைக்கசசதவோமமபுரிந்திட், டுளஙகுளிரப் பூரணுகுதியுமுறையியற்றியொரிியழனிததலுமவளர்ததலுரிததவாக்குமன் ஞு. (௧௨௩)

வேறு

மேதகுநயிட்டிகவிரதமேற்குமுன்,ஞேதுபவீதயாதிகளையொணணதி, போ தவிழ்தடாகமாதிகளிற்போக்குபு, கோதறவேறவையணிதல்கொள்கையே

அருள்வளர்சிவனையுமஙகிதன்னையுந, குருவையும்பூசைமுன்குறித துசசெய்தலான், மருவுமப்பூசனைமூன்றும்வைகலு, மொருவுவதிலையுபநய நததாாக்கெலாம (௧௨௫)

பயிலுபநயநமுன்பணணவர்ககிய, வியன்மனுததழலினையிலஙகுவேலிஞய் மயாறுஞ்சயாதியோமததையாக்கியந, கயர்வறவொடுக்குதலறமதாகுமே.

வேறு.

சததியோசாதமிருக்குநல்வாமந்தயஙகியவெசாமயமகோர மெததியசாமமறைவியன்புருடமவிழுத்தகுமதாவணமயமாஞு சுததவிசானஞுசகலதேவர்களின்சொரூப்மாமஙகமநதிரஙகள் வைத்தவேதாஙகமாறுமாந்தெளிகமனனவவகுததவிம்மனுவை. (௧௨௭)

---

* சம்பாதவோமம் - மிகுதியாக நெயயைப் பெய்யுமோமம்.

தகவில ரென்ப தவரவர், எச்சத்தாற் காணப் படும்," என்ற திருக் குறளாலும் விளங்கும். "மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி இனத் தானு, மின்னு னெனப்படுஞ் சொல்," என்ற குறட் கருத்து, "தக்க இனத்தி னுகும் பழியும் புகழும், மனத்தி னுகு மதி," என்ற அடிகளில் அமைந்திருத்தல் காண்க. (அக)

கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சா
னிழிந்தவை யின்புறா னில்லார்—மொழிந்தவை
மென்மொழியா லுண்ணெகிழ்ந் தீவானேல் விண்ணோரா
லின்மொழியா லேத்தப் படும்.

(ப-ரை.) தான் - ஒருவன், கழிந்தவை - (தன்னைவிட்டு) நீங்கிய பொருள்கட்கு, இரங்கான் - வருந்தாதவனும், கைவாரா - தனக்குக் கையராதவற்றை, நச்சான் - விரும்பாதவனும், இழிந் தவை - தாழ்ந்த பொருள்களின் மேல், இன்பு உறான் -மனக்களிப் படையாதவனும், இல்லார் - பொருளில்லாத வறிஞர், மொழிந் தவை - (விரும்பித் தமக்கு வேண்டுமென்று) சொன்னவற்றை, மெல்மொழியால் - மெல்லிய இன் சொல்லோடு, உள் நெகிழ்ந்து - மன முருகி, ஈவான் எல் - கொடுப்பவனாயின், (அவன்), விண்ணோ ரால் - தேவர்களால், இன் மொழியால் - இன் சொற்களால், ஏத்தப் படும் - துதிக்கப் படுவான்; (எ-று.)

(ப-பொ-ரை.) இறந்த பொருட்குத் தானிரங்கான், தனக்குக் கைவாராதனவற்றை நச்சி வருந்தான், நல்லாரா னிகழப்பட்டவற்றை யின்புறான், வறியாரிரந்து வேண்டிய வற்றை மென்மொழி சொல்லி யுண்ணெகிழ்ந்தீவானாயிற் றேவர்களானினிய மொழிகளாலே புகழப்படும்.

(கு-ரை.) கழிந்தவற்றிற்கு இரங்கான் முதலியன உடை யான் தேவர்களாற் புகழ்தற்குரியனுவான்.

கழிந்தவை தானிரங்கான் - நான்காம் வேற்றுமைத்தொகை. வாரா நச்சான் - இரண்டாம் வேற்றுமைத் தொகை. மொழியால்

என்பதில் ஒடுருபு ஆலுருபாக மயங்கிவந்தது. கழிந்தவை, இழிந்தவை, கைவாரா—வினையாலணையும் பெயர்கள். (அஉ)

காடுபோற் கட்கினிய வில்லம் பிறர்பொரு
ளோடுபோற் றாரம் பிறந்ததா—யூடுபோய்க்
கோத்தின்னா சொல்லானாய்க் கொல்லானேற் பல்லவ
ரோத்தினா லென்ன குறை.

(ப-ரை.) (ஒருவன்) கட்கு இனிய-கண்ணுக்கினிய, இல்லம் - பிறருடைய இல்லத்தை, காடுபோல் - காடுபோலக் கொண்டு விரும்பாமல், பிறர் பொருள் - பிறர் பொருளை, ஓடுபோல் - ஓடு போலக் கொண்டு விரும்பாது, தாரம் - பிறர் மனையாளை, பிறந்த தாய் - தான் பிறத்தற்கிடமாயிருந்த தாயாகக்கொண்டு விரும்பாது, ஊடு போய் - பிறரிடத்தே சென்று, கோத்து - தொடுத்து, இன்னா சொல்லானாய் - பழிமொழிகளைச் சொல்லாதவனாய், கொல்லானேல் - ஒருயிரையுங் கொல்லாதவனாயின், (அவனுக்கு) பல்லவர் - பெரியார் பலரும் கூறிய, ஓத்தினால் - நூல்களால் தெரியவேண்டிய, என்ன குறை - என்ன குறையுண்டு; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறருடைய கண்ணுக்கினிய வில்லத்தைக் காடுபோலக் கொண்டு விரும்பாது, பிறருடைய பொருளை ஓடுபோலக் கொண்டு விரும்பாது, பிறர் மனையாளைத் தான் பிறந்த தாயாகக்கொண்டு விரும்பாது, பிறரூடு போய்க் கோத்தின்னாதனவற்றைச் சொல்லாது, உயிரையுங் கொல்லானாயினல்லார் பலருஞ் சொல்லிய நூல்களாற் காரிய மென்னை யவற்கு?

(க-ரை.) ஒருவன் பிறரது அழகிய இல்லத்தைக் காடுபோலவும், பிறர் பொருளை ஓடுபோலவும், பிறர் மனையாளைத் தன் தாயாகவும் கருதி விரும்பாமல், பிறரைப் பழித்துக் கூறாமல், உயிரையுங் கொல்லாதிருப்பானாயின், அவனுக்குப் பெரியோர் சொல்லிய நூல்களால் அறியவேண்டிய குறை என்ன உண்டு என்றவாறு.

காடுபோல் என்றதனுனே கருதாமையும் விரும்பாமையும் பெறப்பட்டன. பிறர் என்பது இல்லத்திற்கும் தாரத்திற்கும் கூட்டி யுரைக்கப்பட்டது. என்ன குறையென்றது நூல்களால் அவனைக் குறைகூறக் கிடந்ததொன்றுமில்லை யெனலுமாம். (அ௩)

தோற்கன்று காட்டிக் கறவார் கறந்தபால்
பாற்பட்டா ருண்ணுர் பழிபாவம் - பாற்பட்டா
ரேற்றவா தின்புற்று வாழ்வன வீடழியக்
கூற்றுவப்பச் செய்யார் கொணர்ந்து.

(ப-ரை.) பாற்பட்டார் - நன்னெறியின் பாற்பட்டவர், தோல் கன்று காட்டி - தோலாற் செய்த கன்றினைக் காட்டி, கறவார் - பசுவைக் கறவார், பாற்பட்டார் - நன்னெறிப்பட்டவர், கறந்தபால் - அவ்வாறு கறந்த பாலை, உண்ணுர் - பருகார், பழிபாவம் - பழியையும் பாவத்தையும், ஏற்று - தம்மேலேற்றுக்கொண்டு, அவாவாது - விரும்பாமல், இன்புற்று - தம் கிளைகளோடு, கூடிச்சுகமுற்று, வாழ்வன - வாழ்வனவாகிய உயிர்களை, ஈடு அழிய - (அவற்றின்) பெருமை குன்ற, கொணர்ந்து - கொண்டு வந்து, கூற்று உவப்ப செய்யார் - கூற்றுவன் விரும்பக் கொலை செய்யார்; (எ-று.)

(ப-பொ-ரை.) தோற்கன்று காட்டிப் பசுவைக் கறவார், அப்பெற்றியாற் கறந்த பாலை நெறிப்பட்டா ருண்ணுர், பழியையும் பாவத்தையும் தம்மே லேற்றுக்கொண்டு விரும்பாத தன் கிளையோடின்புற்று வாழுமுயிர்களைக் கூற்று விரும்பக்கொணர்ந்து கொலை செய்யார்.

(க-ரை.) நன்னெறிப் பட்டவர் தோற்கன்று காட்டிப் பசுவின்பாலைக் கறத்தல் முதலிய தீச்செயல்களைச் செய்யார் என்பதாம்.

தோற்கன்று காட்டலாவது இறந்துபோன கன்றின் தோலை யுரித்து அதனுள்ளே வைக்கோலைப் பொதிந்து அதனை உயிர்க்

கன்றுபோல் அதன் தாய்ப்பசுவுக்குக் காட்டுதல். பாலை அருந்துதலே கறத்தலுக்குங் காரணமாதலின், "கறந்த பால் உண்ணார்," என்று அப்பாலை அருந்துதலையும் விலக்கினார், ஆசிரியர். பால் - வெண்மை. இஃது உவமையாகு பெயராய்த் தூயகுணத்தை யுணர்த்தி நின்றது. அவாவாது என்பது அயாது எனத் தொகுத்தலாயிற்று. செய்யார் - கொலை செய்யார். (அஅ)

நகையொடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையொடு பாட்டுரையென் றைந்துந்-தொகையொடு
மூத்தோ ரிருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தா ரறிந்தவ ராய்ந்து.

(ப-ரை.) நகையொடு - சிரிப்புடன், மந்திரம் - செவிச் சொல்லும், நட்டார்க்கு வாரம் - நண்பருக்காக ஒருபாலாகப் பேசுதலும், பகைஒடு - (ஆகாதவரிடத்தே) பகையான பேச்சுக்களைப் பேசுதலும், பாட்டுஉரை - செய்யுளுக்குப் பொருள் சொல்லுதலும், என்றைந்தும் - என்ற இவ்வைந்து செயல்களும், தொகையொடு - கூட்டத்தோடு, மூத்தோர் - பெரியோர், இருந்துழி - இருக்குமிடத்தில், வேண்டார் - செய்ய விரும்பார் (அறிவுடையார்), (என்று), ஆய்ந்து - (உலக இயல்பினை) ஆராய்ந்து, அறிந்தவர் - உணர்ந்தவர்கள், முதுநூலுள் - பழமையான நூல்களில், யாத்தார் - தொடுத்து உறுதியாக உரைத்துவைத்தார்; (எ-று.)

(ப-பொ-ரை.) சிரித்தலும், மந்திரமாகிய செவிச்சொல்லும், தம்முற்றார்க்காக வாரம் சொல்லுதலும், பகையாக்கலும், பாட்டுக்குப் பொருட்சொல்லுதலும் இவ்வைந்துங் கூட்டத்தோடறிவுடையா ரிருந்துழி வேண்டாராய்ப் பழைய நூல்களிலே யாத்துவைத்தார் அறிவுடையார் ஆய்ந்து.

(க-ரை.) பெரியோர் கூடியிருக்கு மிடத்தில் சிரித்தல் இரக சியப் பேச்சுப் பேசுதல், நட்பினர்க்குப் பாரபக்கமாக நலம் பேசு தல், ஆகாதவர்க்குப் பகைமை பேசுதல், பாட்டுக்கு உரை சொல்லு தல் ஆகிய ஐந்து செயல்களையும் அறிவுடையோர் செய்யமாட் டார்கள்.

மந்திரம் - இரகசியச் சொல் அல்லது சூழ்ச்சியுரை. நகை - தொழிற் பெயர்; நகு - பகுதி. உரை - சொல். அது பொருளின் மேனின்றது. என்ற ஐந்தும் என்பது என்றைந்தும் எனத் தொகுத் தலாயிற்று. யாத்தல் - தொடுத்தல். இது சொல்லுதல் மேனின் றது. வாரம் - அன்பு. "செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித் தொழுகல், ஆன்ற பெரியா ரகத்து," என்னுந் திருக்குறளை யிதற் குதாரணமாகக் கொள்ளலாம். (அரு)

சத்தமெய்ஞ் ஞானந் தருக்கஞ் சமயமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தவிவ் வைந்து மறிவான் றலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து.

(ப-ரை.) சத்தம் - வழக்காகிய இலக்கண நூலும், மெய்ஞ் ஞானம் - அறிவுநூலும், தருக்கம் - அளவை நூலும், சமயம் - சமய நூலும், வித்தகர்-அறிவின் மிக்கோர், கண்ட - செய்த, வீடு - வீட்டு நூலும், உள்ளிட்டு - உட்பட, அத்தக இவ்வைந்தும் - அத்தகைமை யாகிய இவ்வைந்தனையும், அந்தம் அறிவான் - அழகா யறிபவன், சிந்திப்பின் - ஆலோசிக்கு மிடத்து, சிறந்து - சிறப்படைந்து, தலை ஆய சிட்டன் - தலைமையாய சிட்டனாவான்; (எ-று.)

(ப-பொ-ரை.) வழக்கு நூலும், சொன்முடிபு நூலும், தருக்க நூலும், சமய நூலும், அறிவின் மிக்கார் கண்ட வீட்டு நெறியும் இவ்வைந்தும் அழகாக அறிவான் தலை யாய சிட்டனாவான் சிறந்து.

(க-ரை.) இலக்கண நூல் முதலானவற்றை நன்கறிந்தவனே மக்களுட் சிறந்தவனாவான்.

சத்தம் - ஒலி. அஃது ஒலி வடிவமாகிய எழுத்தையும் சொல்லையும் பற்றிய இலக்கண நூலை யுணர்த்தி நின்றது. தருக்கம் - ஒரு பொருளின் உறுதியைப்பற்றிச் சொற்போராடல். அஃது அதனையுடைய தருக்க நூலை யுணர்த்திற்று. இந்நூலையுமுணர்ந்தவன் மிக ஒழுங்குடையவனாயும், உலகத்திற்குப் பயன் படுபவனாயுமிருப்பான், ஆதலின் அவனை, 'தலையாய சிட்டன்,' என்றார் ஆசிரியர். ஆங்கு - அசை. அந்தம் என்பது மவ்வீறு கெட்டு நின்றது. சிட்டன் - மேலானவன். (அக)

கண்ணுங்காற் கண்ணுங் கணிதமே யாழினோ
டெண்ணுங்காற் சாந்தே யிலைநறுக்கிட்—டெண்ணுத
லிட்டவிவ் வைந்து மறிவா னிடையாய
சிட்டனென் றெண்ணப் படும்.

(ப-ரை.) கண்ணுங்கால் - நினைக்குமிடத்து, கண்ணும் - நினைத்தற்குரிய, கணிதம் - கணிதமும், யாழினோடு - யாழினுடன், எண்ணுங்கால் - எண்ணுமிடத்து, சாந்து - சந்தனமரைத்தல், இலை நறுக்கிட்டு - இலை கிள்ளி, எண்ணுதல் - எண்ணல், இட்ட - ஏற்படுத்தப் பட்ட, இவ்வைந்தும் - இந்த ஐந்து தொழில்களையும், அறிவான் - அறிந்து செய்ய வல்லவன், இடை ஆய சிட்டன் என்று - இடையாகிய சிட்டன் என்று, எண்ணப்படும் - எண்ணப்படுவான்; (எ-று.)

(ப-பொ-ரை.) கருதுங்காற் கருதப்படு மெண்ணும், யாழ்வல்லனாதலும் சந்தனமரைத்தலும் எண்ணலும் தொழில்பட இலை நறுக்கலும் என இவ்வைந்து காரியங் அறிந்து வல்லனவான் இடையாய சிட்டனென் றெண்ணப்படும்.

(க-ரை.) கணித நூல் முதலிய ஐந்தனையும் கற்று வல்லவன் இடையாய சிட்டனென்று சொல்லப்படுவா னென்பதாம்.

நறுக்கு - முதனிலைத் தொழிற் பெயர். அறிவான் - வினை யாலணையும் பெயர். கண்ணல் - நினைத்தல். கண்ணுங்கால், எண் ணுங்கால் - வினையெச்சங்கள். ஏ - எண்ணுப் பொருள். கணிதம், யாழ், சாந்து என்பன அவற்றைச் செய்தலாகிய தொழில்கண்மே னின்றன. (அஎ)

நாணில னய்நன்கு நள்ளாதா னய்ப்பெரியார்ப்
பேணில னய்பிறர் சேவகனா—யேணில்
பொருந்திய பூண்முலையார் சேரிகைத் தில்லான்
பருத்தி பகர்வுழி நாய்.

(ப-ரை.) நாண் இலன் - நாணமில்லாதவன், நாய் - நாய்க்கு நிகராவன், நன்கு - நன்மையாக, நள்ளாதான் - (பிறரோடு) நட்புக் கொள்ளாதவன், நாய் - நாயோடொப்பாவன், பெரியார் - (தாய் தந்தையர் முதலிய) பெரியாரை, பேணிலன் - பாது காவாதவன், நாய் - நாயை நிகர்ப்பான், பிறர் சேவகன் - பிறருடைய பணியா ளா யிருந்து வாழ்பவன், நாய் - நாயைப் போல்வன், ஏண் இல் - உயர் வில்லாத, பூண் பொருந்திய - நகைகளை யணிந்த, முலையார் - தனங்களையுடைய பரத்தையரது, சேரி - தெருவில், (அவர்களது ஆசையால் திரியும்) கைத்து இல்லான் - கைப்பொருள் இல்லாத வன், பருத்தி பகர்வுழி - பருத்தி விலை கூறுமிடத்து, (போய் நிற் கின்ற) நாய் - நாய்க்கு நிகராவான்; (எ-று.)

(ப-பொ-ரை.) நாணமில்லாதானு நாயோடொக்கும், பிறரொடு நண்பு கொள்ளாதானு நாயோடொக்கும், பெரி யாரைப் பேணாதானு நாயோடொக்கும். பிறர்க்குச சேவக னய்த் திரிவானு நாயோடொக்கும்; மனத்தின்க ணிலையில் லாத பூணையுடைய முலையார் சேரியின்கட் கைப்பொரு

ளின்றிக் காதலாற் சென்று திரிவானும் பருத்தி விற்குமிடத்துச் சென்று நிற்கு நாயோடொக்கும்.

(க-ரை.) நாணமில்லாதவன் முதலியோர் நாய்க்கு ஒப்பாவார்கள்.

பருத்தி விற்குமிடத்து அங்குக் காத்துக் கிடக்கும் நாய்க்கு ஏதும் உணவுப் பண்டம் கிடையாமை போலப் பொருளுக்குத் தம் உடம்பை விற்கும் பொருட் பெண்டிர் சேரியிற் பொருளிலனாய்த் திரிவானுக்கு ஏதும் அவர் புணர்ப்பு நேராதாகலின் அவனைப் பருத்தி பகர்வுழி நாய் என்றார். பகர்வுழி - பகர் உழி; வகரம் மெய்யீற்று உடம்படு மெய்யாகப் பொருந்தியது. சேரி - ஒரு வகுப்பார் சேர்ந்திருக்கும் இடம். இச்செய்யுள் கடையாய சிட்டரியல்பு கூறுவது. ஏண் - மன நிலையெனினுமாம். (அஅ)

நாணெளிது பெண்மை நகையெளிது நட்டானே
லேணெளிது சேவக னேற்பெரியார்—பேணெளிது
கொம்பு மறைக்கு மிடையா யளியன்மீ
தம்பு பறத்த லரிது.

(ப-ரை.) கொம்பு - வஞ்சிக் கொம்பை, மறைக்கும் - மறைக்கின்ற, இடையாய் - இடையை யுடையவளே! பெண்மை - (ஒருத்தி) பெண்மைக் குண முடையளாயின், நாண் எளிது - (அவளுக்கு) நாணம் எளிதாகும், நட்டானேல் - ஒருவனோடொருவன் நட்புக் கொள்வானாயின், நகை எளிது - (அவனுடைய) மகிழ்ந்து நகுதல் எளிதாகும், சேவகனேல் - ஒருவன் சேவகனாயின், ஏண் எளிது - (அவனுக்கு) வன்மை எளிதாகும், பெரியார் - குணத்தாற் பெரியராயின், பேண் எளிது - (அவர்க்குப்) பிறரைப் பேணுதல் எளிதாகும், அளியன்மீது - (யாவரிடத்தும்) அருளுடையான்மேல், அம்பு பறத்தல் - பிறர் எய்யும் அம்பு விரைந்து செல்லுதல், அரிது - அரிதாகும்; (எ-று.)

(ப-போ-ரை.) ஒருத்தி பெண்குணத்தையுடையளாயின் அவளுக்கு நாணெளிது, ஒருவனோடொருவன் நட்டானாயின் அவற்கு மகிழ்ந்து நகுதல் எளிது, ஒருவன் சேவகனாயின் அவனுக்கு வலிசெய்தல் எளிது, குணத்தாற் பெரியராயின் அவர்க்குப் பிறரைப்பேணுதல் எளிது, வஞ்சிக்கொம்பை மறைக்கும் இடையினையுடையாய்! பலர்க்குஞ் சோறிடுவார்மேற் பிறர் அம்பு பறந்து சேறல் அரிது.

(க-ரை.) பெண்டிற்கு நாணும், நட்டார்க்குச் சிரிப்பும் சேவகர்க்கு வலிமையும், பெரியார்க்குப் பிறரைப்பேணுதலும் எளிது, ஆனால் அன்புடையார்க்குச் சினம் தீது செய்தல் அருமையாகும்.

பெண்மைக்குணம் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நான்கும் எல்லோரிடத்தும் அன்புள்ளவன்மீது சகலரும் நட்புடையவர்களாகவே யிருப்பார்களாதலின் அவன்மேல் எவரும் பகைகொண்டு அம்பைச் செலுத்தமாட்டார்கள். வஞ்சி - ஒருவகைக் கொடி. வஞ்சிக் கொம்பு, மென்மைபற்றி இடைக்கு உவமையாகக் கூறப்படும். காணா மறையும் என்பது தோன்ற கொம்பு மறைக்கும் என்றார். நாண், நகை, பேண் என்பன முதனிலைத் தொழிற்பெயர்கள். எண் - வலி. பறத்தல் - விரைந்து செல்லுதல் என்னும் பொருட்டு. அளி - யாவர்மீதும் ஒரு தன்மைத்தாய அருளுடைமை. (அக)

இன்சொலா னாகுங் கிளைமை யியல்பில்லா
வன்சொலி னாகும் பகைமைமன்—மென்சொல்லி
னோயில்லா வாருளா மவ்வரு ளன்மனத்தான்
வீவில்லா வீடாய் விடும்.

(ப-ரை.) இன்சொலான்-(ஒருவன் உரைக்கும்) இனிய சொற்களால், கிளைமை-உறவு, ஆகும்-(அவனுக்கு) உண்டாகும், இயல்பு இல்லா-நற்குணம் இல்லாத, வன் சொல்லின்-வலிய சொல்லினால்,

பகைமை பகைமையானது, ஆகும்-உண்டாகும், மென் சொல்லின்-மெல்லிய சொல்லினால், மன் - பெருமையும், ஓய்வு இல்லா-ஓய்தல் இல்லாத (இடைவிடாத), ஆர்-நிறைந்த, அருள் - இரக்கமும், ஆம்-உண்டாகும், அ அருள்-அவ்விரக்கம் பொருந்திய, நன் மனத்தான்-நல்ல மனத்தினாலே, வீவு இல்லா - கேடில்லாத, வீடு ஆய்விடும்-வீடு பேறு உண்டாய் விடும்; (எ-று.)

(ப-போ-ரை.) ஒருவன் சொல்லும் உறுதியாகிய சொல்லினாற் சுற்ற முளதாகும், குணமில்லாத கடுஞ்சொற்களாற் பகைகளுளவாம், பிறர்க்குச் சொல்லு மெல்லிய சொல்லினாற் றளர்வில்லாத அருள் உளதாம், அவ்வருளாவ தொருவன் மன நன்மையால் கேடில்லாத வீடாய் விடும்.

(க-ரை.) இன்சொல்லாற் கிளைமையும், வன் சொல்லாற் பகைமையும், மென்சொல்லாற் பெருமையும் இரக்கமும், அவ்விரக்க மனத்தால் வீடும் ஒருவனுக்கு உண்டாகும்.

மெல்லிய சொற்களையே ஒருவன் பேசிக் கொண்டிருப்பானா யின் அச்சொற்களால் அவனுக்கு எவரிடத்தும் இரக்கமனமுண்டாகும். அதனால் அவனைப் பலரும் உயர்ந்தவனென்று கொண்டாடுவார்கள். உயிர்க் குறுகண் செய்யாமையாகிய அருளினையுடையவன் முத்தியாகிய வீடும் அடைவன். வீவு, வீடு-தொழிற் பெயர்கள். கிளைமை-பண்புப் பெயர். ஆய்விடும்-விடு-துணிவுப் பொருளுணர்த்தும் விகுதி. அருள்பெறல் அரும் பேறாதலால் ஆரருள் என்றார்.

தக்க திளையான் றவஞ்செல்வ னூன்மறுத்த
றக்கது கற்புடை யாள்வனப்புத்—தக்க
தழற்றண்ணென் றேளா ளறிவில னாயி
னிழற்கண் முயிறாய் விடும்.

(ப-ரை.) இளையான்-இளையவன், தவம் - (விரதம்) செய்தல், தக்கது-தகுதியுடைத்து, செல்வன்-செல்வமுடையோன், ஊண் மறுத்தல்-உணவு வெறுத்து விரதங்காத்தல், தக்கது - தகுந்து

யுடைத்து, கற்பு உடையாள்-கற்புடையவளது, வனப்பு-அழகானது, தக்கது-தகுதியுடைத்து, தண் என் - குளிர்ந்திருக்கும், தோள் ஆள்-தோள்களையுடையவளாகிய ஒருவனுடைய மனைவியானவள், அறிவு இலள் ஆயின் - அறிவற்றவளாயின், அழல் - நெருப்புப் போன்றும், நிழல் கண் - நிழலினிடத்து, முயிறு ஆய்விடும் - முயிற்றைப்போன்றும் அவனைத் துன்புறுத்துவள்; (எ-று.)

(ப-பொ-ரை.) இளையான் துறந்து தவஞ் செய்தல் தக்கது, செல்வத்தையுடையான் இல்லறத்தின்கணின்று இடையீட்டை யூண் மறுத்து நோன்பு புரிதல் தக்கது, கற்புடையாள் வனப்பு தக்கது, ஒருவன் மனையாள் அறிவிலளாயெழுகின் நிழலின்கண் முயிறோடழலை யொக்கும்.

(க-ரை.) இளையான் தவமும், செல்வன் நோன்பும், அழகுடையாள் கற்பும் தக்கவை. அன்பும் இன்பும் உணர்தற்குரிய இல்லாள் அறிவிலளாயின் அழலையும் மரநிழற்கண்ணுள்ள செவ்வெறும்பையும் ஒப்பாவள்.

செல்வன் எத்தகையஉயர்ந்த உணவுகளையும் நுகரக்கூடியவன். அவன் அவற்றை நீக்கி விரதங் கொள்ளுதல் உயர்ந்தது. முயிறு-இலுப்பை மா முதலிய மரங்களிலிருக்கும் ஒருவகைச் செவ்வெறும்பு. 'கற்புடையாள் வனப்பு' என்பதை 'வனப்புடையாள் கற்பு' என்று மாற்றுவது மொழி மாற்றுப் பொருள் கோள். அழல் அணுகவு மொட்டாது அகலவும் ஒட்டாமைபோல் அறிவில்லா இல்லக்கிழத்தியை அவள் கணவன் விடடு நீங்கவுமாட்டாமல் அன்றி அண்டி மகிழவுமாட்டாமல் இடர்ப்படுவானாகலின், அழல் என்றார். முன் மூன்றனோடு 'தண்னெறித்தோளாள் அறிவிலளாயின் அழல்' என்ப தொன்றும், 'நிழற்கண் முயிறாய் விடும்' என்ப தொன்றும் கூட்டி நான்காக்கிக் கொள்க. (௧௧)

பொய்யாற் சுவர்க்கம்வா யாவிரா யம்பொருள்
மெய்யாற் படைத்தையால் வாழ்விலிது—மெய்யன்றுன்

மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய் தீதன்றா
லெத்தவ மானும் படல்.

(ப-ரை.) மைதக - மைதீட்டுதலால் தகுதியுற்று, நீண்ட - காதளவோடிய, கண்ணாய் - கண்களையுடைய பெண்ணே! பொய்யால் - பொய்ந்நெறி யொழுக்கத்தால், சுவர்க்கம் - மேலுலக முளதாம், வாயால் - மெய்ந்நெறி யொழுக்கத்தால், நிரயம் - நிரய முளதாம், பொருளால் - நிலையற்ற செல்வப்பொருளால், இனிது வாழ்வு - இனிதாக வாழ்தலும், மை ஆர் - குற்றம் பொருந்திய, மடந்தையால்-வேசிப் பெண்ணின் சேர்க்கையால், இனிது வாழ்வு- இனிதாக வாழ்தலும், மெய் அன்று-உண்மையல்ல, எத்தவம் ஆனும் - எந்தத்தவமாயினும், படல் - ஒருவரிடத்தே யுண்டாதல், தீது அன்று - தீமையானதன்று; (எ-று.)

(ப-போ-ரை.) பொய்ந்நெறி யொழுகினால் அவர்க்குச் சுவர்க்கமுளதாம், மெய்ந்நெறியி லொழுகினால் அவர்க்குநிரய முளதாம், பொருள் தேடுதலினிதாம், குற்ற மிக்க மடந்தையரோடு கூடி இல்வாழும் இல்வாழ்க்கையினிதா மென்றல் மெய்ம்மையுமன்றால், மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய்! யாதேனு மொரு தவம்படுதல் தீதன்று நன்மையேயாம்.

(க-ரை.) பொய்யாற் சுவர்க்கம் பெறுதலும், மெய்யால் நரக மடைதலும், நிலையற்ற செல்வப் பொருளால் இனிது வாழ்தலும், குற்றம் பொருந்திய பெண் சேர்க்கையால் இனிது வாழ்தலும் மெய் யன்று, ஒருவரிடத்தே எந்தத் தவமேனும் உண்டாதல் தீதன்று என்பதாம்.

இச்செய்யுள் கடவுளில்லை யென்றலும் யாத்திகள் மெய் யென்று சொல்பவற்றை பொய் யென்றும், பொய்யென்று சொல்ப வற்றை மெய்யென்றும் விளக்கிச் செல்லுகிறது. [illegible] மைவிகுதி குறைந்து வாய் என நின்றது. மையார் என்[illegible] பால் மடந்தை பொருளாகக் கொள்ளப்பட்டது. மெய்யன்றால் தீதன்றால்-ஆல்-அசை நிலைகள். ஆயினும் என்பது ஆனும் என

நின்றது. மடந்தையால் என்பதிலுள்ள ஆல் உருபும், வாழ்வினிது என்பதும் பொருள் என்பதனோடும் கூட்டிக்கொள்ளப்பட்டன. கூஉ

புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தே
னல்லறத்தா ரோடு நடக்கலா—நல்லறத்தார்க்
கட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே யிம்மையி
லட்டிட்டுண் டாற்றவாழ் வார்.

(ப-ரை.) மனைவாழ்க்கை - மனைவியோடு கூடிவாழும் இல்வாழ்க்கை, புல் அறத்தின் நன்று - தழுவும் இல்லறம் துறவறமாகிய இரண்டில் நல்லதாம், போற்றுடைத்தேல் நன்கு பாராட்டப்படுமானல், நல்லறத்தாரோடும் நடக்கலாம்-நல்ல துறவறத்தாரோடும் அது வைத்தெண்ணப்படலாம், நல் அறத்தார்க்கு - நல்ல துறவறத்தார்க்கு, அட்டு - சமைத்து, இட்டு - பகிர்ந்திட்டு, உண்டு - (பிறகு) தாமும் உண்டு, ஆற்றவாழ்ந்தார்களே - மிகவும் இனிதாக முற்பிறப்பில் வாழ்ந்தவர்களே, இம்மையில் - இப்பிறப்பில், அட்டு இட்டு உண்டு - சமைத்திட்டுண்டு, ஆற்றவாழ்வார் - மிகுதியாக வாழ்ந்திருப்பவர் ; (எ-று.)

(ப-போ-ரை) புல்லிய துறவறத்தினன்று மனைவாழ்க்கை, மனையறத்திற்குச் சொன்னபடியே யொழுகிற் றுறவறத்தாரோடு நடக்கலாம், ஆதலால் நல்ல துறவறத்தார்க்குத் தாம் ஆக்கியிட்டு, தாமும் இடப்படாதுண்டவர்கள் இப்பிறப்பின்கண் மிகவிட்டுண்டில்வாழ்க்கை வாழ்வார்.

(க-ரை.) மக்கள் இல்லறவாழ்வில் நின்று யாவர்க்கும் பயன்பட்டுமாறு வாழ்தல் நன்றாம்.

புல்அறம் - புல்லும்அறம். இல்வாழ்க்கையைச் செவ்வையாக ஆற்றின் அதுவே துறவற வாழ்க்கைக்கு ஒப்பாகும் என்பார், போற்றுடைத்தேல் நல்லறத்தாரோடு நடக்கலாம் என்றார். "அறத்தாற்

றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றின், போஒய்ப் பெறுவ தெவன்," என்னும் திருக்குறளைக் காண்க. முற்பிறப்பில் நல்வில் வாழ்வு பெற்றாரே இப்பிறப்பில் அது பெறும் பேறுடையாரென் பது பின்னிரண்டடிகளின் கருத்து. முத்திக்கு வித்தாதலால் குற்றமற்ற துறவறத்தை 'நல்லறம்', என்றார். (கூ.)

ஈவது நன்றுதீ தீயாமை நல்லவர்
மேவது நன்றுமே வாதாரோ—டோவாது
கேட்டுத் தலைநிற்க கேடி லுயர்கதிக்கே
யோட்டுத் தவநிற்கு மூர்ந்து.

(ப-ரை.) ஈவது - (பிறர்க்கு வேண்டிய பொருளைக்) கொடுப் பது, நன்று - நன்மையாம், ஈயாமை – கொடாமை, தீது - தீமை யாம், நல்லவர் - நல்லோர், மேவாதாரோடு - பொருந்ாதவரோடு, மேவது - பொருந்தியிருப்பது, நன்று - நன்மையாம், ஓவாது - இடையறாமல், கேட்டு - (நன்னெறிக்குக் காரணமாகிய நூற் பொருளைக்) கேட்டு, தலை - (அந்நெறியின்) கண்ணே, நிற்க - நிற்று லைச்செய்க, (நின்றால் அந்நிலை) கேடு இல் - அழிவில்லாத, உயர் கதிக்கு - உயர்ந்த வீட்டு நெறியின் கண்ணே, ஓட்டு - விரைந்து செல்லுஞ் செலவின்கண், தவ ஊர்ந்து நிற்கும் - மிகுதியாக மேற் பட்டு நிற்கும்; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறர்க்கொன்றை யீவது நன்று, பிறர்க் கீயாமை தீது, மேவாதாரோடு நல்லவராயிருப்பார் மேவி யொழுகுவதுவே நன்று, நன்னெறிக்கு வழியாகிய நூலி னையே கேட்டதன் கண்ணே நிற்க; கேடிலாத உயர்கதி யாகிய வீட்டுநெறியின்கண்ணே செல்லும் செலவின் கண்ணே நிற்க மேற்கொண்டு.

(க்-ரை.) ஈகை நன்று, ஈயாமை தீது, தம்மைச் சேராத வ ரோடும் நல்லவர்கள் ஒருவாறு சேர்ந்தார்போலிருப்பது நன்று,

நல்லனகேட்டு அவற்றுக்குத் தக ஒழுகுதல் அவ்வொழுக்கம் மேன் மேல் உயர்ந்து நற்பேற்றிற்கு மக்களைச் சேர்ப்பியாநிற்கும்.

மேவாதாரால் எதுக் தமக்குத் தீங்கு நேராமைப் பொருட்டு நல்லோர், 'மேவது நன்று', எனப்பட்டது. ஒட்டு - முதனிலைத் தொழிற்பெயர். தவ - மிகுதிப்பொருள்தரும் உரிச்சொல். மேவு - முதனிலைத்தொழிற்பெயர், அது என்னும் முதல் வேற் றுமைச் சொல்லுருபேற்று மேவது என வந்தது. அது சாரியை எனினுமாம்.

(கூ௪)

உண்ணிடத்து மொன்னார் மெலிவிடத்து மந்திரங்கொண்
டெண்ணிடத்துஞ் செல்லாமை நான்றலையே—யெண்ணி
யுரைப்பூசல் கோற லுயர்தவமேற் கங்கைக்
கரைப்பூசை போற்றக் கடை.

(ப-ரை.) உண் இடத்தும் - பிறர் உண்ணுமிடத்தும், ஒன் னார் - பகைவர், மெலிவு இடத்தும் - தளர்ந்த விடத்தும், மந்திரம் கொண்டு - மந்திராலோசனையை மேற்கொண்டு, எண் இடத்தும் - ஆலோசிக்குமிடத்தும், செல்லாமை - போகாமையே, தலை - தலை யாய ஒழுக்கமாம், எண்ணி - ஆராய்ந்து, உரை - சொல்லுஞ் சொல் லில், பூசல் - மாறுபடுதலும், உயர்தவம்மேல் - உயர்ந்த தவ வேடத்தை மேற்கொண்டகாலத்தில், கோறல் - ஒருயிரைக் கொன்று தின்னலும், போற்ற-ஆராயுமிடத்து, கங்கைக்கரை - கங் கைநதிக்கரையி லுட்கார்ந்திருக்கிற, பூசை - பூனைபோல, கடை - கடையாய ஒழுக்கமாம்; (எ-று.)

(ப-போ-ரை.) பிறருண்ணுமிடத்தும் பகைவராயி னார் தளர்ந்தவிடத்தும் பிறர் சூழ்ச்சிகொள்ளுமிடத்துஞ் செல்லாமையும், தாமொருவர்க்குத் தலைமையாகிய குணம் ஆராய்ந்து பிறரொடு மாறுபட்டுச் சொல்லுஞ் சொல்லின்றித் தமக்குள தாகப் பாதுகாத்தலைச் செய்தலும், மிக்க வறத்தை

மேற்கொண்ட காலத்துப் பிறவுயிரைக் கொன்று தின்கையும், காரணமாய்ந்தாற் றவவேடங் கொண்ட பூசையொத்தலாகிய கீழ்மையாம்.

(க-ரை.) பிறர் உண்ணு மிடத்திலும், பகைவர்கள் தளர்ச்சி யுடையவரா யிருக்குமிடத்திலும், மறைமொழிகள் கூறி ஏதோ ஆழ்ந்து நினைத்துக் கொண்டிருக்கு மிடத்திலும் செல்லலாகாது. ஆன்றோர் அறிவுரைகளுக்கு மாறுபடுதலும், உயிர்க்கொலை புரிதலும், உள்ளொன்று வைத்து மேலே தவக்கோலம் பூண்டிருக்கலுந் தீதாம்.

மந்திரம் ஈண்டு மறைவிற் பேசிக்கொள்ளும் பேச்சு. கங்கைக் கரையாகிய புண்ணிய இடத்தில் அமர்ந்து உயிர்க்கொலைகளைப் புரிந்துவரும் பூனைகளை ஒப்பக் கடையானவர்கள் மேலே தவக் கோலம்பூண்டு மறைவில் தீயன புரிந்தொழுகுவா ரென்பது ஈற்றடி களிற் கூறப்பட்டது. செல்லாமைதான் என்பதில் தான் அசை. தேற் றப்பொருளில் வந்ததெனினுமாம். "உரைப்பூசல் கோறல் எண்ணி மேல் உயர்தவம் போற்று" எனக் கூட்டுக. பூசல் போர், உரைப் பூசல்-உரையோடெதிர்த்தல், அது சொல்லுக்கு மாறுபட்டு நடத் தலை யுணர்த்திற்று. பூசை-பூனை. ([illegible])

பத்தினி சேவகன் பொத்தில் கடுந்தவசி
பொத்தில் பொருட்டிறத்துச் செவ்வியான்-பொத்தின்றி
வைத்தா ரதுவழக்குஞ் சான்றவர் தந்தெம்மை
செத்தா லறிக சிறந்து.

(ப-ரை.) பத்தினி - கற்புடையாளும், சேவகர் - சேவகரும், பொத்தில் - குற்றமில்லாத, கடுந்தவசி - அரிய தவத்தைச் செய் வோனும், பொத்து இல்-குற்றமில்லாத, பொருள் திறத்து-பொருட் டிறத்தில், செவ்வியான் - செவ்வியனாய்க் குற்றமில்லாதவனும், பொத்து இன்றி - குற்றமில்லாமல், வைத்தார் அதுவழக்கும் உரத

தாமை-பொருந்திய இருட்டிற்கு வருந்தாமையும், வாய்மை-மெய்ம் மையானது, குழிப்பு-தாழ்வு படுதலில், அடால் - பொருந்துதலும், மொழிப்பட்ட-(பெரியோர்) சொற்களிலடங்கிய நீதிகளை, காய்ந்து - சினந்து வெறுத்து, விடுதல்-விடுதலும், (ஆகிய ஐந்தையும்) ஆராய்ந்து-ஆராய்ந்து பார்த்து, களைந்து விடுதல்-நீக்கி விடுதல், அறம்-அறமாகும்; (எ-று.)

(ப-பொ-ரை.) பிறர்வழிச் செலவும், வாய்க்கும் காரியங்களை முயன்று வருந்தாமை, மெய்ம்மையல்லா நெறியின்கட் சேறல், பிறரைப் பழிகூறுஞ் சொற்கள், நல்லாரால் சொல்லப்பட்ட குணங் களைந்து நீக்குதலென இவ்வைந்தையுங் கற்றறிவார் களைந்து நீக்குதலறமாவது.

(க-ரை.) நல்வாழ்வடைய விரும்புகின்றவர்கள் தீச்சொற்கள் கூறுதலும், வழிப்பறிக் கொள்ளை செய்தலும், பிறர் பொருள் கவரலும், மெய்ம்மை தவறுதலும், அறிவுரைகளைக் கடத்தலும் ஆகா.

படர்-துன்பம், படால்-துன்பமாதல். வழியில் துன்பமாதலாவது ஆறலைத்தல். குழிப்பு-தாழ்தல். மொழிப்பட்ட - பலவின்பால் வினையாலணையும் பெயர். உய-உய்ய என்பதன் இடைக்குறை. உய்தலாவது பிறவித்துன்ப மொழிந்து வீடெய்தி என்றும் அழியா இன்பெய்திவாழ்தலாம். குழிப்படால் என்பதை குழிபடால் என்று பிரித்துத்தாழ்வில் செல்லுதல் என்றுங்கூறலாம். வழிப்படால் முதலியவற்றை ஆய்ந்து களைந்து விடுதல் அறம் எனக்கொண்டு கூட்டி முடிக்க.

(கூ எ)

## பாயிரம்.

மல்லிவர்தோண் மாக்காயன் மாணுக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினுற்-கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலஞ்செய் தான்.

(ப - ரை.) மல் இவர் தோள்-மற்போர் விரும்பும் தோள் வலிமையையுடைய, மாக்காயன் மாணுக்கன்-மாக்காயன் என்பவர் மாணுக்கராகிய, பஞ்சம் தீர்-வற்கடத்தைத் தீர்க்கின்ற, மழைக்கை-மழையைப் போலும் ஈகை யொழுக்கமுடைய, மா-சிறந்த, காரியாசான்-காரியாசான் என்பவர், மாநிலத்து-இப்பேருலகத்தில், பல்லவர் நோய் நீக்கும் பாங்கினுல் - மக்கள் பலருடைய அறியாமை நோயை நீக்குந் தகைமையால், கல்லா-அறிவுநூல்களை (அவர்கள்) கல்லாத, மறுதீர்-குற்றந்தீரும்படி, சிறுபஞ்ச மூலம்-சிறுபஞ்சமூலம் என்னும் இந்நூலை, செய்தான்-இயற்றினுரென்க; (எ-று.)

(க-ரை.) மாக்காயனுர் மாணுக்கராகிய காரியாசான் என்னுஞ் சான்றோர் மக்கள் அறியாமையுங் குற்றமும் நீங்கும்படி 'சிறுபஞ்ச மூலம்' என்னும் இந்நூலை யியற்றினுர் என்பது.

மாக்காயன் என்ற பெயரால் இவர் சிறந்த உடற்கூறமைந்தவர் என்பது விளங்கும். மழைக்கை என்றதனுல் கொடை வள்ளலுமாவர் என்க. தீர் என்பது தீபகமாகப் பஞ்சந்தீர் எனவும், மறுதீர் எனவும் இரண்டிடங்களிலுங் கூட்டப்பட்டது. இவர்தல் விரும்புதல். இப்பாயிரச் செய்யுள், ஆக்கியோர் காலத்தறிஞரால் செய்யப்பட்டதாகும்.

---

# சிறுபஞ்ச மூலம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி

# சிறுபஞ்சமூலம்

## அருஞ்சொல்லகராதி

(எண் - பக்க வெண்)

ஒய்வு - ஒய்தல், ௯௮
ஓர்த்து - அறிந்து உசா,
ஆராய்ந்து, ௭௩
ஓவாது - இடையறாமல், ௧௦௨
கடிந்தான் - ஒழித்தவன், ௩௫
கடுமை - கொலைத்
தொழில்வன்மை, ௮௮
கடைபோக வாழ்தல் -
முடிவுபோக வாழ்தல், ௮௫
கடைப்பிடித்தல் -
தெளிவாயறிதல், ௭௫
கட்டு - வரம்பு, ௭௭
கண்ட - செய்த, ௯௩
கண்டல் - தாழைமலர், ௧௮
கண்ணல் - நினைத்தல், ௯௫
கண்படல் - கண்பார்வை
செலல், ௮௫
கண்படு - கண்ணோடி, ௮௫
கண்மாறொண்ணாமை - கண்
ணோட்டஞ் செய்தல், ௫௮
கதம் - கோபம், ௨௨, ௫௯
கருதும் - நினைக்கும், ௫௧
கருமை - மனவிருள், ௨௭
கலிக்கண் - கலிகாலத்தில், ௭௩
கழிய - மிக, ௨௨
கழியினர் - விடுங்கள் ௩௧
கழுமல் - பற்றல், கலத்தல் ௨௭
[illegible] - [illegible] ௯௧
க[illegible]ர் - [illegible] நிலம் ௬௫
[illegible] - [illegible], ௧௦௯
[illegible] - [illegible]வு
[illegible]யாமை, ௨௪
[illegible] - [illegible], ௯
[illegible] [illegible]கின்ற, ௧[illegible]
கிளை - [illegible]வு, ௧௭

கிளைமை - நேயமுடைமை, ௩௦
கும்பம் - குடம், ௭௫
குழிப்பு - தாழ்வு, ௧௦௬
குன்று - மலை, ௭௧
கூழ் - மாவினாலாக்கப்படும்
உணவு, ௭௦
கூற்றம் - எமன், ௧௪
கெழீஇ - தழுவி, ௪௪
கைத்து - பொருள்-௫௭,
கைப்பொருள், ௯௫
கொடுங்கரி - பொய்ச்
சான்று, ௧௩
கொட்கும் - சுழன்று
திரிகின்ற, ௮௭
கொல்லல் - கெடுத்தல், ௫௪
கொழித்தல் - தெள்ளுதல்
ஆராய்தல், ௪௪
கோடல் - கொள்ளுதல், ௨௪
கோடாது - நாணுமல் ௭௬
கோடாமொழி - நடுநிலை
தவறாதசொல், ௯
கோடு - கொம்பு ௧௪,
மரக்கிளை, ௭௨
கோதை - மாலை, ௬௦
கோய் - கள் முகக்கும்
கலம், ௨௨
கோள் கூட்டம் - கோளின்
பொருத்தம், ௪௯
கோறல் - கொல்லுதல், ௧௭, ௧௦௩
சலித்தல் - வெறுத்தல், ௪௮
சார்ந்த - தழுவிய, ௭௯
சாலாமை நிரம்பாதிருத்தல், ௯௭
சால்பு - அமைதி, ௧௬
சான்றான் - அறிவானிறைந்த
பெரியோன், ௧௧

சிக்கர் - தலைநோயுடையார், அ௩
சிட்டன் - மேலானவன், ௯௪
சிதடர் - பித்துடையார், அ௩
சிதல் - கறையான், அ௩
சிதவலிப்பு - குறைவுபட்ட பிச்சை, ௭௦
சிந்தை - ஆராய்ச்சி, ௩௯
சிலம்பி - சிலந்திப் பூச்சி, க௪
சினை - கருவாகிய முட்டை, க௪
சீத்து - செதுக்கி, ௭௨
சுணங்கு - தேமல், ரு௪
சுவர்க்கம் - மேனுலகம், க௦௦
செயிர் நோய் - கோபத்தாலுண்டாகுந் துன்பம், ௩அ
செருக்கு - களிப்பு, ரு௬
சேரான் - நிலையான், ௪
சேரி - தெரு, ௯ரு
சேவகம் - வீரத்தொழில், க௬
ஞெண்டு - நண்டு. க௪
தகைமை - தன்மை, [illegible]
தக்கம் - பற்று, அ௪
தருக்கம் - அளவை நூல், ௯[illegible]
தவ - மிகுதி, க௦௨
தாவா - கெடாதிருக்க, ௨௭
தாழ்தல் - தாமதித்தல், ௯௪
தானம் - கொடை, ௪௨
திரு - திருமகள், ருக
துக்கர் - சயநோயுடையார், அ[illegible]
துணை - அளவு, [illegible]
துப்பு - வலி, [illegible]
துருநாமர் - மூலநோய் கொண்டார், அ
துளங்கா - அசைியாத, [illegible]
துற்று - உணவு, [illegible], அ[illegible]
துன்னி - நெருங்கி, [illegible]

தெற்ற - தெளிவாக, ருரு
தேறப்படும் - தெளியப்படும், ௬ரு
தேற்றுதார் - தெளியாதார், உ௯
தொக்க - கூடிய, ரு௮
தொங்கல் - மாலை, ரு௯
தொட்டு - தோண்டி, ௭௨
தொழுத்தை - அடிமைப் பெண், [illegible]
நகை - நகுதல், ௯[illegible]
நசை - விருப்பம், ரு[illegible]
நச்சான் - விரும்பாதவன், அ௯
நச்சினும் - விரும்பினும், [illegible]
நடை - ஒழுக்கம், ௯
நட்டான் - விரும்பியவன், [illegible]
நள்ளார் - நட்புக்கொள்ளார், அ௭
நற்பு நன்மை, ரு
நன்புலம் - விளைநிலம், [illegible]
நன்று - நன்மை, [illegible]
நாடாது - ஆராயாது, க௭
நாணம் - [illegible]
நாளு - [illegible]
நாளும் [illegible]
நிரயம் - [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

மேதை - அறிவுடையவன், உஎ
மேவாதவர் - பொருந்தா
தவர், க0உ
மை - குற்றம், க00
யாத்தல் - தொடுத்தல்,
சொல்லுதல், கூ௩
வஞ்சி - ஒருவகைக்கொடி, கூஎ
வசை - பழிமொழி, கச
வடக்கிருத்தல் - வடக்கு
நோக்கி யிருந்து
நோற்றல், அ0
வடு - குற்றம், எரு
வண்தார் - வளவியமாலை, ருகூ
வரைவு - மணஞ் செய்தல், அஎ
வலம் - வெற்றி, கச
வனப்பு - அழகு, கூ
வன்கண் - வீரம். கூ

வாரம் - அன்பு, கூ௩
வார்சான்ற - நீட்சி மிகுந்த, ருக
வால் உலண்டு - தூய உலண்டு
என்னும் புழு, ௩௨
விதி - முறை ௩௫
வெகுளி - கோபம் ௩அ
வெருட்டாமை - அச்சுறுத்
தாமை, அக
வெள்கு - நாணு, ௩0
வேட்பவன் - வேள்வி செய்
பவன், ௩அ
வேளாண்மை - உபகாரம், ௩௯
வேறல் - எதிர்த்து வெல்லு
தல், கஎ
வை - வைக்கோல், கூகூ
வௌவல்மின் - கவராதே
யுங்கள், ௩